547, 564 ; (ஒன்.பொ.பெ.) தண்டற் பொருள் 733 ; (ஒன்.பண்)= நடுவு நிலைமை 541 ; (சினை) = மணிக் கட்டு 1157 ; [இறைமை1—இறை10] { இறைமாட்சி } = வேந்தனது நற்குண நற்செய்கைகள் அதி. 39.

இறைக்கு [இறு1, ஐ2, க்5, கு12] (ஒன்.தொ.பெ.வரு. — ஆண்.பொ. பெ. 4ம் வே.) = வேந்தனுக்கு 432, 436.

இறைஞ்சினாள் [இறைஞ்சு1, இன்3, ஆள்2] (பெண்.இ.ற.வி.மு.)= தலைகவிழ்ந்தாள் 1093.

இறைப்பவர்க்கு [இறை1, ப்5, ப்3, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர். எதி.வி.அ.4ம்வே.)= நீர் இறைப்ப வர்களுக்கு 1161.

இறைவற்கு [இறு1, ஐ2, வ்3 அன்2,—அற்10, கு12] (ஆண்.தொ. பெ. வரு. 4ம் வே.)=(( இறு=வரி தண்டுதல், அதனையுடையவனுக்கு)) மன்னவனுக்கு 690, 733.

இறைவன் [இறு1, ஐ2, வ்3, அன்2] (ஆண். தொ. வரு. 6ம்வே. தொ.)=((இறு= தங்குதல், அதனை யுடையவரது)) கடவுளது 5, 10; ((இறு=வரி தண்டுதல், அதனை யுடையவன்)) மன்னன் 778.

இன் { இன் - சொல், முகம், உயிர், துணை } [இனிமை1—இன்10] (ப. தொ.)= இனிய, நல்ல 91, 92, 93, 94, 95, 98, 99, 224, 327, 387, 525. 875, 911, 953, 1198, 1209 ; (5ம்வே. உருபு.) நீங்கற் பொருளில்.—16, 97, 124, 136, 162, 170, 194, 258, 330, 341, 353, 495, 502, 716, 810, 955, 964, 1116, 1126, 1198; ஒப்புப் பொருளில்.—142, 159, 213, 230, 276, 277, 380. 526, 612, 707, 759, 781, 791, 834, 883, 906, 934, 965, 1021, 1039, 1041, 1063, 1066, 1103, 1137, 1198, 1323; உறழ் பொருவுப் பொருளில்.— 31, 32, 48, 54, 64, 68, 69, 92, 102, 103, 122, 124, 131, 143, 152, 160, 182, 183, 192, 202, 225, 229, 236, 250, 259, 295, 300, 302, 304, 353, 408, 444, 450, 460, 531, 551, 558, 603, 639, 644, 657, 679, 729, 811, 814, 815, 816, 817, 873, 907, 926, 967, 1038, 1065, 1072, 1074, 1111, 1158, 1166, 1169, 1201, 1277, 1289, 1290, 1314, 1326 ; ஏதுப் பொருளில் :—46, 136, 137, 164, 341, 468, 473, 477, 530, 703, 705, 725, 824, 825, 911, 915, 917, 975, 1106, 1140, 1290, 1311, 1322; சாரியை 6, 12, 736, 856, 1022, 1053, 1105, 1120, 1123, 1165, 1307 ; 'இன்' செய்யுள் விகாரத்தால் தொக்கவை.—911, 1282, 1326.

730 இன [இ1, ன்5, ன்4, அ2] (இ. சொ.—கு. பெ. எ.)= இப்பேர்ப்பட்ட 698 ; { இன நலம் } [இனம்1—இன10] (ஒன். பொ. பெ. 6ம்வே. தொ.)= சுற்றத்தினது ((நன்மை)) 457, 458, 459.

இனத்தன் [இனம்1, அத்து4, அன்2] (ஆண். பொ. பெ. வரு.)= சேர்க்கையுடையவன் 446.

இனத்தான் [இனம்1, அத்து4, ஆன்12] (ஒன்.பொ.பெ.3ம்வே.)= சுற்றத்தால் 453.

இனத்தின் [இனம்1, அத்து4, இன்12] (ஒன்.பொ.பெ.5ம்வே.)= இனத்தைவிட 460.

இனத்து { இனத்தியல்பு } [இனம்1, அத்து4] (ஒன்.பொ.பெ. 6ம்வே. தொ.) = இனத்தினது ((இயல்பு)) 452; { இனத்துளது } (7ம்வே. தொ.) = இனத்தின் கண் ((உள்ளது)) 454; { இனத்தாற்றி } = இனத்தின் மேல் ((ஆற்றி)) 568.

இனத்தோடு [இனம்1, அத்து4, ஒடு12] (ஒன்.பொ.பெ.3ம் வே.)= இனத்துடன் 462.

இனம் (ஒன்.பொ.பெ.)=குழு 306, 451, 455, 456, உற்றார் 822, சுற்றம் 884; { சிற்றினஞ் சேராமை } =தீய குழுவைப் பொருந்தாமை அதி. 46.

இனன் [இனம்1 — இனன்15] (ஒன். பொ. பெ.) = சுற்றம் 793; துணை 868; தோழியர் 1158.

இனி (இ. சொ. நிகழ். எதிர். இரண்டிலும் வரும்)= இப்பொழுது 1083, 1294.

இனிது [இனிமை1–இனி10, து2] (ஒன். கு. மு.)=நன்றானது 64, 66, 68, 181, 230, 772, 811, 839, 856, 865, 1103, 1108, 1145, 1176, 1196, 1201, 1202, 1215, 1309, 1326; (கு.மு.எ.) =நன்றானதாக 93, 648; (ஒன்.கு. அ.)= இன்பம் 99.

740 இனிய [இனிமை1 — இனி10, ய்7, அ2] (பல. கு. அ.)= இனிமையானவை 100, 987; (பல. கு.மு.)= இனியவை 1199; (பல.கு. மு. எ.) = இனிமையானவையாக 96, 824.

இனியது [இனிமை1—இனி10, ய்7, அ4, து2] (ஒன்.கு.அ.)= இன்பமானது 1065.

இனியவை [இனிமை1–இனி10, ய்7, அ4, வை2] (பல.பண்.வரு.)= விருப்பமானவை; { இனியவை கூறல் } = இனிய சொற்களைச் சொல்லுதல் அதி. 10.

இனியார் [இனிமை1—இனி10, ய்7, ஆர்2] (பலர்.பண்.வரு.) = காதலர் 1158.

இனை { இனைத்துணைத்து } [இ1, தனை14] (இ.சொ.சுட்டடுத்த 'தனை' என்னும் அளவுப்பெயரின் தகர வகரம் கெட்டுப்புணர்ந்தன)= இன்ன 87.

இனையர் [இ1, தனை14— இனை10, ய்7, அர்2] (பலர்.பண்.வரு.)= இத்துணையர் 790.

இன்கண் [இனிமை1—இன்10, கண்14] (பண்)= இன்பம் 1152.

இன்பத்துள் [இன்பு1, அத்து14, உள்12] (பண்.7ம்வே.)= மகிழ்ச்சியுள் 629, 854.

இன்பம் [இன்பு1, அம்2] (பண்.) = மகிழ்ச்சி 39, 65, 98, 156, 173, 228, 352, 369, 501, 615, 628, 629, 630, 669, 738, 754, 854, 869, 945, 1052, 1166, 1330.

இன்பு (பண்.)= மகிழ்ச்சி 75, 94, 399.

750 இன்மை [இல்1–இன்10, மை2] (எ.ம.பண்.)= இல்லாதிருத்தல், குறைவு 119, 320, 344, 364, 371, 513, 557, 577, 616, 618, 645, 738, 833, 841, 851, 903, 958, 979, 1019, 1209, 1276; வறுமை [× உடைமை] 89, 153, 616, 988, 1041, 1042, 1044, 1063; இல்லாமை 503; { மடியின்மை } அதி. 61.

இன்மையின் [இன்மை1, ய்7, இன்12] (எ.ம.பண்.5ம் வே.)= இல்லாமையைவிட 558; வறுமைபோல 1041.

இன்மையுள் [இன்மை1, ய்7, உள்12] (எ.ம.பண்.7ம்வே.)= வறுமையுள் 153; இல்லாமைகளுள் 841.

இன்றி [இன்மை1—இன்10, றி2] (எ.ம.கு.வி.எ.— அன்றி.ஒ.நோ.)= இல்லாமல் 112, 166, 171, 401, 523, 529, 566, 620, 682, 754, 789, 947, 961, 1042, 1069, 1253.

**இன்று** [இன்மை1—இன்10, று2] (ஒன்.கு.மு.) = இல்லை 83, 354, 740, 875, 904, 955, 966, 1090, 1252; [இன்மை1—இன்10, றி2—இன்று10] (கு.வி.எ. திரிந்தது) = இல்லாமல் 13, 20, 184, 764; (கால.) = இன்றைக்கு 336, 1048, 1133, 1262.

**இன்றேல்** [இன்மை1—இன்10, று2—ஏல்2] (எ.ம.கு.வி.எ.) = இல்லையாயின் = இல்லாவிடில் 556, 573, 575, 996, 1014, 1144.

**இன்னம்** [இ1, ன்5, ன்4, அம்2] (த. ப. கு. மு.) = நாம் இத்தன்மையோம் 790.

**இன்னா** [இனிமை1 — இன்10, ன்5, ஆ2] (எ.ம.பல.பண்.வரு.) = தீயவை = தீங்குகள் 109, 308, 311, 312, 314, 316, 318, 319, 852, 881, 894, 987, 1288; [இனிமை1—இன்10, ன்5, ஆ3, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.) தீய 35, 159, 163, 240, 564, 565, 824, 857; { இன்னா செய்யாமை } = தீய வற்றைச்செய்யாதிருத்தல் அதி. 32.

**இன்னாத** [இனிமை1—இன்10, ன்5, ஆ3, த்8, அ2] (எ.ம.பல.பண்.வரு.) = தீயவை 100, 313, 860, 881.

**760** **இன்னாதது** [இனிமை1—இன்10, ன்5, ஆ3, த்8, அ4, து2] (எ.ம.ஒன்.கு.அ.) = தீயது 230, 1041.

**இன்னாது** [இனிமை1—இன்10, ன்5, ஆ3, து2] (எ.ம.ஒன்.கு.மு.) = இனிதன்று = தீது 224, 229, 408, 558, 819, 923, 995, 1158, 1196.

**இன்னாமை** [இனிமை1–இன்10, ன்5, ஆ3, மை2] (எ.ம.பண்.) = தீங்கு 318, 630.

**இன்னான்** [இ1, ன்5, ன்4, ஆன்2] (சு.இ.சொ. — ஆண்.பொ.பெ.) = இப்படிப்பட்டவன் 453.

**இன்னும்** [இனி1, உம்16 — இன்னும்13] (இ.சொ.) = மற்றும், பின்னும் 1250; இவ்வெல்லையினும் 1263.

## ஈ

**ஈக** [ஈ1, க2] (விய.) = கொடுக்க 477; { வென்றீக } = வெல்வானாக 1268.

**ஈகலான்** [ஈ1, கு4, அல்3, ஆன்2] (எ. ம. ஆண். வி. மு.) = கொடுக்கமாட்டான் 863.

**ஈகை** [ஈ1, கை2] (தொ.பெ.) = கொடை 221, 382, 953; { ஈகை } = வறியவராய் ஏற்றார்க்கு மாறாது கொடுத்தல் அதி. 23.

**ஈட்டம்** [ஈண்டு1—ஈட்டு10, அம்2] (செயப்.தொ.பெ. 'அம்' செயப்படுபொருள் விகுதி) = செல்வம், பொருள்தேடுதல்எனினுமாம் 1003.

**ஈட்டல்** [ஈண்டு1—ஈட்டு10, அல்2] (பி.வி.தொ.பெ.) = ஒருவழித்தொகுத்தல் 385.

**770** **ஈட்டிய** [ஈண்டு1 — ஈட்டு10, இ3, ய்7, அ2] (பி.வி.இற.பெ.எ.) = தேடிய, திரட்டிய 1009.

**ஈண்டிய** [ஈண்டு1, இ3, ய்7, அ2] (செய்த.இற.பெ.எ.) = திரண்ட, பலவாற்றான்வந்துநிறைந்த 417.

**ஈண்டு** (சு.இ.—இட.) = இவ்வுலகில் 18, 213, 363; இப்பிறப்பில் 23, 265, 342, 356, 369.

**ஈதல்** [ஈ1, தல்2] (தொ.பெ.) = கொடுத்தல் 222, 223, 230, 842, 1006, 1054; (விய.) = கொடுக்க 231.

**ஈதலின்** [ஈ1, தல்2, இன்12] (தொ. பெ. 5ம்வே.) = கொடுத்தலைவிட 92.

ஈத்து [ஈ1, த்5, த்3, உ2 அல்லது ஈ1, த்5, ந்6, த்3, உ2 = ஈந்து — ஈத்து10] (செய்து. இற. வி. எ.) = கொடுத்து 228, 387, 800.

ஈந்தது [ஈ1, த்5, ந்6, த்3, அ4, து2] (ஒன்.இற.வி.மு.)=உதவியது 1142.

ஈயப்படும் [ஈ1, ய்7, அ4, ப்5, படு14, உம்2] (செயப்.எதி.வி.மு.)= இடப்படும் 412.

ஈயாது [ஈ1, ய்7, ஆ3, து2] (எ.ம. வி.எ.)=கொடுக்காமல் 1002.

ஈயும் { ஈயும்கண்ணன்னர் } [ஈ1, ய்7, உம்2] (செய்யும்.எதி.பெ. எ.) = கொடுக்கும் ((கண்போலச் சிறந்தார்)) 1061.

780 ஈர் { ஈர்ங்கண், ஈர்ங் கை } (ஈரம்1 ; ? ஈர்1 ((ம்5—ங்10)) ] (பண்.)=குளிர்ந்த ((இடம்)) 1058 ; ((உண்டுபூசிய))நனைந்த((கை))1077.

ஈரம் [ஈர்1, அம்2 ?] (பண்.)= அன்பு 91.

ஈரும் { ஈரும்வாளது } [ஈர்1, உம்2] (செய்யும்.நிக.பெ.எ)= அறுத் துச்செல்கின்ற ((வாளினது)) 334.

ஈவது [ஈ1, வ்3, அ4, து2] (எதி. தொ.பெ.)=கொடுப்பது 221.

ஈவர் [ஈ1, வ்3, அர்2] (பலர்.எதி. வி.மு.)=கொடுப்பர் 1035.

ஈவாரை [ஈ1, வ்3, ஆர்2, ஐ12] (பலர்.எதி.வி.அ.2ம்வே.) = கொடுப் பவரை 1057.

ஈவார்கண் [ஈ1,வ்3,ஆர்2,கண்12] (பலர்.எதி.வி.அ.7ம்வே)=கொடுப்ப வரிடத்தில் 1059.

ஈவார்மேல் [ஈ1, வ்3, ஆர்2, மேல்12] (பலர்.எதி.வி.அ.7ம்வே.)= கொடுப்பவர்மேல் 232.

ஈன் { ஈன்குழவி } (செயப்.வி. தொ.)=ஈனப்பட்ட= உண்டாக்கப் பட்ட 757.

ஈனும் [ஈன்1, உம்2] (செய்யும். எதி.வி.மு.)=பயக்கும்=தரும் 31, 74, 180, 754 ; { ஈனும்—செல்வம், வித்து } (செய்யும். எதி. பெ. எ.) = தரும் 311 ; விளைவிக்கும் 361.

790 ஈன்பது [ஈன்1, ப்3, அ4, து2] (எதி.தொ.பெ.)=பயப்பது165.

ஈன்ற [ஈன்1, ற்3, அ2] (செய்த. இற.பெ.எ.)=பெற்ற 69, 1047.

ஈன்றல் [ஈன்1, தல்2—றல்10] (தொ.பெ.)=பயத்தல் 99.

ஈன்றாள் [ஈன்1, ற்3, ஆள்2] (பெண்.இற.வி.அ.)=பெற்றவள் = தாய் 656, 923.

ஈன்று [ஈன்1, ற்3, உ2] (செய்து. இற. வி. எ.) = உண்டாக்கி, கொடுத்து 97.

## உ

உ { உப்பக்கம் } (சு. இ.) = புறம் 620.

உகாஅமை [உகு1,ஆ3,—ஆஅ11, மை2] (எ. ம. தொ. பெ.)=உமிழா மை = ((மறை)) வெளிப்படுத்தா மை 585.

உக்க [உகு1—உக்கு9, அ2](இற. பெ.எ.)=சிந்திய 720.

உக்கக்கால் [உகு1 — உக்கு9, அ4, க்5, கால்2] (செயின்.எதி.வி. எ.)=இறந்தபோது 1270.

உஞற்று (மு.தொ.பெ.)=முயற்சி 604, 607.

**800** உஞற்றுபவர் [×உஞற்றிலவர்; உஞற்று1, ப்3, அ4, வ்7, அர்2] (பலர்.எதி.வி.அ.)=((இடைவிடாது)) முயல்பவர் 620.

உஞற்றுபவர்க்கு [உஞற்றுபவர், க்5, கு12] (பலர்.எதி.வி.அ.4ம் வே.)=முயல்பவருக்கு 1024.

உடம்பாடு [உடன்1—உடம்15, படு14—பாடு10] (மு.தி.தொ.)=ஒப்புதல்=மனப்பொருத்தம் 890.

உடம்பின் [உடம்பு1, இன்12] (ஒன். பொ. பெ. 5ம்வே.) = உடலினின்றும் 330; [உடம்பு1, இன்4] (3ம்வே.தொ.)=உடம்புடன் 330.

உடம்பினகத்து [உடம்பு1, இன்4, அகம்12, அத்து4] (ஒன்.பொ. பெ. 7ம் வே.) = உடம்பின்கண்ணே 1163.

உடம்பினுள் [உடம்பு1, இன்4, உள்12] (ஒன். பொ. பெ. 7ம் வே. ஈண்டுபன்மை)=உடம்புகளுள் 340.

உடம்பு (ஒன். பொ. பெ.) = மேனி, யாக்கை 943, 1029, 1132; (பன்மை) = யாக்கைகள் 80, 345, 627.

உடம்பொடு [உடம்பு1, ஒடு12] (ஒன். பொ. பெ. 3ம் வே.) = உடம்புடன் 1122.

உடம்போடு [உடம்பு1, ஓடு12] (ஒன். பொ. பெ. 3ம் வே.) = உடம்புடன் 338.

உடல் (ஒன். பொ. பெ.) = உடம்பு 253.

**810** உடற்கு [உடல்1 — உடற்10, கு12] (ஒன். பொ. பெ. 4ம்வே.)=மெய்க்கு 65.

உடற்றுபவர் [உடல்1,-உடற்10, று2—உடற்று10, ப்3, அ4, வ்7, அர்2] (பலர். எதி. வி. அ.) = முடியாதாக நடிப்பவர் 818.

உடற்றும் [உடல்1 — உடற்10, று2 — உடற்று10, உம்] (பி. வி. செய்யும்.எதி.வி.மு.)=வருத்தும்13.

உடன் (இ.சொ.3ம் வே.சொல் உருபு)=ஒருங்கே, ஒடு 309, 589, 632, 890.

உடன்று [உடல்1 — உடன்10, ற்3, உ2] (செய்து. இற. வி. எ.) = வெகுண்டு 765.

உடுக்கை [உடு1, க்5,கை2] (தொ. பெ.-ஆகு.)=ஆடை 788.

உடுப்பது [உடு1, ப்5, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = உடுத்திக் கொள்வது 166, 1079.

உடை (1)[உடு1, ஐ2] (தொ. பெ. — 'ஐ' செயப்படுபொருள் விகுதி)=உடுக்கப்படுவது939, 1012; (2) [உடைமை1—உடை10, ய்7, அ2] (ஈ. கெ. கு. பெ. எ.) = உடைமையாகப்பூண்ட 62, 389, 415, 473, 907, 1010, 1034.

உடைக்கும் [உடை1, க்5, கு4, உம்2] (செய்யும்.எதி.வி.மு.)=முறிக்கும் 1251; { உடைக்கும் — கூன் கையர், படை } (எதி. பெ. எ.) = நெரிக்க1077; கெடுக்கும் 1258, 1324.

உடைத்தாயின் [உடைமை1,—உடை10, த்5, து2, ஆயின்2] (செயின். எதி.வி.எ.)=உடையதானால் 44, 45.

**820** உடைத்து [உடைமை1—உடை10, த்5, து2] (ஒன். கு. மு.)= உரிமையாகக்கொண்டது 48, 112, 126, 220, 221, 277, 336, 353, 398, 458, 459, 565, 578, 611, 624, 667,

746, 770, 780; 868, 907, 925, 1010, 1018, 1053, 1057, 1082, 1085, 1152, 1173, 1275, 1276, 1280, 1325.

உடைந்தது [உடை1, த்5, ந்6, த்3, அ4, து2] (ஒன்.இற.வி.மு)= அழிந்து விட்டது 1088.

உடைந்து [உடை1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = முறிந்து 1270.

உடைமை[× இன்மை; உடை1, மை2] (பண்.)= உரிமை 68, 74, 133, 154, 228, 344, 383, 558, 592, 681, 688, 838, 960, 991, 992, 1012, 1014; (தொ.பெ.)= உடையராதல் 641; { அன்புடைமை } அதி. 8. { அடக்கமுடைமை } அதி. 13. { ஒழுக்கமுடைமை } அதி. 14; { பொறையுடைமை } அதி.16; { அருளுடைமை } அதி. 25; { ஊக்கமுடைமை } அதி. 60; { ஆள்வினையுடைமை } அதி. 62; { அறிவுடைமை } அதி. 43; { பண்புடைமை } அதி. 100; { நாணுடைமை } அதி. 102.

உடைமையுள் [உடைமை1, ய்7, உள்12] (பண். 7ம் வே.) = பொருளுடைய காலத்தில் 89.

உடைய [உடைமை1—உடை10, ய்7, அ2] (கு. பெ. எ.)= பொருளை உரிமையாகக்கொண்ட 41, 975, 1299, 1300; (பல.கு.அ.)= உடையவை 200.

உடையது [உடைமை1 — உடை10, ய்7, அ4, து2] (ஒன்.கு.அ.) = உடைமையாகக்கொண்டது 384, 591, 742, 746, 1021.

உடையம் [உடைமை1 — உடை10, ய்7, அம்2] (த.ப.கு.மு.)= பெற்றுள்ளோம் 844.

உடையர்[உடைமை1—உடை10, ய்7, அர்2] (பலர்.கு.மு.)= பெற்றுள்ளார் 159, 1072; (பலர்.கு.அ.)= பெற்றுள்ளவர் 285, 393, 458, 591, 900.

உடையரேனும் [உடைமை1—உடை10, ய்7, அர்2, ஏனும்2] (கு.வி. எ.)= உடையராயினும் 430.

830 உடையவர் [உடைமை1—உடை10, ய்7, அ4, வ்7, அர்2] (பலர். கு. அ.) = உடையராயினவர் 975.

உடையவர்க்கு [உடைமை1 — உடை10, ய்7, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர்.கு.அ.4ம்வே.)= பெற்றுள்ளவருக்கு 139.

உடையவன் [உடைமை1 — உடை10, ய்7, அ4, வ்7, அன்2] (ஆண். கு. அ.) = பெற்றுள்ளவன் 112.

உடையள் [உடைமை1 — உடை10, ய்7, அள்2] (பெண்.கு.அ.) = உடையவள் 51.

உடையன் [உடைமை1— உடை10, ய்7, அன்2] (ஆண்.கு.அ.) = உடையவன் 95.

உடையாட்கு [உடைமை1— உடை10, ய்7, ஆள்2—ஆட்10, கு12] (பெண். கு. அ. 4ம்வே.) = உடையளாயவளுக்கு 1089.

உடையார் [உடைமை1 — உடை10, ய்7, ஆர்2] (பலர்.கு.அ.)= உடைமையாகக்கொண்டவர் 72, 178, 195, 404, 413, 415, 427, 430, 441, 463, 526, 577, 593, 606, 816, 970, 994, 996; (பலர். கு. மு.)= உடைமையாகக்கொண்டார் 430; (பலர்.பொ.பெ.)= செல்வர் 395.

உடையார்கண் [உடைமை1—உடை10, ய்7, ஆர்2, கண்12] (பலர். கு. அ. 7ம் வே.) = உடையாரிடத்தில் 1153.

உடையார்க்கு [உடைமை1—உடை10, ய்7, ஆர்2, க்5, கு12] (பலர். கு. அ. 4ம் வே.) = உடையவருக்கு 165, 262, 534, 636, 910.

உடையார்முன் [உடைமை1—உடை10, ய்7, ஆர்2, முன்12] (பலர். கு. அ. 7ம் வே.) = உடையார் ((அவைக்)) கண் 718.

**840** உடையாளர் உடைமை1—உடை10, ய்7, ஆள்14, அர்2] (பலர்.கு.அ.)=உடைய மக்கள் 783.

உடையாளன் [உடைமை1—உடை10, ய்7, ஆள்14, அன்2] (ஆண். கு.அ.)=உடைய அரசன் 874.

உடையான் [உடைமை1 — உடை10, ய்7, ஆன்2] (ஆண்.கு.அ.) =உடைமையாகக் கொண்டவன் 219, 381, 390, 486, 502, 513, 519, 594, 622, 684.

உடையானை [உடைமை1 — உடை10, ய்7, ஆன்2, ஐ12] (ஆண். கு. அ. 2ம்வே.) = உரிமை பூண்டவனை 167.

உடையான்கண் [உடைமை1—உடை10, ய்7, ஆன்2, கண்12] (ஆண். கு. அ. 7ம் வே.) = உரிமைபூண்டவனிடத்தில் 135, 216, 223.

உடையேம் [உடைமை1 — உடை10, ய்7, ஏம்2] (த.ப.கு.மு.)= அடைந்துள்ளோம் 1250.

உடையேன் [உடைமை1 — உடை10, ய்7, ஏன்2] (த.ஒ.கு.மு.)= உடைத்தாயிருக்கிறேன் 1133; (த. ஒ. கு. அ.) = உடைத்தாயிருக்கிற நான் 1254.

உட்சப்படாஅர் [உட்கு1, அ4, ப்5, படு14, ஆ3, ஆர்2 — ஆஅர்11] (செயப். எ. ம. பலர். எதி. வி. மு.)= அஞ்சப்படார் 921.

உட்கும் {உட்கும் என்பீடு} [உட்கு1, உம்2] (செய்யும்.எதி.பெ. எ.)= அஞ்சுதற்கேதுவாகிய((எனது வலி)) 1088.

உண் {உண்கண்} (வி. தொ.) =((மை)) யுண்ட ((கண்)) 1091, 1113, 1172, 1174, 1212, 1271.

**850** உணக்கின் [உணங்கு1—உணக்கு10, இன்2] (செயின்.எதி.வி. எ.)= காயவிட்டால் 1037.

உணங்க [உணங்கு1 — அ2] (செய. நிக. வி. எ.)= மெலியாநிற்கவும் 1310.

உணர [உணர்1, அ2] (செய. எதி.வி.எ.)= அறியும்வண்ணம் 650.

உணரப்படும் [உணர்1, அ4, ப்5, படு14, உம்2] (தே. தொ; செயப். செய்யும். எதி. வி. மு.) = அறியப்படும் 575, 826, 1096.

உணரல் {உணரற்பாற்று} [உணர்1, அல்2] (தொ.பெ.)= தெரிதல் 11.

உணரா [உணர்1, ஆ3, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.)= தெரியாத 420; [உணர்1, ஆ3, மல்2] (ஈ.கெ.எ.மீ. வி.எ.)= அறியாமல் 1172; [உணர்1, ஆ2] (எ. ம. பல. வி. மு.)= தெரியமாட்டா 705.

உணராமை [உணர்1, ஆ3, மை2] (எ. ம. வி. எ.)= அறியாமல் 589; (எ. ம. தொ. பெ.) = ஊடலுணர்த்திக் கூடாதொழில் 1304.

உணராய் [உணர்1, ஆ3, ஆய்2] (எ.ம.முன்.ஒ.வி.மு.)=((புலவி))நீங்க மாட்டாய் 1246.

உணரின் [உணர்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = தெரிந்து கொண்டால் 357.

உணரும் { உணரும்—புல்லறி வாண்மை, மருளான் } [உணர்1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.)= கருதும் 331 ; அறியும் ((விபரீத உணர்வால்)) 351.

**860** உணர்க [உணர்1, க2] (விய.)=தெரிக 805.

உணர்ச்சி [உணர்1, ச்5, சி2] (பண்.) = பொது உணர்வு 453 ; ((இருவர்க்கும்)) ஒத்தவுணர்வு 785.

உணர்ச்சியுள் [உணர்1, ச்5, சி2, ய்7, உள்12] (பண். 7ம்வே ; காரிய ஆகு.)=மனத்தின்கண் 976.

உணர்தல் [உணர்1, தல்2] (தொ. பெ.)=ஊடல்நீங்கல் 1109 ; { மெய் யுணர்தல் } அதி. 36.

உணர்த்தின் [உணர்1 — உணர்த்து12, இன்2] (பி.வி.செயின். எதி. வி. மு.) = ((பணிந்து)) ஊடல் தணிப்பின் 1319.

உணர்த்தும் { உணர்த்துங் காதலர் } [உணர்1 — உணர்த்து10, உம்2] (பி.வி.செய்யும்.எதி.பெ.எ.) ((கலவியால்)) புலவியை நீக்கும் ((காதலர்)) 1246.

உணர்ந்த [உணர்1, த்5, ந்6, த்3, அ2] (பல. இற. வி. மு.) = அறிந் தன 1277.

உணர்ந்தவை [உணர்1, த்5, ந்6, த்3, அ4, வை2] (பல.இற.வி.அ.) = அறிந்தவை 316.

உணர்ந்து [உணர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=தெரிந்து 359, 417, 516, 712, 834, 1046.

உணர்வது [உணர்1, வ்3, அ4, து2] (எதி. தொ. பெ. 2ம்வே. தொ.) = ((தாமே உணர வல்ல)) அறி வினை 718.

**870** உணர்வார் [உணர்1, வ்3, ஆர்2] (பலர்.எதி.வி.அ.)= அறிவார் 257, 334, 708, 709, 716.

உணர்வாரை [உணர்1, வ்3, ஆர்2, ஐ12] (பலர்.எதி.வி.அ.2ம்வே.) = அறிவாரை 703.

உணர்வானை [உணர்1, வ்3, ஆன்2, ஐ12] (ஆண்.எதி.வி.அ.2ம் வே.)= அறிபவனை 702.

உணர்வின் [உணர்1, வ்3, உ2, இன்4] (தொ.பெ.6ம்வே.தொ.)= அறிவினையுடைய 420.

உணர்வு [உணர்1, வ்3, உ2] (தொ.பெ.)= அறிவு 354.

உணல் [உண்1, அல்2] (தொ. பெ.)=உண்ணுதல் 229.

உணலின் [உண்1,அல்2,இன்12] (தொ.பெ.5ம்வே.)=உண்ணுவதை விட 1326.

உணவு [உண்1, அ4, வ்7, உ2] (தொ. பெ. வரு. பொ. பெ.) = சாப்பாடு 412.

உணவின் [உண்1, அ4, வ்7, உ2, இன்4] (தொ. பெ. வரு. பொ. பெ. 'இன்' சாரியை அல்வழிக்கண் வந்தது)=உணவு 413.

உணி { ஊருணி } [உண்1, இ2] (செயப். தொ. பெ. வரு. இட. 'இ' செயப்படுபொருள் விகுதி=((ஊரா ரால்)) உண்ணப்படுவது= குளம் 215.

880 **உணில்** [உண்1, இல்2] (செயின். எதி. வி. எ.) = உண்பதானல் 922.

**உணின்** [உண்1, இன்2] (செயின்.எதி.வி.எ) = உண்டால்942.

**உண்க** [உண்1, க2] (விய.)= உண்ணுக, அயில்க 922, 943.

**உண்ட** [உண்1, ட்3, அ2] (செய்த.இற.பெ.எ.)= அயின்ற930.

**உண்டது** [உண்1, ட்3, அ4, து2] (செயப். ஒன். இற. வி. அ.)=உண்ணப்பட்டது 1326.

**உண்டல்** [உண்1, தல்2—டல்10] (தொ. பெ.) = உண்ணுதல் 82, 1128, 1145.

**உண்டாயின்** [உண்டு1, ஆயின்2] (செயின். எதி.வி.எ.)= உண்டானல் 128, 1005.

**உண்டார்** [உண்1, ட்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = உண்டவர்கள் 253.

**உண்டார்கண்** [உண்1,ட்3,ஆர்2, கண்12] (பலர்.இற.வி.அ.7ம்வே.)= உண்டவரிடத்தில் 1090.

**உண்டி** [உண்1, ட்8, இ2] (செயப். பொ. பெ. 'இ' செயப்படுபொருள்விகுதி)=உணவு 945.

890 **உண்டு** [× இல்லை] (கு. வி. மு. ஐம்பால் மூவிடப்பொது)= உளது 54, 71, 89, 110, 190, 315, 342, 469, 571, 707, 757, 758, 796, 850, 896, 932, 974, 988, 996, 1059, 1075, 1098, 1117, 1154, 1164, 1213, 1214, 1245, 1260, 1273, 1274, 1281, 1307, 1323; உண்டாயிராநின்றது 1271; [உண்1, ட்3, உ2] செய்து.இற.வி.எ.)= அயின்று 324, 580, 1033, 1101, 1107.

**உண்டேல்** [உண்டு1, ஏல்2] (செயின். எதி. வி. எ.)= இருப்பின் 368, 1075, 1151.

**உண்ண** [உண்1, ண்5, அ2] (செய.எதி.வி.எ.)= தின்ன 255.

**உண்ணலின்** [உண்1, ண்5, அல்2, இன்12] (தொ.பெ.5ம்வே.)= உண்ணுதற்கு ((மேல்)) 1065.

**உண்ணற்க** [உண்1, ண்5, அல்3, —அற்10, க2] (எ.ம.விய.)= அருந்தாதொழிக 922.

**உண்ணா** [உண்1, ண்5, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)= அயிலாத 930.

**உண்ணாது** [உண்1, ண்5, ஆ3, து2] (எ. ம. வி. எ.) = ஊணைத் தவிர்ந்து 160.

**உண்ணாமை** [உண்1, ண்5, ஆ3, மை2] (எ.ம. தொ. பெ.)=உண்ணாதிருத்தல் 255, 257, 259; { கள்ளுண்ணாமை } அதி. 93.

**உண்ணார்** [உண்1, ண்5, ஆ3, ஆர்2] (எ.ம.பலர்.வி.மு.)=உண்ணமாட்டார் 258.

**உண்ணான்** [உண்1, ண்5, ஆ3, ஆன்2] (எ.ம. ஆண். வி. அ.)= நுகராதவன் 1001.

900 **உண்ணின்** [உண்1, ண்5, இன்2] (செயின்.எதி.வி.எ.)= உண்டால் 945, 947.

**உண்ணும்** [உண்1, ண்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.)= தின்னும் 527; { உண்ணும்—கூற்று, தோற்றத்தான், வேலை } (செய்யும்.எதி. பெ.எ.) ((உயிரை)) கவரும், போக்கும் 326, 1084, 1221.

உண்பது [உண்1, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.)=(செயப்.) உண்ணப்படுவது 166 ; உண்டல் 1079.

உண்பர் [உண்1, ப்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = துய்ப்பர் = நோக்குவர் 1311.

உண்பவர் [உண்1, ப்3, அ4, வ்7, அர்2] (பலர்.எதி.வி.அ.)=பருகுப வர் 926.

உண்பார் [உண்1, ப்3, ஆர்2] (பலர்.எதி.வி.அ.)=பருகுபவர் 926.

உண்பான் [உண்1, ப்3, ஆன்2] (ஆண்.எதி.வி.அ.) = தின்பவன் 251.

உண்பான்கண் [உண்1, ப்3, ஆன்2, கண்12] (ஆண்.எதி.வி.அ. 7ம்வே.)=தின்பவனிடத்தில் 946.

உண்மை [உள்1, — உண்10, மை2] (பண்.)=உள்ளதாந்தன்மை { உண்மையறிவு } = ஊழானாகிய பேதைமை ((யறிவு)) 373 ; உளராதல் 572 ; உள்ளதன்மை 1212.

உண்மையான் [உள்1–உண்10, மை2, ய்7, ஆன்12] (பண்.3ம்வே.)= உண்டாகலான் 571 ; உளராதற்றன்மையால் 1055 ; நிகழ்தலால் 1153.

**910** உதவி [உதவு1, இ2] (தொ.பெ.)=நன்றி 70, 103, 105.

உதவிக்கு [உதவு1, இ2, க்5, கு12] (தொ.பெ.4ம்வே.)=நன்றிக்கு 101.

உதவும் { உதவும் நல்லாள் } [உதவு1, உம்2] (செய்யும்.எதி.பெ. எ.) = உதவிக்காக்கும் ((நல்ல வீரமை)) 746.

உப்பிற்கு [உப்பு1,இன்4,–இற்10, கு12] (ஒன். பொ. பெ. 4ம்வே.) = உப்புக்கு 1050.

உப்பு (ஒன்.பொ.பெ.ஆகு.)= சுவை, இனிமை 802, 1328 ; (ஒன். பொ.பெ.)=உப்பு 1302.

உம் (இ.சொ.) அசைநிலையும்மை 110, 896, 932, 1050, 1075, 1146, 1164, 1327 ; இழிவுசிறப்பும்மை 29, 102, 104, 109, 110, 128, 144, 150, 157, 188, 19 , 202, 204, 207, 222, 241, 282, 292, 312, 337, 376, 395, 403, 409, 412, 414, 416, 417, 423, 433, 448, 478, 493, 499, 514, 521, 586, 619, 638, 654, 659, 690, 736, 768, 778, 794, 796, 799, 800, 807, 820, 825, 843, 852, 867, 873, 889, 896, 923, 955, 973, 987, 995, 998, 1031, 1037, 1038, 1053, 1062, 1064, 1065, 1066, 1096, 1100, 1127, 1199, 1201, 1207, 1208, 1241, 1252, 1271, 1282, 1283, 1288, 1290, 1291, 1292, 1313, 1319, 1320, 1321, 13 2, 1325 ; செய்யுள் விகாரத்தால் தொக்கவை 16, 132, 290, 314, 360, 408, 751, 762, 810, 965, 969, 1160, 1198, 1202, 1257 ; இறந்தது தழீஇய எச்சவும்மை.—12, 31, 49, 76, 132, 17 , 203, 205, 230, 262, 302, 304, 311, 313, 332, 344, 363, 373, 374, 375, 380, 397, 421, 457, 459, 466, 496, 504, 527, 540, 546, 577, 588, 603, 643, 713, 719, 754, 819, 881, 901, 928, 931, 974, 986, 999, 1048, 1069, 1073, 1136, 1158, 1162, 1167, 1204, 1215, 1261, 1278, 1279, 1309 ; செய்யுள் விகாரத்தால் தொக்கவை.—32, 112, 224, 306, 312, 463, 763, 985, 990, 1138, 1150, 1195, 1222, 1262, 1318. உயர்வுசிறப்பும்மை.—17, 18, 20, 52, 64, 71, 72, 82, 85, 124, 131, 140, 144, 152, 222, 269, 328, 345, 354, 355, 373, 377, 409, 418, 430, 458, 468, 469, 475, 484, 492, 503, 579, 580, 599, 620, 625, 637, 650, 669, 703, 715, 728, 730, 740, 748, 750, 765, 770, 790, 811, 823, 828,

845, 871, 887, 899, 900, 931, 954, 961, 962, 965, 973, 977, 989, 995, 997, 1005, 1036, 1038, 1044, 1046, 1047, 1054, 1061, 1088, 1111, 1137, 115?, 1201, 1277, 1282, 1289, 1297, 1309, 1314, 1326; செய்யுள் விகாரத்தால் தொக்கவை:—187, 290, 346, 430, 467, 591, 815, 1194, 1305. 1307. எண்ணும்மை:—15. 42, 45, 98, 101, 115, 166, 169, 170, 213, 235, 264, 280, 304, 385, 420, 425, 431, 432, 460, 461, 471, 499, 505, 510, 511, 525, 543, 545, 554, 567, 581, 631, 633, 634, 642, 644, 676, 694, 707, 709, 731, 734, 735, 737, 741, 742, 747, 755, 756, 768, 769, 793, 812, 813, 834, 856, 876, 881, 897, 909, 920, 935, 937, 941, 949, 951, 952, 1005, 1015, 1022, 1042, 1043, 1050, 1079, 1089, 1097, 1116, 1120, 1132, 1163, 1133, 1197, 1281, 1306; செய்யுள் விகாரத்தால் தொக்கவை:—4, 19, 35, 141, 681. 682, 881, 1012; உம்மைத் தொகை.—609,933. எதிரது தழீஇய எச்சவும்மை :—32, 120, 127, 218, 242, 337, 345, 369, 404, 588, 650, 697, 806, 848, 1038, 1048, 1060, 1162, 1215; எதிர்மறையும்மை:—113, 134, 165, 181, 184, 197, 308, 327, 596, 656, 658, 826, 872, 932, 1049; முற்றும்மை.—5, 19, 24, 30, 35, 41, 44, 62, 83, 94, 107, 125, 126, 138, 145, 146, 152, 156, 162, 175, 186, 191, 209, 256, 260, 271, 275, 281, 291, 296, 299, 300, 303, 317, 324, 361, 381, 382, 383, 390, 392, 398, 402, 438, 439, 455, 462, 491, 492, 509, 513, 522, 533, 536, 538, 541, 553, 581, 582, 584, 585, 605, 606, 618, 635, 641, 643 647, 652, 684, 675, 693, 697, 701, 746, 752, 760, 801, 833, 835, 842, 848, 851, 864, 870, 884, 885, 886, 895, 903, 905, 910, 921, 926, 927, 939, 952, 953, 960, 972. 978, 982, 991, 992, 1034, 1049, 1085, 1101, 1110, 1130, 1139, 1145, 1196, 1311, 1320; செய்யுள் விகாரத்தால் தொக்கவை:—6, 25, 43, 126, 127, 224, 322, 430, 738, 941, 1108, 1141, 1247.

உயர் [உயர் தோற்றம்] (வி. தொ.)=உயர்ந்த 272.

உயர்ந்த [உயர்1, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இ.ற.பெ.எ.)=ஓங்கிய 233, எய்தற்கரிய 346.

உயர்ந்து [உயர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இ.ற.வி.எ.)=ஓங்கி 957.

உயர்வு [உயர்1, வ்3, உ2] (தொ. பெ.)=உயர்ச்சி 135, 595, 596, 743; பணியாமை 963.

**920** உயல் [உயற்பாலது] (உய்1, அல்2] (தொ.பெ.)=ஒழிதல் 40; உளதாதல் 437; தப்புதல் 1174, 1212.

உயிர் (ஒன்.பொ.பெ.)=ஆன்மா 78, 80, 183, 214, 244, 255, 259, 260, 268, 290, 322, 326, 327, 330, 334 501, 778, 848, 940, 969, 1013, 1017, 1020, 1062, 1070, 1084, 1106, 1132, 1141, 1163, 1168, 1209, 1213, 1221, 1230, 1298.

உயிரார் [உயிர்1, ஆர்2] (பலர். பொ.பெ.)=உயிரையுடையவர் 777.

உயிரிடை [உயிர்1, இடை12] (ஒன். பொ. பெ. 7ம்வே.) = உயிரினிடத்தில் 338, 1122.

உயிரின் [உயிர்1, இன்12] (ஒன். பொ.பெ.5ம்வே.)=உயிரைக்காட்டிலும் 131; உயிரினின்றும் 258.

உயிரை [உயிர்1, ஐ12] (ஒன். பொ.பெ.2ம்வே.)=உயிரை 1017.

**உயிர்க்கு** [உயிர்1, க்5, கு12] (ஒன்.பொ.பெ.4ம் வே.)=உயிருக்கு 30, 31, 68, 73, 122, 190, 231, 261, 318, 340, 361, 392, 457, 476, 557, 851, 943, 972, 1012, 1124.

**உயிர்த்து** [உயிர்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=((மூக்கால்)) மோந்து 1101.

**உயிர்ப்ப** [உயிர்1, ப்5, ப்3, அ2] (செய. எதி. வி. எ.) = மூச்சுவிட 763, 880.

**உய்க்கிற்பின்** [உய்1, க்5, கில்3, —கிற்10, பின்2] (செயின்.எதி.வி. எ.)=துய்க்கவல்லனையின் 440.

**930** **உய்க்கும்** [உய்1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. வி. மு.)= செலுத்தும் 121, 1134; { உய்க்கும் ஆறு } (செய்யும். எதி. பெ. எ.)= கொண்டுசெலுத்தும் ((நெறி)) 943.

**உய்த்தல்** [உய்1, த்5, தல்2] (தொ. பெ.) = ஈர்த்துப்போதல்= இழுத்துக்கொண்டுபோதல் 1287.

**உய்த்து** [உய்1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=செலுத்தி787; கொண்டுபோய் 376, 1076.

**உய்த்துவிடும்** [உய்1, த்5, து4, விடு14, உம்2] (ஒருசொல்-செய்யும். எதி.வி.மு.)=திண்ணமாகச் செலுத்தும் 121, 168.

**உய்ப்பது** [உய்1, ப்5, ப்3, அ4, து2] (ஒன். எதி. வி. அ.) = செலுத்துவது 422.

**உய்யா** [உய்1, ய்5, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)=கடக்கமுடியாத 313.

**உய்யாது** [உய்1, ய்5, ஆ3, து2] (எ.ம.ஒன்.வி.மு)=செலுத்தாது966.

**உய்யார்** [உய்1, ய்5, ஆ3, ஆர்2] (எ.ம.பலர்.வி.மு.)=தப்பமாட்டார் 896, 900.

**உய்வர்** [உய்1, வ்3, அர்2] (பலர். எதி.வி.மு.)=தப்புவர் 207,

**உய்வு** [உய்1, வ்3, உ2] (தொ. பெ.) = ((தீவினையின்)) நீங்கும் வாயில் 110; தப்புதல் 896; ஒழிவு 1174.

**940** **உரம்** (பண்.)=திண்ணிய அறிவு 600; வலிமை 888.

**உரவோர்** [உரம்1—உர10, வ்3, ஆர்2—ஓர்10] (பலர். பண். வரு.)= ((நெஞ்சத்)) திண்மையுடையவர் 136; ஊக்கமுடையவர் 597.

**உரன்** [உரம்1—உரன்15] (பண்.) =திண்மை24; (பண்.ஆகு.) வேறல் =வெல்லுதல் 1263.

**உரிமை** [உரி1, மை2] (பண்.)= உரியனாந்தன்மை 518, 578.

**உரியர்** [உரிமை1—உரி10, ய்7, அர்2] (பலர்.கு.மு.)=உரிமையுடையார் 72, 1080.

**உரியன்** [உரிமை1—உரி10, ய்7, அன்2] (ஆண்.கு.அ.)=எற்றகிலையினன் 518.

**உரியார்** [உரிமை1—உரி10, ய்7, ஆர்2] (பலர்.பண்.வரு.)=உரிமையுடையவர் 149.

**உரியாள்** [உரிமை1—உரி10, ய்7, ஆள்2] (பெண்.பண்.வரு.)=((ஒருவனுக்குப்பொருளாம்)) உரிமையுடையவள் 149.

**உரு** (பண்.)=வடிவு 261; தோற்றப்பொலிவு 684.

**உருகும்** [உருகு1, உம்2] (ஒன். எதி.வி.மு.)=கனிந்திளகும் 1069.

**950** உருவம் [உரு1, வ்3, அம்2] (பண்.)=தோற்றம் 273.

உருவு [உரு1, வ்7, உ2] (பண்.)= வடிவின் சிறுமை 667.

உருவொடு [உருவ்1, ஒடு12,] (பண். 3ம் வே.)=வடிவுடன் 585.

உருள் { உருள் பெருந்தேர், உருளாயம் } (வி. தொ.) = சுழல்கின்ற 667 ; புரள்கின்ற 933.

உரை (ஏ. ஒ.)=நீ சொல் 1151 ; (மு. தொ.)=ஒரு சொல் 193; புகழ் 581.

உரைக்கல் [உரை1, க்5, கு4, அல்2] (தொ. பெ.) = சொல்லுதல் 1271.

உரைக்கலான் [உரைக்கல், ஆன்12] (தொ. பெ. 3ம் வே.)= சொல்லுதலால் 1076.

உரைக்கு { உரைக்கோ } [உரை1, க்5, கு2] (த.ஒ.எதி.வி.மு.)=சொல்லுவேன் 1181..

உரைக்கும் { உரைக்கும்-உரை, இன்சொல், பண்பு, வன்கண்ணர் } [உரை1, க்5, கு4, உம்2] (செய்யும்.எதி.பெ.எ.)=சொல்லும் 193, 564, 912 ; உணர்த்தும் 1156 ; (ஒன். எதி. வி. மு.) = சொல்லும் 709, 743, 1235.

உரைத்தல் [உரை1, த்5, தல்2] (தொ. பெ.)=சொல்லுதல் 1162 ; { நலம்புனைந்துரைத்தல் } அதி.112; { காதற்சிறப்புரைத்தல் } அதி.113; { நாணுத்துறவுரைத்தல் } அதி.114; { கனவுநிலையுரைத்தல் } அதி.122.

**960** உரைத்து [உரை1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = சொல்லி 834, 1237.

உரைப்பது [உரை1, ப்5 ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = சொல்லல் 1184.

உரைப்பவை [உரை1, ப்5, ப்3, அ4, வை2] (பல.எதி.வி.அ.)=சொல்பவை 232.

உரைப்பாய் [உரை1, ப்5, ப்3, ஆய்2] (முன். ஒ. எதி. வி. அ.) = சொல்லத்தொடங்குவாய் 1200.

உரைப்பார் [உரை1, ப்5, ப்3, ஆர்2] (பலர்.எதி.வி.அ.)=சொல்லுபவர் 232.

உரைப்பார்க்கு [உரை1, ப்5, ப்3, ஆர்2, க்5, கு12] (பலர்.எதி.வி.அ. 4ம்வே.)=சொல்லுபவர்க்கு 682.

உரைப்பான் [உரை1, ப்5, ப்3, ஆன்2] (ஆண்.எதி.வி.அ.)=சொல்லுபவன் 189, 681, 683, 687, 688, 689.

உரையாதார் [உரை1, ய்7, ஆ3, த்8, ஆர்2] (எ. ம. பலர். வி. அ.)= உரைக்கமாட்டாதவர் 650.

உரையாமை [உரை1, ய்7, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.) = சொல்லாதிருத்தல் 223.

உலகத்தார் [உலகு1, அத்து4, ஆர்2] (பலர். இட. வரு.)=உலகத்திலுள்ள பெரியோர் 294, 850.

**970** உலகத்தார்க்கு [உலகு1, அத்து4, ஆர்2, க்5, கு12] (பலர்.இட. வரு.4ம்வே.)=உலகோருக்கு 1032.

உலகத்து [உலகு1, அத்து4] (இட. 7ம் வே. தொ.) = உலகத்தில் 213, 233, 374, 533, 598, 1198 ; (6ம் வே.தொ.)=உலகத்தினது 637.

உலகத்துள் [உலகு1, அத்து4, உள்12] (இட. 7ம் வே.) = உலகத்தில் 13.

**உலகத்தோடு** [உலகு1, அத்து4, ஓடு12] (இட. 3ம் வே.) = உலகத்துடன் 140, 426.

**உலகம்** [உலகு1, அம்4] (இட.) = நிலவுலகம் 11, 19; (ஆகு.) = உலகியல் 996; உலகம் ((பொதுவில்)) 222, 243, 247, 346; (இட. ஆகு.) = உயர்மக்கள் 117, 1031; உயர்ந்தோர் 280, 425, 426.

**உலகு** (இட.) நிலவுலகம் 1, 20, 23, 27, 58, 211, 234, 290, 336, 387, 389, 520, 542, 544, 571, 572, 578, 612, 874, 1062; முத்தியுலகம் 1103; (இட. ஆகு.) = உலக நடை 215; மக்கள் 256, 399, 470, 670, 809, 841, 970, 994, 1015, 1025.

**உலந்த** [உலி1, த்5, ந்6, த்3, அ2] (பல. இற. வி. மு.) = வற்றி விட்டன 1174.

**உலைவு** [உலை1, வ்2, உ3.] (தொ. பெ.) = உறுதியின்மை 620, 762; தளர்ச்சி 883.

**உல்கு** (ஒன். பொ. பெ) = சுங்கம், இறைப்பொருள் 756.

**உவகை** [உவ1, கை2] (தொ. ப.) = மகிழ்ச்சி 304, 432, 531; { ஊடலுவகை } அதி. 133.

**980 உவக்காண்** [உவ1, க்5, காண்16] (ஒட்டிநின்ற இ. சொ.) = உங்கே 1185.

**உவக்கும்** [உரி. உவ1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = மகிழும் 69; { உவக்கும் இன்பம் } (செய்யும். எதி. பெ. எ.) = ((வறியார்)) மகிழ்தலால் ((அருளுடையார்)) எய்தும் ((இன்பத்தை)) 228.

**உவந்தாரை** [உவ1, த்5, ந்6, த்3, ஆர்2, ஐ12 × ஒன்றுரை] (பலர். இற. வி. அ.) = ((தவத்தைக்குறித்து)) மகிழ்ந்தவரை 264.

**உவந்து** [உவ1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = மகிழ்ந்து 842, 1061, 1130.

**உவப்ப** [உவ1, ப்5, ப்3, அ2] (செய. எதி. வி. எ.) = மகிழ 394.

**உவப்பது** [உவ1, ப்5, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = மகிழ்தல் 1057.

**உவப்பின்** [உவ1, ப்5, ப்3, இன்2] (செயின். எதி. வி. எ.) = மகிழ்ந்தால் 707.

**உவமை** [ஆரி. உபமா] (வட. தொ. ப.) ★ = ஒப்பு 7.

**உவரி** [உவர்1, இ2] (ஒன். இட.) = கடல் 763.

**உழக்கும்** { உழக்கும் துயர் }. [உழ1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = அநுபவிக்கும் ((துயரை)) 1135; (செய்யும். எதி. வி. மு.) = வருந்தும் = அநுபவிக்கும் 1175, 1229.

**990 உழத்தொறூஉம்** [உழ1, த்5, தொறும்2 — தொறூஉம்11 உழக்கும் — உழ எனத்திரிந்தது] (செயின். எதி. வி. எ.) = அநுபவிக்கும் போதெல்லாம் 940.

**உழந்து** [உழ1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = துன்பம் துய்த்து 1031, ((காம நோயை)) அநுபவித்து 1131, 1137; { உழந்துழந்து } (அடுக்குத்தொடர்) = துன்பத்தை அநுபவித்து அநுபவித்து 1177.

**உழப்பது** [உழ1, ப்5, ப்3, அ4, து2] (ஒன். எதி. வி. அ.) = துன்பந் துய்ப்பது 787, 1172.

---

★ உவமை—[தமிழ். உவ1, மை2] (தொ. ப.) = உவக்குந்தன்மையது, (பண். ஆகு.) = உவக்கத்தகும் ஒப்புமை குறிக்கும் அணி.

உழப்பர் [உழ்1, ப்5, ப்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = துன்பம் துய்ப்பர் 936.

உழப்பிக்கும் [உழ்1—உழப்பி10 க்5, கு4, உம்2] (பி. வி. செய்யும். எதி. வி. மு.] = துன்பம் உறுவிக்கும் 938.

உழவர் [உழ்1, அ4, வ்7, உ2, அர்2] (பலர். தொ. பெ. வரு.)= உழுபவர் 14, 872.

உழவினர் [உழ்1, அ4, வ்7, உ2 இன்4, ஆர்2](பலர்.தொ.பெ.வரு.)= உழுபவர் 1036.

உழவு [உழ்1, அ4, வ்7, உ2] (தொ.பெ.)= பயிர்த்தொழில் 1031; அதி. 104.

உழாஅர் (உழ்1, ஆ3, ஆர்2—ஆஅர்11] (எ. ம. பலர். வி. மு.)= உழமாட்டார் 14.

உழி (இட.) = இடம் 415; {வைப்புழி} = சேமித்துவைக்குமிடம் 226; (7ம் வே. உருபு.) {தீயுழி}= நரகத்தில் 168.

1000 உழுது [உழு1, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = ஏரால் உழுகலேச்செய்து 1033.

உழுவார் [உழு1, வ்3, ஆர்2] (பலர். தொ. பெ. வரு.) = உழுதொழில்வல்லார் 1032.

உழை (இட.)= அருகிடம் 530, 638, 950; (இ.சொ.7ம்வே.உருபு) =இடத்தில் 594, 1249.

உள் (இட.)= உள்ளிடம் 421, 955, 1177; = உளப்பாடு 677; {உள்ளூர்} = நடு((ஊர்)) 216, 927; {உட்பகை} = உள்ளாய் நிற்கும் ((பகை)) 735, 883, 884, 885, 887, 888, 889; (ஒன்.பொ.பெ.)= நெஞ்சம் 119, 129, 487, 680, 927; {உள்வழி} (ப. தொ.) = உள்ளதாகிய ((இடம்)) 1170; {விளிபுள்} (இ.சொ. தொ.பெ. விகு.) = விளேச்சல் 545; (இ. சொ. 7ம்வே. உருபு.—பெரும்பாலும் கூட்டிப் பிரித்தற் பொருளில் வரும்) =இடத்தில் 13, 47, 50, 61, 89, 98, 106, 121, 125, 126, 142, 153, 186, 203, 214, 241, 266, 294, 300, 322, 325, 340, 369, 381, 411, 438, 443, 444, 469, 495, 504, 609, 629, 639, 660, 671, 683, 703, 705, 715, 718, 719, 720, 722, 724, 728, 761, 776, 828, 829, 832, 840, 841, 854, 890, 891, 903, 976, 995, 1008, 1045, 1049, 1057, 1088, 1093, 1130, 1165, 1274, 1324; தொகை —196.

உள [உள்1, அ2] (பல.கு.மு.) = இருக்கின்றன 54, 223, 241, 304, 380, 483, 521, 527, 636, 781, 995, 1099, 1101; (பல. கு. அ.)= இருக்கின்றவை 100, 479, 574; (கு.பெ. எ.) 480.

உளது [உள்1, அ4, து2] (ஒன். கு.மு.)= உள்ளது 454; (ஒன்.கு.அ.) = உள்ளது 235.

உளர் [உள்1, அர்2] (பலர்.கு. மு.) = இருக்கின்றனர் 406, 730, 1178, 1204; (பலர்.கு.அ.)= இருக்கின்றவர் 180, 895.

உளன் [உள்1, அன்2] (ஆண். கு.மு.)= இருக்கின்றான் 294, 336.

உளார் [உள்1, ஆர்2] (பலர்.கு. அ.)= இருப்பவர் 25.

உளாள் [உள்1, ஆள்2] (பெண். கு.மு.)= உறைவாள் 617.

1010 உளி (இ. சொ. 3ம் வே. உருபு.) {இயல்புளி} = ((இயல்)) பால் 545.

உளேம் [உள்1, எம்2] (த.ப.கு. மு.) (உளம் என்பதும் பாடம்) = உள்ளேம் ஆவேம் 1204.

உளேன் [உள்1, என்2] (த.ஒ. கு. மு.) = இருக்கின்றேன் 1167; உயிர்வாழ்கின்றேன் 1206, 1263.

உள்ள {உள்ள வெறுக்கை} [உள்1, ள்5, அம்2 — உள்ள10] (இட.6ம்வே.தொ.)=ஊக்க((மிகுதி)) 600, 971; [உள்1, ள்5, அ2] (செய. எதி. வி. எ.)=நினைக்க 109, 357, 394, 540, 622, 1069, 1206, 1281.

உள்ளது [உள்1, ள்5, அ4, து2] (ஒன்.கு.அ.)=இருப்பது 53, 357, 641, 982, 1069, 1274; (ஒன்.கு.மு.) =இருக்கின்றது 255, 572; அகத்தது 889, 1091.

உள்ளத்தார் [உள்1, ள்5, அம்2, அத்து4, ஆர்2] (பலர். கு. அ. 'அம்' பகுதிப்பொருள் விகுதி) = அகத்திருப்பவர் 1249.

உள்ளத்தால் [உள்1, ள்5, அம்2, அத்து4, ஆல்12] (ஒன்.இட.3ம்வே.) =நெஞ்சத்தால் 282, 294, 309.

உள்ளத்தின் [உள்1, ள்5, அம்2, அத்து2, இன்4] (ஒன்.இட.3ம்வே. தொ.)=நெஞ்சத்தினால் 622.

உள்ளத்து [உள்1, ள்5, அம்2, அத்து4] (ஒன்.இட.6ம்வே.தொ.)= நெஞ்சத்தினது 595.

உள்ளத்துள் [உள்1, ள்5, அம்2, அத்து4, உள்12] (ஒன்.இட.7ம்வே.) =நெஞ்சில் 294, 1130.

1020 உள்ளப்படும் [உள்1, ள்5, அ4, ப்5, படு14, உம்2] (செயப். தே.தொ.—செய்யும்.எதி.வி.மு.) = நன்குமதிக்கப்படும் 665.

உள்ளம் [உள்1, ள்5, அம்2] (ஒன். இட.)=நெஞ்சம் 357, 438, 677, 799, 1057, 1069, 1170, 1207, 1270, 1324; (இட.ஆகு.)=ஊக்கம் 592, 598, 798, 1263.

உள்ளல் [உள்1, ள்5, அல்2] (விய.)=கருதுக 596; (தொ. பெ.) = நினைத்தல் 282, 1243, 1318.

உள்ளற்க [உள்1, ள்5, அல்3— அற்10, க2] (எ. ம. விய.)=நினையாதொழிக 798.

உள்ளார் [உள்1, ள்5, ஆர்2] (பலர்.கு.மு.)=இருக்கின்றார் 1127.

உள்ளான் [உள்1, ள்5, ஆ3, ஆன்2] (எ.ம.ஆண்.கு.மு.)=நினைக்கமாட்டான் 309, 930.

உள்ளி [உள்1, ள்5, இ2] (செய்து. இற.வி.எ.)=நினைத்து 1230, 1231, 1243, 1249, 1264, 1317, 1320.

உள்ளியது [உள்1, ள்5, இ3, ய்7, அ4, து2] (ஒன். இற. வி. அ.)= நினைத்தபேறு, பொருள் 309, 540.

உள்ளின் [உள்1, ள்5, இன்2] (செயின். எதி. வி. எ.)=நினைத்தால் 799, 1201, 1207; [உள்1, ள்5, இன்12] (இட. 5ம்வே.) = அகத்தினின்றும் 1126.

உள்ளினேன் [உள்1, ள்5, இன்3, ஏன்2] (த. ஒ. இற. வி. மு.)=நினைத்தேன் 1316.

1030 உள்ளுக [உள்1, ள்5, உ4, க2] (விய.)=நினைக்க 539.

உள்ளும் [உள்1, ள்5, உம்2] (செய்யும். நிக. வி. மு.) = நினையாநின்றது 1298.

உள்ளுவது [உள்1, ள்5, உ4, வ்7, அ4, து2] (எதி.தொ.பெ.)=நினைப்பது 596.

உள்ளுவர் [உள்1, ள்5, உ4, வ்7, அர்2] (பலர். எதி. வி. மு.)=நினைப்பர் 107,

உள்ளுவன் [உள்1, ள்5, உ4, வ்7, அன்2] (த. ஒ. எதி. வி. மு.)=நினைப்பேன் 1125, 1184.

உள்ளுவேன் [உள்1, ள்5, உ4, வ்7, ஏன்2] (த. ஒ. எதி. வி. மு.)= நினைப்பேன் 1136.

உள்ளுள் [உள்1, ள்5, உள்12] (இட.7ம்வே.)=((வெளிப்படையாகவன்றி)) உள்ளுக்குள்ளே 1057.

உற [உறு1, அ2] (உரி. செய. எதி.வி.எ.)=பொருந்த 399, 535; மிக 659.

உறங்கி [உறங்கு1, இ2] (செய்து. இற.வி.எ.) = தூங்கி 339.

உறங்குவது [உறங்கு1, வ்5, அ4, து2] (எதி.தொ.பெ.) = தூங்குதல் 339.

1040 உறல் [உறு1, அல்2] (தொ.பெ.) = அடைதல் 378; = சுற்றமாதல் { உறன் முறையான் } = ((புறத்து)) உறவு ((முறைத்தன்மையோடுகூடிய)) 885.

உறவு [உறு1, அ4, வ்7, உ2] (தொ. பெ.) = பொருந்துதல் { ஐயுறவு } = ((ஐயப்)) படுதல் 510.

உறாஅ [உறு1, ஆ3—ஆஅ11, மல்2] (ஈ.கெ.எ.ம.வி.எ.) = பொருந்தாமல் 1052.

உறாஅதவர் [உறு1, ஆ3—ஆஅ11, த்8, அ4, வ்7, அர்2] (எ.ம.பலர்.வி.அ.) = நோதுமலர் 1096; = அன்புடையராகாதவர் 1245 1292.

உறாஅது [உறு1, ஆ3—ஆஅ11, து2] (எ. ம. ஒன். வி. மு.) = பொருந்தாது 1143.

உறாஅமை [உறு1, ஆ3—ஆஅ11, மை2] (எ. ம. வி. எ.) = வாராவண்ணம் 442.

உறாஅர் [உறு1, ஆ3, ஆர்2—ஆஅர்11] (எ. ம. பலர். வி. அ.) = நோதுமலர் 1097.

உறாஅர்க்கு [உறு1, ஆ3, ஆர்2—ஆஅர்11, க்5, கு12] (எ.ம.பலர்.வி. அ.4ம்வே.) = கூடாதாருக்கு 1200.

உறின் [உறு1, இன்2] (செயின். எதி. வி. எ.) = உற்றால் 559, 778; = பயன் உண்டானால் 812; = ((மெய்யுறக்)) கலந்தால் 1270.

உறு { உறு—கண், படை, பசி, நோய், துயர் } [உறு1] (உரி.பெ.எ.) = துன்பம் 261; = மிக்க, பெரிய 498, 734, 1200, 1275; { உறு — பங்க, பொருள் } (உரி. வி. தொ.) = வந்து முற்றிய ((பகைவர்)) 744; = தானே வந்துற்ற ((பொருள்)) 756; { உறுதோறு } [உறுந்தோறு — உறுதோறு10 எனத்திரிந்தது] (செயின். எதி. வி. எ.) = பொருந்தும்போதெல்லாம் 1106; { பசப்புறுபருவரல் } அதி. 119.

1050 உறுதல் [உறு1, தல்2] = அடைதல் 628, 629; { காமுறுதல் } [காமம் + உறு = காமுறு13] = (தொ. பெ.) = அவாவுதல் 402.

உறுதி [உறு1, தி2] (பண்.) = நன்மை 638; = மிகுதி 690; = நல்லறிவு 796.

உறுத்தல் [உறு1—உறுத்து10; அல்2] (பி. வி. தொ. பெ.) = உணர்வித்தல்; { அறன்வலியுறுத்தல் } அதி. 4; { தகையணங்குறுத்தல் } அதி. 109; { அலரறிவுறுத்தல் } அதி. 115; { குறிப்பறிவுறுத்தல் } அதி. 128.

உறுப்பினுள் [உறுப்பு1, இன்4, உள்12] (சினை. 7ம் வே.) = ((பொருள், நாடு முதலிய)) அங்கத்துள் 703; = ((கண் முதலிய)) அவயவங்களுள் 705.

உறுப்பு (சினை.) = அங்கம் 79, 704, 737, 761, 802; = உடம்பு 993. { உறுப்பு நலனழிதல் } = தலைமகடன் கண்ணும், தோளும், நுதலும் முதலாய அவயவங்கள் தம் அழகழிதல் அதி. 124.

உறும் [உறு1, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = ((முற்பட்டு)) நிற்கும் 380, 707, 1023; = பொருந்தும் 639; நன்று 816, 817, 1061; { உறும்—போழ்து, அல்லல் } (செய்யும்.எதி. பெ.எ.) = எய்தும் 539, 1301.

உறுவது [உறு1, வ்7, அ4, து2] (ஒன். எதி. வி. அ.) = அடைவது, தொடங்குவது 399, 813, 1259, 1271.

உறூஉம் { உறூஉம்—துவ்வாமை } [உறு1 — உறூஉ11, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = மிகுவிக்கும் 94.

உறை (கால; மு.தொ.ஆகு.) = ஆயுள் 564; (இட.) = ஆளுமிடம் 680; (ஒன்.பொ.பெ.) = மழை 559;

{ உறைநிலத்தோடு, உறைபதி } (வி.தொ.)= தங்குகின்ற 499, 1015.

உறைந்து { உறைந்தற்று } [உறை1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)= தங்கினாற் ((போன்றது)) 208, 890.

**1060** உறையும் [உறை1, ய்7, உம்2] (செய்யும். எதி. வி. மு.)= வாழாநிற்கும் 84; { உறையுந்தெய்வத்துள் } (செய்யும்.எதி.பெ.எ.)= தங்கும் 50.

உறைவது [உறை1, வ்3, அ4, து2] (தொ.பெ.)= ஒழுகுவது 426.

உறைவர் [உறை1, வ்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = தங்கியிருப்பர் 1130.

உற்ற [உறு1 — உற்று9, அ2] (செய்த.இற.பெ.எ.)= நேர்ந்த 261, 442, 624, 625; = உண்டாகிய 887, 888; புணர்ந்த 1206; = அடைந்த 1256; (பல. இற. வி. மு.) = எய்தின 1239.

உற்றக்கடை [உறு1—உற்று9, அ4, க்5, கடை2] (செயின்.எதி.வி. எ.)= எய்தினால் 372, 837.

உற்றக்கால் [உறு1—உற்று9, அ4, க்5, கால்2] (செயின்.எதி.வி. எ.)= வந்தால் 773, 1080.

உற்றது [உறு1—உற்று9, அ4, து2] (ஒன். இற. வி. அ.)= அடைந்தது 708.

உற்றபின் [உறு1—உற்று9, அ4, பின்2] (செயின்.எதி.வி.எ.)= நேர்ந்தால் 662.

உற்றவரின் { ஏமுற்றவரின் } [உறு1—உற்று9, அ4, வ்7, அர்2, இன்12] (பலர்.இற.வி.அ.5ம்வே.)= ((பித்து)) எய்தியவரைக்காட்டிலும் 873.

உற்றவன் [உறு1—உற்று9, அ4, வ்7, அன்2] (ஆண். இற. வி. அ.)= ((நோய்)) அடைந்தவன் 950.

**1070** உற்றவை [உறு1—உற்று9, அ4, வை2] (பல.இற.வி.அ.) = பொருந்தியஇடையூறுகள் 512.

உற்றன [உறு1-உற்று9, அன்4, அ2] (பல. இற. வி. மு.)= உடையவாயின 1179.

உற்றார் [உறு1—உற்று9, ஆர்2] (பலர். இற. வி. அ.) = ((இன்பம்)) அடைந்தவர் 75, 1255; = உடையார் 207; = நண்பர் 1097; { காமுற்றார் } = ((காதலை)) மிகஅடைந்தவர் 1133.

உற்றார்க்கு [உறு1 — உற்று9, ஆர்2, க்5, கு12] (பலர்.இற.வி.அ. 4ம்வே)= மேற்கொண்டவர்க்கு 345.

உற்றால் [உறு1—உற்று9, ஆல்2] (செயின். எதி. வி. எ.) = ((அன்பு)) பட்டால் 1245.

உற்றான் [உறு1 — உற்று9, ஆன்9] (ஆண். இற. வி. அ.) = ((நோய்)) அடைந்தவன் 949.

உற்று [உறு1—உற்று9] (செய்து. இற. வி. எ.)= எய்தி 75, 1290; = தீண்டி 1101; = வேண்டி 1244; { காமுற்றற்று } = அவாவினாற் ((போலும்)) 402.

## ஊ

ஊக்க [ஊக்கு1, அ2] (பி. வி. செய. இற. வி. எ. காரணப் பொருட்டு)= நெகிழ்க்க 1238.

ஊக்கத்தின் [ஊக்கு1, அம்2, அத்து4, இன்12] (தொ.பெ.5ம்வே.) = மனவெழுச்சியால் 473.

ஊக்கம் [ஊக்கு1, அம்2] (தொ. பெ.)= உள்ளக்கிளர்ச்சி 382, = வலிமிகுதி 486, = பெருமை 498, 591, 593, 594, 744; { ஊக்கமுடைமை } = மனம் மெலிதலின்றி வினை செய்தற்கண் கிளர்ச்சியுடைத்தாதல் அதி. 60.

1080 ஊக்காது [ஊக்கு1 ஆ3, து2] (பி.வி.எ.ம.ஒன்.வி.மு.)=நோக்காது 253.

ஊக்கார் [ஊக்கு1, ஆ3, ஆர்2] (பி. வி. எ. ம. பலர். வி. மு.)=மேற்கொள்ளார் 463.

ஊக்கி [ஊக்கு1, இ2] (பி. வி. செய்து. இற. வி. எ.) = வினைசெய்தலைத்தொடங்கி 473.

ஊக்கின் [ஊக்கு1, இன்2] (செயின். எதி. வி. எ.) =முயன்றால் 476; மேற்கொள்ளின் 858.

ஊக்கும் {ஊக்கும் தன்மையவர்} [ஊக்கு1, உம்2] (பி. வி. செய்யும்.எதி.ப.எ.)=((வெல்லக்)) கருதும் ((தன்மையுடையார்)) 855; (பி.வி.செய்யும்.எதி.வி.மு.) = மேற்கொள்ளும் 858.

ஊங்கு [உங்கு1 — ஊங்கு10] (உ. இ.)=மேற்பட்ட 31, 32, 122, 460, 644; மேல் 1065.

ஊடல் [ஊடு1, அல்2] (தொ.பெ.) =பிணங்குதல், புலத்தல் 1109, 1310, 1326; {ஊடலுவகை} = பிணங்குதலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத்தலும் அதி. 133.

ஊடலின் [ஊடு1, அல்2, இன்4] (தொ. பெ. 7ம் வே. தொ.) = புலத்தலில் 1307, 1322, 1327.

ஊடற்கண் [ஊடு1, அல்2,—அற்10, கண்12] (தொ.பெ.7ம்வே.) =புலத்தலில் 1284.

ஊடாமை [ஊடு1, ஆ, மை2] (எ. ம. தொ. பெ.) = பிணங்காமை 1282.

1090 ஊடி [ஊடு1, இ2] (செய்து.இற.வி.எ)=பிணங்கி1260, 1312, 1328.

ஊடியவரை [ஊடு1, இ3, ய்7, அ4, வ்7, அர்2, ஐ12] (பலர்.இற.வி. அ.2ம்வே.)=பிணங்கிய((பரத்தை))யரை 1304.

ஊடிவிடும் [ஊடு1, இ2, விடு14, உம்2] (செய்யும்.எதி.வி.மு.—துணிவுப்பொருட்டு)=திண்ணமாகப் பிணங்கும் 1039.

ஊடினள் [ஊடு1, இன்3, அள்2] (பெண். இற. வி. மு.) = பிணங்கினள் 1314.

ஊடுக [ஊடு1, க2] (விய.)=புலக்க 1329.

ஊடுதல் [ஊடு1, தல்2] (தொ. பெ.)=புலத்தல் 1321, 1330.

ஊட்டா [உண்1—ஊட்டு10, ஆ3, மல்2] (பி. வி. ஈ. கெ. எ.ம. வி. எ.)= உறுவியாமல் 378.

ஊண் [உண்1—ஊண்10] (மு. தி. தொ.)=உண்ணுதல் 44, 227; =உண்ணப்படுவது=உணவு 939, 1012; {ஊண்மாலையவர்} = உண்டலை((யியல்பாகஉடையவர்)) 1035.

ஊதியம் (ஒன்.பொ.பெ.)=வருவாய் 231, 449, 461; =பேறு 797; = ஆக்கம் 831.

ஊர் (இட.)=நகரம் 397, 1129, 1130, 1142, 1143, 1150, 1158; {உள்ளூர்} =((நடு)) ஊர் 216; (ஆகு.)=நடுஊருள்வாழ்பவர் 927; {ஊராண்மை} = உபகாரியாந்தன்மை 773; {ஊருணி} =சிற்றூரிற்((குளம்)) 215.

1100 ஊர [ஊர்1, அ2] (செய. எதி.வி.எ.)=அடர 601.

ஊரவர் [ஊர்1, அ4, வ்7, அர்2] (பலர். இட. வரு.)=ஊரிலுள்ளமகளிர் 1147, 1220.

ஊரார்க்கு [ஊர்1, ஆர்2, க்5, கு12] (பலர். இட. வரு. 4ம்வே.)= ஊரிலுள்ளவர்க்கு 1180.

ஊரும் [ஊர்1, உம்2] (செய்யும். நிக. வி. மு.) = செலுத்தாநின்றது 1182.

ஊருள் [ஊர்1,உள்12] (ஒன்.இட. 7ம்வே.)=நகரினுள் 1008.

ஊர்தல் [ஊர்1, தல்2] (தொ. பெ.)=ஏறிச்செலுத்துதல் 1136.

ஊர்ந்தானிடை [ஊர்1, த்5, ந்6, த்3, ஆன்2, இடை12] (ஆண்.இற. வி. அ. 7ம்வே.) = செலுத்துவான்கண் 37.

ஊர்ந்து [ஊர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.) = ஏறிப்போய் நின்று 979.

ஊர்வது [ஊர்1, வ்3, அ4, து2] (ஒன். எதி. வி. அ.)=அடரவல்லது 621; (தொ. பெ.) = மேற்கொள்ளல் 1185.

ஊழ் (பண்.) = முறைமை = ((வினைப்பயன் சென்றடையும்)) முறை 372; { ஊழ் } = இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதி அதி. 38.

1110 ஊழால் [ஊழ்1, ஆல்12] (பண்.3ம்வே.)=விதியால் 371.

ஊழி [ஊழ்1, இ2] (கால.)= முறைமையுடையது = பிரளயகாலம் 989.

ஊழின் [ஊழ்1, இன்12] (பண். 5ம்வே.)=ஊழ்போல 380.

ஊழை [ஊழ்1, ஐ12] (பண்.2ம் வே.)=விதியை 620.

ஊழ்த்து [ஊழ்1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=மலர்ந்து 650.

ஊறிய [ஊறு1, இ3, ய்7, அ2] (செய்த.இற.பெ.எ.)=சுரந்த 1121.

ஊறு [உறு1—ஊறு10] (மு.தி. தொ.) = தொடுதலுணர்ச்சி ?7; உற்றகாலம்535; = படுதுபடும்வினை 662; உறுதல்= அடைதல் 665, 761, 762; { இடையூறு } = தடை 676.

ஊறுபாடு [உறு1 — ஊறு10, பாடு2] (தொ. பெ.)= துன்பம்விளைதல் 945.

ஊறும் [ஊறு1, உம்2] (செய்யும். எதி.வி.மு.)=சுரக்கும் 396.

ஊற்று [ஊறு1—ஊற்று9] (மு. தி.தொ.)=நீருற்று 1161; { ஊற்றுந் துணை } [ஊன்று1—ஊற்று10] (ப. தொ.)=பற்றுக்கோடு 4!4; { ஊற்றுக்கோல் } = ஊற்றாகிய = பற்றுக் கோடாகிய ((கோல்)) 415.

1120 ஊன் [ஊ1, ன்4] (சினை. ஆகு.)=உடம்பு 251, 252, ?54, 255, 256, 258, 968.

ஊனை [ஊ1, ன்4, ஐ12] (சினை. ஆகு.2ம்வே.)=உடம்பை 1013.

ஊன்றிய [ஊன்று1, இ3, ய்7, அ2] (செய்த. இற. பெ. எ.)=தாங்கிய 983.

ஊன்றும் [ஊன்று1, உம்2] (செய்யும். எதி. வி. மு.)=நிலைநிறுத்தும் 597; { ஊன்றும்—தூண், நிலை, நல்லாள் } (செய்யும்.எதி. பெ.எ.)= தாங்கும் ((தூண்))615; ((திண்மை)) 789; ((நல்ல ஆண் மகன்)) 1030.

## எ

எ (வின. இ. சொ.)=எந்த (அ. இ, பா—ஒ.நோ.) 30, 110, 355, 423, 491, 533, 695, 982.

எஃகு (ஒன். பொ. பெ. கருவி. ஆகு.)=படைக்கலம் 759; (பண்.) = கூர்மை 773.

எங்ஙனம் [எ1, ங்5, ஙனம்14] (வின.இ.சொ.)=எப்படி 251.

எச்சம் [எஞ்சு1—எச்சு10, அம்2] (தொ. பெ.) = மிஞ்சிநிற்பது 238; ஒழிவு=ஒழிந்துநிற்பது 67?, 1004; =((கூறுதுவிடப்பட்டு)) ஒழிந்தவை 1012; = அஃதொழிந்தது 1075; (தொ. பெ.ஆகு.)=மக்கட்பேறு 45?.

எச்சத்தால் [எஞ்சு1 — எச்சு10, அத்து4, ஆல்12] (தொ.பெ.ஆகு. 3ம்வே.)=மக்களால்=((நன்மக்களது உண்மையாலும், இன்மையாலும்)) 114.

எச்சத்திற்கு [எஞ்சு1—எச்சு10, அத்து4, இன்4 — இற்10, கு12] தொ. பெ. ஆகு. 4ம்வே.) = வழியினுள்ளார்க்கு ((ம்)) 112.

1130 எஞ்சல் [எஞ்சு1, அல்2] (தொ. பெ.) = இறத்தல் 44.

எஞ்சாது [எஞ்சு1, ஆ3, து2] (எ.ம.வி.எ.) = ஒழியாமல் 690.

எஞ்சாமை [எஞ்சு1, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.) = இடைவிடாது நிற்றல் 382; (எ.ம.வி.எ.) = ஒழியாமல் 497.

எஞ்ஞான்று { எஞ்ஞான்றும் } [எ1, ஞ்5, ஞான்று14] (கால.) = எப்போது ((ம்)) 44, 145, 317, 361, 439, 582, 635, 697, 701, 864, 870, 886, 903, 905, 910, 921, 926, 927.

எடுக்கும் [எடு1, க்5, கு4, உம்2] (செய்யும். நிக. வி. மு.] = ((அவரை)) எழுப்புகின்றது 1150.

எடுத்து [எடு1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = பிரித்தெண்ணி 776.

எடுப்பது [எடு1, ப்5, ப்3, அ4, து2] (ஒன்.எதி.வி.அ.) = மேலோங்குவிப்பது 15.

எண் { எண்குணத்தான் } [எட்டு1 — எண்10] (பொ.பெ.—ப. தொ.) = எட்டாகிய 9; (பொ.பெ.) = கணக்கு 392; { எண்சேர்ந்த } (மு. தொ.) = ((கருமச்)) சூழ்ச்சிக்கட் ((சென்ற)) 910; [எண்மை1—எண்10] (பண்.—ப. தொ.) = எளிய 424, 548, 760, 991.

எண்ணப்பட [எண்1, ண்5, அ4, ப்5, படு14, அ2] (செயப்.செய.எதி.வி.எ.) = மதிக்கப்பட 922.

எண்ணப்படுவது [எண்1, ண்5, அ4, ப்5, படு14, வ்7, அ4, து2] (செயப். ஒன். எதி. வி. அ.) = ((வைத்து)) எண்ணப்படுகின்ற ஒரு பொருள் 438.

1140 எண்ணம் [எண்1, ண்5, அம்2] (தொ.பெ.) = ((வெற்றி)) நினைப்பு, திட்டம் 494.

எண்ணாத [எண்1, ண்5, ஆ3, த்8, அ2] (எ.ம.பெ.எ.) = நினைத்து ஆராயாத 568.

எண்ணாது [எண்1, ண்5, ஆ3, து2] (எ.ம.வி.எ.) = ((பின்விளைவது)) அறியாமல் 180.

எண்ணி [எண்1, ண்5, இ2] (செய்து. இற. வி. எ.) = எண்ணிக்கையிட்டு 22; = ஆராய்ந்து 462, 467; = நாடி 470, 497, 530, 675, 687; = கருதி 699 1298.

எண்ணிய [எண்1, ண்5, இ3, ய்7, அ2] (பல. இற. வி. அ.] = எண்ணப்பட்டவை 666, 941; (செய்த. இற.பெ.எ.) = நினைத்த 666, 753.

எண்ணியார் [எண்1, ண்5, இ3, ய்7, ஆர்2] (பலர்.இற.வி.அ.) = நினைத்தவர் 494, 666.

எண்ணின் [எண்1, ண்5, இன்2] (செயின். எதி. வி. எ.) = நினைத்தால் 264.

எண்ணும் [எண்1, ண்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = நினைக்கும் 1004; { எண்ணும் மந்திரியின் } (செய்யும். எதி. பெ. எ.) = நினைக்கும் 639.

எண்ணுவம் [எண்1, ண்5, உ4, வ்3, அம்2] (த.ப.எதி.வி.மு.) = நினைக்கக்கடவோம் 467.

எதிர் (இட.7ம்வே.தொ.) = எதிரில், நேர் ((ஆக)) 765, 1182; (மு. தொ.) = ஏற்றுக்கொள்ளுதல் 855, 858.

1150 எதிரது [எதிர்1, அ4, து2] (ஒன்.எதி.வி.அ.) = எதிர்காலத்தில்நேரக்கடவது 429.

எதிர்ப்பை [எதிர்1, ப்5, பு2, ஐ4] (தொ. பெ.) = கைம்மாறாகக்கொடுத்தல் 221.

எம் [நாம்1—எம்10] (த.ப.6ம்வே. தொ.) = எமது 1126, 1185, 1204, 1205, 1222, 1278; (த. ப. 2ம்வே. தொ.) = எம்மை 1180.

எமக்கு [நாம்1—எம்10, அ4, க்5, கு12] (த.ப.4ம்வே.) = நமக்கு 790, 1142, 1176, 1291.

எம்மிடை [நாம்1—எம்10, ம்5, இடை12] (த.ப.7ம்வே.) = எங்களிடத்தில் 1122.

எம்மை [நாம்1—எம்10, ம்5, ஐ12] (த.ப.2ம்வே.)=எங்களை 1205, 1217, 1318.

எயிறு (சினை.)=பல் 1121.

எய்த [எய்1, த்8, அ2] (செய. எதி.வி.எ.)=பொருந்த 561; ((அம்பை)) ஏவிய 772.

எய்தல் [எய்1, தல்2] (தொ.பெ.) =அடைதல் 540, 606; =பெறுதல் 671, 904, 991.

எய்தலால் [எய்1, தல்2, ஆல்12] (தொ. பெ. 3ம்வே.) = பெறலாம் ஆதலால் 265.

1160 எய்தலின் [எய்1, தல்2, இன்12] (தொ.பெ.5ம்வே.)=உண்டாதலைவிட 815.

எய்தற்கு [எய்1, தல்2—தற்10, கு12] (தொ. பெ. 4ம்வே.)= அடைவதற்கு 489.

எய்தா [எய்து1, ஆ3, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.)=அடைவதற்கு உரித்தல்லாத 137.

எய்தாமை [எய்து1, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.)= இல்லையாதல் 815.

எய்தார் [எய்து1, ஆ3, ஆர்2] (எ.ம. பலர். வி. மு.)= அடையமாட்டார் 598, 901.

எய்தி [எய்து1, இ2] (செய்து. இற.வி.எ.)=பெற்று 665, 749, 932.

எய்திய [எய்து1, இ3, ய்7, அ2] (செய்த.இற.பெ.எ.)=பெற்ற 657.

எய்தியக்கண் {எய்தியக்கணும்} [எய்து1, இ4, ய்7, அ4, க்5, கண்2] (செயின்.எதி.வி.எ.)=((தம் வயத்தது)) ஆயவழி ((யும்)) 354; =உடையராயவிடத்து ((ம்)) 670; =இருந்ததாயி ((னும்)) 740.

எய்தின்று [எய்து1, இன்3, று2] (ஒன்.இற.வி.மு.)=உற்றது 1240.

எய்துப [எய்து1, ப2] (பலர். எதி.வி.மு.)=அடைவர் 666.

1170 எய்தும் {எய்தும்—சிறப்பு, படுபயனும்} [எய்து1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.)= அடையும் 75, 676; (செய்யும்.எதி. வி. மு.)=அடைவான் 145, 309, 610; =அடையும் 1024.

எய்துவர் [எய்து1, வ்3, அர்2] (பலர்.எதி.வி.மு.)=அடையப்பெறுவர் 137.

எய்யாமை [எய்1, ய்5, ஆ3, மை2] (உரி.எ.ம.வி.எ.)=மெய்வருந்தாமல் 296.

எரி (ஒன். பொ. பெ.)=நெருப்பு 308, 435, 1148.

எரியால் [எரி1, ய்7, ஆல்12] (ஒன். பொ. பெ. 3ம்வே.)=((காட்டுத்)) தீயால் 896.

எரு (ஒன்.பொ.பெ.)=குப்பை, =உரம் 1037, 1038, 1147.

எலி (ஒன்.பொ.பெ.)=எலி 763.

எல்லா [எல்1, ல்5, ஆம்2—எல்லா10, அல்லது எல்லாம்1—எல்லா10] (பல. பொது. பெ.—ப. தொ.)=அனைத்து ((உயிரும்)) 260, 296, 299, 361, 457, 746, 851, 972.

எல்லாம் [எல்1, ல்5, ஆம்2](பல. பொது. பெ.) = எவையும், முழுவதும், அனைத்தும் 1, 15, 33, 39, 47, 68, 72, 79, 81, 142, 203, 212, 221, 232, 238, 268, 294, 309, 320, 321, 322, 325, 343, 411, 430, 443, 444, 507, 542, 547, 582, 596, 610, 624, 651, 659, 66', 673, 761, 776, 832, 860, 891, 981, 1002, 1012, 1013, 1032, 1033, 1056, 1064, 1067, 1168, 1227, 1266.

எல்லாஅம் [எல்1, ல்5, ஆம்2—ஆஅம்11](பல.பொது.பெ.)=எவையும் 375.

1180 எல்லாரும் [எல்1, ல்5, ஆர்2, உம்16] (பலர்.பொது.பெ.)= அனைவரும் 191, 752, 1139, 1311.

எல்லார்க்கும் [எல்1, ல்5, ஆர்2, க்5, கு12, உம்16] (பலர்.பொது.பெ.

4ம்வே.) = எல்லோருக்கும் 125; (7ம்வே. பொருளில்) = எல்லார் கண்ணும் 582.

எல்லைக்கண் [எல்லை1, க்5, கண்12] (பண். 7ம்வே.) = வரம்பு கடவாமல் அதன்கண்ணே 806.

எவன் [எ1, வ்7, அன்2] (வினா. ஒன்.கு.மு.) = யாது? 31, 46, 1225, 1291; = என்ன பயன் கருதி? 99, 237, 345, 379, 1171, 1172; (வினா. ஒன்.கு.அ.) = என்ன உதவி? 79; = என்னபயன்? 57, 272, 574, 803, 1089, 1308; = என்ன? 1165, 1195, 1207.

எவ்வ { எவ்வநோய் } [எவ்வம்1 — எவ்வ10] (பண். 2ம்வே. உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை) = துன்பத்தைச்செய்யும் ((நோய்)) 853; = ஒன்றனும் தீராத ((நோய்)) 1241.

எவ்வது [எ1, வ்5, வ்7, அ14, து2] (வினா. வி. எ. பொருட்டு.) = எவ்வாறு 426.

எவ்வம் (பண்.) = இளிவரவு 223.

எழ [எழு1, அ2] (செய.எதி.வி.எ.) = ((அலர்)) உண்டாக 1141.

எழில் (பண்.) = எழுச்சி = கம்பீரத்தோற்றம் 407.

எழிலி (ஒன். பொ. பெ.) = முகில் 17.

1190 எழு { எழு—பிறப்பும், நாள், நாளேம் } [எழு1 — எழு10] (பொ. பெ.—ப. தொ.) = ஏழுவகையாகிய 62, 107; = ஏழாகிய 1269, 1278.

எழுதல் [எழு1, தல்2] (தொ.பெ.) = பகைவர் மேற்செல்லுதல் 465.

எழுதுங்கால் [எழுது1, உம்4,—உக்10, கால்2] (செயின்.எதி.வி.எ.) = மைதீற்றும்போது 1285.

எழுதேம் [எழுது1, ஆ3, எம்2] (எ. ம. த. ப. வி. மு.) = ((அஞ்சனத்தால்)) எழுதமாட்டோம் 1127.

எழுத்து [எழுது1, ஐ2—எழுத்து10] (செயப். பொ.பெ.—எழுதப்படுவது = எழுத்து1; (காரிய. ஆகு.) = எழுத்திலக்கணம் 392.

எழுபது [எழு1—எழு10, பத்து1, —பது10 = எழுபது10] (ப.தொ.) = ஏழாகிய பத்து ((= 7 × 10)) 639.

எழுமை [எழு1, மை2] (தொ.ப.) = ((வினைப்பயன்)) எழுந்தன்மையுடையது 107; = (ஆகு.) எழுபிறப்பு 126, 398, 538, 835.

எழுவாரை [எழு1, வ்3, ஆர்2, ஐ12] (பலர். எதி. வி. அ.) = ((பிறதொழில்களின்)) மேற்செல்பவரை 1032.

எழுவாள் [எழு1, வ்3, ஆள்2] (பெண்.எதி.வி.அ.) = எழுந்திருப்பவள் 55.

எள் { எட்பகவு } (ஒன். சினை. 6ம் வே. தொ.) = எள்ளின் பகுதி... எள்விதைக்கு இனது 889.

1200 எளிது [× அரிது—எளிமை1—எளி10, து2] (ஒன். கு. மு.) = வருந்தாமல் கிட்டக்கூடியது 145, 540, 745, 864, 991.

எளிய [எளிமை1—எளி10, ய்7, அ2] (பல. கு. மு.) = கிட்டக்கூடியன 664.

எளியர் [எளிமை1—எளி10, ய்7, அர்2] (பலர். கு. மு.) = முயற்சியின்றிக் கிடைத்தற்குரியர் ((= பலர்)) 723.

எளியன் [எளிமை1—எளி10, ய்7, அன்2] (ஆண்.கு.மு.எ.) = வருந்தாமல் காணக்கூடிய தன்மையுடையனாய் 386; (ஆண்.கு.மு.) = ((பகைவர்க்கு)) இளப்பமுடையவன் 863.

சு

2090 சுட [சுடு1, அ2] (செய. எதி.வி.எ.) = காய்ச்ச 267|1|.

சுடச்சுட [சுடு1, அ2, ச்5, சுடு1, அ2] (அடுக்குத்தொடர் செய.எதி. வி.எ.) = காய்ச்சக் காய்ச்ச 267|2|3|.

சுடப்படின் [சுடு1, அ4, ப்5, படு14, இன்2] (செயப்.செயின்.எதி. வி.எ.) = எரிக்கப்பட்டால் 896.

சுடரும் { சுடரும் பொன் } [சுடர்1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = ஒளி வீசுகின்ற ((பொன்)) 267.

சுடல் [சுடு1, அல்2] (தொ.பெ.) = கொளுத்துதல் 1159.

சுடின் [சுடு1, இன்2] (செயின். எதி.வி.எ.) = எரித்தால் 1159.

சுடும் [சுடு1, உம்2] (செய்யும். எதி வி.மு.) = வெதுப்பம் 293, 306, 799, 1207; = கெடுக்கும் 1019.

சுட்ட [சுடு1 — சுட்டு9, அ2] (செய்த.இற.பெ.எ.) = எரித்த 129.

சுதை [ஆரி. சுதா.] (வட. ஒன். பொ.பெ.) = சுண்ணம்பு 714.

சுமக்க [சும1, க்5, க2] (விய.) = தாங்குக = பணிக 488.

2100 சுருக்கத்து [சுருங்கு1— சுருக்கு10, அத்து4] (மு.வி.தொ.பெ. 7ம்வே.தொ.) = வறுமையில் 963.

சுவை (பண்.) = உருசி 27, 253, 420.

சுழலும் { சுழலும் இசை } [சுழல்1, உம்2] (செய்யும்.எதி.பெ. எ.) = ((துறக்கத்துத்தம்மொடுசொல் லாமல் வையத்தைச்)) சூழ்ந்து நிற் கும் ((புகழை)) 777.

சுழன்று [சுழல்1—சுழன்10, ற்3, உ2] (செய்து.இற.வி.எ.) = செய்து திரிந்து 1031.

சுற்றத்தார்கண் [சுற்றம்1, அத்து4, ஆர்2, கண்12] (பலர்.பொ. பெ.7ம்வே.) = உறவினர் மாட்டு521.

சுற்றத்தால் [சுற்றம்1, அத்து4, ஆல்12] (ஒன்.பொ.பெ.3ம்வே.) = கிளைஞரால் 524, 525.

சுற்றப்பட [சுற்று1, அ4, ப்5, படு14, அ2] (செயப்.செய.எதி.வி. எ.) = சூழப்படும் வகை 524.

சுற்றப்படும் [சுற்று1, அ4, ப்5, படு14, உம்2] (செயப். தே. தொ.— செய்யும். எதி. வி. மு.) = சூழ்ந்து கொள்ளப்படும் 525.

சுற்றம் [சுற்று1, அம்2] (ஒன். பொ. பெ. சொல்லால் அஃறிணை. 'அம்' செயப்.விகு.) = கிளைஞர் 166, 451, 5?2, 529, 584, 1025; { சுற்றந் தழாஅல் } = அரசன் தன் கிளைஞ ரைத் தன்னின் நீங்காமல் அணைத் தல் அதி. 53.

சுற்றும் [சுற்று1, உம்2] (செய் யும். எதி. வி. மு.) = சூழ்ந்து கொள்ளும் 1025.

சூ

2110 சூடின் [சூடு1, இன்2] (செயின். எதி. வி. எ.) = அணிந் தால் 1313.

சூடினீர் [சூடு1, இன்3, ஈர்2] (மு.ப.இற.வி.மு.) = அணிந்தீர் 1313.

சூதர்க்கு [சூது1, அர்2, க்5, கு12] (பலர். பண். வரு. 4ம்வே.) = சூதாடு பவர்க்கு 932.

சூதின் [சூது1, இன்12] (பண். ஆகு. 5ம்வே.) = சூதாட்டம் போல் 934.

சூதினை [சூது1, இன்4, ஐ12] (பண்.ஆகு.2ம்வே.) = சூதாடலை931.

சூது (பண். ஆகு.) = சூதாட்டம் 936, 938; = சூதாடுபவன் 940; { சூது } = சூதினியல்பு அதி. 94.

சூழ [சூழ்1, அ2] (செய.எதி.வி. எ.)= நினைக்க 176.

சூழற்க [சூழ்1, அல்3—அற்10, க2] (எ. ம. விய.) = நினையா தொழிக 204.

சூழாது [சூழ்1, ஆ3, து2] (எ.ம. வி.எ.)= ஆராயாமல் 4 5, 554.

சூழாமல் [சூழ்1, ஆ3, மல்2] (எ. ம.வி.எ.)= ஆராயாமல் 1024.

2120 சூழின் [சூழ்1, இன்2] (செயின். எதி. வி. எ.)= நினைத்தால் 204, 380.

சூழும் [சூழ்1, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = எண்ணும் 204; {சூழும் நெறி} (செய்யும். எதி. பெ.எ.)= கருதும் ((நெறி)) 324.

சூழ்ச்சி [சூழ்1, ச்5, சி2] (தொ. பெ.)= விசாரம்= உபாயம் நினைத்தல் 671.

சூழ்ந்தவன் [சூழ்1, த்5, ந்6, த்3, அ4, வ்7, அன்2] (ஆண்.இற.வி.அ. 4ம்வே. தொ.) = எண்ணியவனுக்கு 204.

சூழ்ந்து [சூழ்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = உபாயம் ஆராய்ந்து 445, 461, 640.

சூழ்ந்துவிடும் [சூழ்1, த்5, ந்6, த்3, உ2, விடு14, உம்2] (செய்யும்.எதி. வி.மு.)= எண்ணித்துணியும் 451.

சூழ்வது [சூழ்1, வ்3, அ4, து2] (தொ.பெ.)= நினைதல் 1276.

சூழ்வார் [சூழ்1, வ்3, ஆர்2] (பலர்.எதி.வி.அ.)= அமைச்சர் 445; = எண்ணுபவர் 1294.

சூழ்வாரை [சூழ்1, வ்3, ஆர்2, ஐ12] (பலர். எதி. வி. அ. 2ம்வே.)= அமைச்சரை 445.

சூழ்வான் [சூழ்1, வ்3, ஆன்2] (ஆண். எதி. வி. அ.) = மறவாதவன் 325.

## செ

2130 செகுத்து [செகு1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)= ((உயிரைப்)) போக்கி= கொன்று 259.

சேத்தாரின் [சா1—செ10, த்5, த்3, ஆர்2, இன்12] (பலர்.இற.வி.அ. 5ம்வே.) = இறந்தவரைக் காட்டிலும் 926.

சேத்தாருள் [சா1—செ10, த்5, த்3, ஆர்2, உள்12] (பலர்.இற.வி.அ. 7ம்வே.)= இறந்தவருள் 214.

சேத்தான் [சா1—செ10, த்5, த்3, ஆன்2] (ஆண்.இற.வி.அ.)= இறந்தவன் 1001.

செப்பம் [செம்மை1—செம்10—செப்10, பம்2] (பண்.)= நடுவு நிலைமை 112, 119;= ((கருத்தும், சொல்லும், செயலும்)) மாறுமை 951.

செப்பின் [செப்பு1, இன்4] (ஒன். பொ. பெ. 6ம்வே. தொ.) = சிமிழினது 887.

செம் [செம்மை1 — செம்10] (பண்.— ப. தொ.) {செந்தண்மை} = செவ்விய ((கண்ணளி)) 30; {செம்பொருள்} = அறம் 91;= கடவுள் 358; {செங்கோல்} = செவ்விய ((கோல்)) 390, 556; {செம்பாகம்} = சரி பாதி 1092; {செங்கோன்மை} = அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை அதி. 55.

செம்மல் (பண்.)= தருக்கு= செருக்கு 880.

செம்மாக்கும் [செம்மா1, க்5, கு4, உம்2] (செய்யும்.எதி.வி.மு.)= இறுமாந்திருக்கும் 1074.

செய் (மு.தொ.) { செய்வினை = வினை செய் } = செய்தல் 653; (வி.தொ.) { செய்ந்நன்றி } = செய்த ((நன்மை)) 110; { செய்வினை } 463; செய்யும் ((வினை)) 455; ((தொழில்)) 972; (செயப்.வி.தொ.) = செய்யப்படும் ((தவம்)) 265; ((வினை)) 677; { செய்தக்க } [செய்1, அ2, தக்க] { செய்தக்கது } [செய்1, அ2, தக்கது] (மு.தொ.—செய. எதி.வி.எ. விகு. தொக்கது.] = செய்ய ((செய்தல்))? 466, 663; { செய்ந் நன்றி யறிதல் } = தனக்குப்பிறர் செய்த நன்மையை மறவாமை அதி. 11.

**2140** செய [செய்1, அ2] (செய. எதி. வி. எ.) = செய்ய 446, 1001, 1021; (செய. இற. வி. எ.) = செய்தலால் 466.

செயப்பட்டார் [செய்1, அ2, ப்5, படு14—யட்டு9, ஆர்2] (செயப்.பலர். இற. வி. அ.) = ((உதவி)) செய்வித்துக் கொண்டவர் 105.

செயல் [செய்1, அல்2] (தொ. பெ.) = செய்தல் 40, 67, 316, 318, 437, 470, 538, 634, 664, 672, 677, 832, 835, 894, 905, 975; (விய.) = செய்க 33, 333, 461, 471, 489, 516, 518, 637, 668, 673, 675, 676, 948, 949; { தெரிந்து செயல்வகை } அதி. 47; { வினை செயல் வகை } அதி. 68; { பொருள் செயல் வகை } அதி. 76; { குடி செயல் வகை } அதி. 103.

செயலின் [செய்1, அல்2, இன்12] (தொ. பெ. 5ம்வே.) = செய்வதை விட 679.

செயற்கு [செய்1, அல்4—அற்10, கு12] (தொ. பெ. 4ம்வே.) = செய்தற்கு 26; = ஆக்குதற்கு 375; = செய்து கொள்ளற்கு 781.

செயற்கை [× இயற்கை—செய்1, அல்4—அற்10, கை2] (தொ. ப.) = செய்யுந்திறம் 637.

செயிர் (பண்.) = நோக்கலாகா நோய் 330.

செயிரின் [செயிர்1, இன்12] (பண். 5ம்வே.) = ((மயக்கமாகிய)) குற்றத்தினின்றும் 258.

செயிர்ப்பவர் [செயிர்1, ப்5, ப்3, அ4, வ்7, அர்2] (பலர். எதி. வி. அ. 6ம்வே.தொ.) = பகைப்பாரது 880.

செயின் [செய்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = செய்தால் 104, 109, 116, 120, 150, 175. 181, 308, 483, 484, 493, 494, 497, 537, 547, 586, 804, 805, 808, 852, 881, 965, 1257, 1288.

**2150** செயும் { செயும் நீர } [செய்1, உம்2] (செய்யும்.எதி.பெ. எ.) = செய்யும் ((நீர்மையுடைய ஒப்புரவுகளை)) 219.

செய்க [செய்1, க2] (விய.) = செய்யவேண்டும் 36, 512, 669, 759, 893.

செய்கலாதார் [செய்1, கு4, அல்4, ஆ3, த்8, ஆர்2] (எ.ம.பலர். வி.அ.) = செய்ய முடியாதவர் 26.

செய்கலான் [செய்1, கு4, அல்3, ஆன்2] (எ.ம. ஆண். வி. மு.) = செய்யான் 848.

செய்கிற்பாற்கு [செய்1, கில்3—கிற்10, ப்3, ஆன்2, ஆற்10, கு12] ('கில்' ஆற்றல் உணர்த்தும் இடைநிலை,—ஆண். எதி. வி. அ. 4ம்வே. வேற்றுமை மயக்கம்) = முடிவு செய்ய வல்லானை 515.

செய்கை [செய்1, கை2] (தொ. பெ.) = செய்யும் வகை 631.

செய்த [செய்1, த்3, அ2] (செய்த. இற.பெ.எ.) = இயற்றிய 101, 102, 103, 109, 312, 1175, 1176, 1225.

செய்தது [செய்1, த்3, அ4, து2] (ஒன். இற. வி. அ.) = இயற்றியது, பண்ணியது 1240, 1279.

செய்தபின் [செய்1, த்8, அ4, பின்2] (செயின்.எதி.வி.எ.)=செய் தால் 313.

செய்தல் [செய்1, தல்2] (தொ. பெ.)=இயற்றல் 274, 843, 954, 1090, 1226.

**2160** செய்தலால் [செய்1, தல்2, ஆல்12] (தொ.பெ.3ம்வே.)= தருதலால் 1201.

செய்தலின் [செய்1, தல்2, இன்12] (தொ.பெ.5ம்வே.)=செய் தலைக் காட்டிலும் 182, 192.

செய்தற்கு [செய்1, தல்2–தற்10, கு12] (தொ. பெ. 4ம்வே.)=செய் வதற்கு 489.

செய்தற்பொருட்டு [செய்1, தல்2—தற்10, பொருட்டு12] ('பொருட்டு' சொல்லுருபு; தொ. பெ. 4ம் வே.)=செய்வதற்காக 81, 212.

செய்தார் [செய்1, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ.)=இயற்றியவர் 208, 310.

செய்தாரை [செய்1, த்3, ஆர்2, ஐ12] (பலர். இற. வி. அ. 2ம்வே.)= செய்தவரை 158, 314.

செய்தார்கண் [செய்1, த்3, ஆர்2, கண்12] (பலர்.இற.வி.அ.7ம்வே.)= செய்தார்மாட்டு 1243.

செய்தார்க்கு [செய்1, த்3, ஆர்2, க்5, கு12] (பலர்.இற.வி.அ.4ம்வே.) =செய்தவர்க்கு 658, 987, 1162.

செய்து [செய்1, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=இயற்றி 118, 246, 388, 551, 563, 660, 815, 829, 878, 907, 934, 1025, 1028, 1035, 1073, 1275, 1294, 1303; { செய்தாங்கு = செய்து + ஆங்கு } = நினைத்த பொழுது 289; =செய்தாற் போல 803; { செய்துவிடல் } =செய்து மறத்தல் 314.



செய்ப [செய்1, ப2] (பலர்.எதி. வி.மு.)=செய்வர் 1195.

**2170** செய்யப்படும் [செய்1, ய்5, அ2, ப்5, படு14, உம்2] (செயப். தே. தொ.—செயப். செய்யும். எதி. வி. மு.) = திண்ணமாகச் செய்யத் தகும் 335.

செய்யல [செய்1, ய்5, அல்3, அ2] (எ. ம. பல. வி. மு.) = செய்ய மாட்டா 1086.

செய்யவள் [செம்மை1–செய்10, ய்5, அ4, வ்7, அள்2] (பெண்.பண். வரு.)=திருமகள் 167.

செய்யற்க [செய்1, ய்5, அல்3–அற்10, க2] (எ.ம.விய.)=செய்யா தொழிக 205, 206, 327, 590, 655, 656.

செய்யா [செய்1, ய்5, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)= இயற்றாத 548, 553, 558, 569; { செய்யாவிடல் } [செய்1, ய்5, ஆ3, மல்2] (ஈ.கெ.எ.ம.வி.எ.)=செய்யாமல் 203.

செய்யாக்கால் [செய்1, ய்5, ஆ3, க்5, கால்2] (எ.ம.வி.எ.)=செய்யாத போது 987.

செய்யாது [செய்1, ய்5, ஆ3, து2] (எ. ம. ஒன். வி. மு.) { அண்ணாத்தல் செய்யாது } = அங்காவாது 255; (எ. ம. வி. எ.)=செய்யாமல் 219, 437, 538.

செய்யாமல் [செய்1, ய்5, ஆ3, மல்2] (எ.ம.வி.எ.)=செய்யாதிருக்க 101, 313.

செய்யாமை [செய்1, ய்5, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=செய்யா திருத்தல் 157, 261, 297, 311, 312, 317, 655, 852; { இன்னா செய்யாமை } அதி. 32; { வெருவந்த செய்யாமை } அதி. 57.

செய்யாமையான் [செய்1, ய்5, ஆ3, மை2, ய்7, ஆன்12] (எ.ம.தொ. பெ. 3ம்வே.)= செய்யாதிருத்த லால் 466.

2180 செய்யார் [செய்1, ய்5, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.)= செய்யமாட்டார்கள் 164, 172, 173, 174, 320, 654, 699, 956, 962.

செய்யாள் [செம்மை1—செய்1, ய்5, ஆள்2] (பெண். பண். வரு.)= திருமகள் 84.

செய்யான் [செய்1, ய்5, ஆ3, ஆன்2] (எ. ம. ஆண். வி. மு.)= செய்யமாட்டான் 210; (எ. ம. ஆண்.வி.அ.)=செய்யாதவன் 865.

செய்யின் [செய்1, ய்5, இன்2] (செயின். எதி. வி. எ.)=செய்தால் 157, 205, 319, 559, 590, 807, 1283.

செய்யும் [செய்1, ய்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.)=((என்ன பயனைச்)) செய்யும் 57, 79 272, 574, 803;=செய்து கொள்ளும் 847;=((துன்பஞ்)) செய்யும் 941; { செய்யும்—அறம், அரசு, வினை, மகழுதகைகமை, உட்பகை, பொருள், சிறப்பு } (செய்யும். எதி. பெ.எ.)=செய்யும் ((அறத்தை)) 249, ((அரசன்)) 554, ((வினைகளுள்)) 672, ((உரிமை)) 700, ((உள்ளாய் நிற்கும் பகைவர்)) 735, ((பொருளை)) 751, ((இன்பம்)) 1208; { செய்யும் அருவினை } =செய்யப் படும் ((அரிய வினை)) 631.

செய்வார் [செய்1, வ்3, ஆர்2] (பலர். எதி. வி. மு.)=இயற்றுவார் கள் 266; (பலர்.எதி.வி.அ.)=செய் பவர்கள் 26, 266, 584.

செய்வாரின் [செய்1, வ்3, ஆர்2, இன்12] (பலர்.எதி.வி.அ.5ம்வே.)= செய்வாரைக் காட்டிலும் 295.

செய்வார்கண் [செய்1, வ்3, ஆர்2, கண்12] (பலர். எதி. வி. அ, 7ம்வே.)=செய்வார் மாட்டு 909.

செய்வார்க்கு [செய்1, வ்3, ஆர்2, க்5, கு12] (பலர்.எதி.வி.அ.4ம்வே.) = செய்பவர்க்கு 120, 462, 998, 1028.

செய்வான் [செய்1, வ்3, ஆன்2] (ஆண். எதி. வி. அ.)=செய்பவன் 520, 677; (6ம்வே. தொ.)=செய் வானது 758, 867.

2190 செய்வானேல் [செய்1, வ்3, ஆன்2, ஏல்2] (செயின்.எதி.வி. எ.)=செய்வானானால் 655

செய்வானை [செய்1, வ்3, ஆன்2, ஐ12] (ஆண்.எதி.வி.அ.2ம்வே.)= செய்பவனை 516.

செய்வேன் [செய்1, வ்3, ஏன்2] (த. ஒ. எதி. வி. மு.) = இயற்று வேன் 1211.

செரு (தொ.பெ.)=போர் 569.

செருக்கி [செருக்கு1, இ2] (செய்து. இற. வி. எ.)= இறுமாந்து களித்து 916.

செருக்கு (பண்.)=மயக்கம் 201, 346, 844;=மதம்=செல்வக் களிப்பு 431;=மதித்தல் 598; = மேம்பாடு 613;=தருக்கு 759, 1193; (பண்.ஆகு.)=செல்வம் 180, 860; = களிப்பு 878; { படைச் செருக்கு } அதி. 78.

செல் { செல்விருந்து, செல் லிடம் } (வி. தொ.) = சென்ற 86; செய்விக்கின்ற 301, 302;=செல் லும 498.

செல [செல்1, அ2] (செய.எதி. வி. எ.) = போக 422; = மனங் கொள்ள 424, 686, 719, 722, 724, 728, 730.

செலல் [செல்1, அல்2] (தொ. பெ. ஆகு.) = செல்லுதற்குக் காரணம் 1293.

செலவு { வழிச்செலவு } [செல்1, அ4, வ்7, உ2] (தொ.பெ.) = ((நன்னெறிக்கட்)) செல்லு தல் 766.

2200 செல்க [செல்1, க2] (விய.)=போவானைக 684.

செல்கிற்பின் [செல்1, இல்3—இற்10, ப்3, இன்2] (செயின்.எதி.வி.எ.)=செல்ல முடியுமானல் 1170.

செல்பவர் [செல்1, ப்3, அ4, வ்7, அர்2] (பலர். எதி. வி. அ.)=போகுபவர் 1033.

செல்லா [செல்1, ல்5, ஆ3, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.)=செல்லக்கூடாத 302; = வறுமைகூர்ந்த 330;=செய்யாத 561;=நீங்காத 769;=போகாத 1255.

செல்லாதது [செல்1, ல்5, ஆ3, த்8, அ4, து2] (எ. ம. ஒன். வி. அ.)=முடியாதது 472.

செல்லாது [செல்1, ல்5, ஆ3, து2] (எ. ம. ஒன். வி. மு.) = நடவாது 18, 326.

செல்லாமை [செல்1, ல்5, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=பிரிந்து போகாதிருத்தல் 1151.

செல்லான் [செல்1, ல்5, ஆ3, ஆன்2] (எ. ம. ஆண். வி. மு. எ.)=செல்லாதவனை 1039.

செல்லும் [செல்1, ல்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = போகும் 594; ((நெடிதாகக்)) காட்டும் 1269; { செல்லும் வாய் } (செய்யும்.எதி. பெ.எ.)=எய்தும் ((இடத்தால்))33; =முடியும் ((ஒருபாயம்)) 673.

செல்லுமிடத்து [செல்1, ல்5, உம்4, இடத்து2] (செயின்.எதி.வி. எ.)=செல்லும் பொழுது 250.

2210 செல்வ { செல்வச் செவிலி } [செல்1, வ்3, அம்2—செல்வ10] (ஒன். பொ. பெ. 2ம்வே. உருபும் பயனும் உடன் றெக்க தொகை)=செல்வத்தையுடைய757.

செல்வது [செல்1, வ்3, அ4, து2] (எதி.தொ.பெ.)=போவது 767.

செல்வத்திற்கு [செல்1, வ்3, அம்2, அத்து4, இன்4—இற்10, கு12] (ஒன்.பொ. பெ. 4ம்வே.)=பொருள் மிகுதிக்கு 178.

செல்வத்துள் [செல்1, வ்3, அம்2, அத்து4, உள்12] (ஒன். பொ. பெ. 7ம்வே.)=செல்வங்கள் பலவற்றுள்ளும் 241, 411.

செல்வத்தை [செல்1, வ்3, அம்2, அத்து4, ஐ12] (ஒன். பொ. பெ. 2ம் வே.)=பொருள் மிகுதியை 555.

செல்வம் [செல்1, வ்3, அம்2] (ஒன். பொ. பெ.)=பொருள் மிகுதி 31, 125. 216, 217, 241, 311, 332, 333, 363, 375, 400, 411, 437 524, 565, 565, 738, 837, 937, 939, 1000, 1006, 1007, 1008; { நன்றியில் செல்வம் } அதி. 101.

செல்வர் [செல்1, வ்3, அர்2] (பலர்.பொ.பெ.)=பொருட் பெருக்குடையவர் 731, 1010.

செல்வரை [செல்1, வ்3, அர்2, ஐ12] (பலர். பொ. பெ. 2ம்வே.)=பொருள் மிக்காரை 752.

செல்வர்க்கு [செல்1, வ்3, அர்2, க்5, கு12] (பலர்.பொ.பெ.4ம்வே.)=பொருள் மிக்கார்க்கு 125.

செல்வாய் [செல்1, வ்3, ஆய்2] (மு.ஒ.எதி.வி மு.)=போவாய் 1248.

2220 செல்வார் [செல்1, வ்3, ஆர்2] (பலர். எதி. வி. மு.)=போவார் 1185.

செல்வார்க்கு [செல்1, வ்3, ஆர்2, க்5, கு12] (பலர்.எதி.வி.அ,4ம்வே.) =போகுபவர்க்கு 472.

செல்வான் [செல்1, வ்3, ஆன்2] (ஆண்.எதி.வி.அ.)=செல்பவன்950.

செவி (சினை.)=காது 389, 411, 413, 418, 694.

செவிக்கு [செவி1, க்5, கு12] (சினை. 4ம்வே.) = காதுக்கு 65, 412, 1199.

செவியின் [செவி1, ய்7, இன்4] (சினை.3ப்வே.தொ.)=காதினால் 420.

செவிலியால் [செவிலி1, ய்7, ஆல்12] (பெண். பொ.பெ. 3ம்வே.) =வளர்ப்புத் தாயால் 757.

செவ்வி [செம்மை1 — செவ்10, வ்5, இ2] (கால.)=தகுந்த நேரம் 130, 565, 1289.

செவ்விது [செம்மை1—செவ்10, வ்5, இ4, து2] (ஒன். கு. மு.) = நேரானது 279.

செவ்வியான் [செம்மை1—செவ்10, வ5, இ4, ய்7, ஆன்2] (ஆண். பொ. பெ.)=நேர்மையானவன் 169.

**2230** செறப்பட்டவர் [செறு1, அ2—ப்5, படு14—பட்டு9, அ4, வ்7, அர்2] (செயப். பலர். இற. வி. அ.) =வெகுளப்பட்டவர் 695.

செறாஅ [செறு1, ஆ3—ஆஅ11, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)= வெகுளாத=இனிய 1097.

செறாஅய் [செறு1, ஆய்2—ஆஅய்11] (மு. ஒ எதி. வி. மு.)= செறுப்பாய்=தூர்க்க முயல்வாய் 1200.

செறாஅர் [செறு1, ஆ3—ஆர்2—ஆஅர்11] (எ.ம.பலர்.வி.அ.)=வெகுளாதவர் 1096; (எ.ம.பலர்.வி.மு.) =வெகுளார் 1292.

செறி {செறிதொடி} (வி.தொ.) =நெருங்கிய 1275; {செறிதோளும்} [செறியும் தோளும்—செறிதோளும்13] (செயின்.எதி.வி.எ.)= புணரப்புணர 1110.

செறிவு [செறி1, வ்3, உ2] (தொ. பெ.)=அடக்கம் 123, 715;= கூட்டம் 684.

செறின் [செறு1, இன்2] (செயி. எதி. வி. எ.)=வெகுண்டால் 778, 897, 900.

செறு {செறுபகை} (வி.தொ.) = அழிக்கின்ற 734.

செறுநர் [செறு1, ந்3, அர்2] (பலர்.பொ.பெ.)=பகைவர் 759.

செறுநரை [செறு1, ந்3, அர்2, ஐ12] (பலர். பொ. பெ. 2ம்வே.)= பகைவரை 488.

**2240** செறுப்ப [செறு1, ப்5, ப்3, அ2] (செய. நிக. வி. எ.) = அடக்க 1318.

செறுவார்க்கு [செறு1, வ்3, ஆர்2, க்5, கு12] (பலர். பொ. பெ. 4ம்வே.)=பகைவர்க்கு 203, 421, 843, 869.

செற்றவர்பின் [செறு1—செற்று9, அ4, வ்7, அர்2, பின்12] (பலர்.இற.வி.அ.7ம்வே.)= அகன்று சென்றவர் பின் 1256.

செற்றார் [செறு1—செற்று9, ஆர்2] (பலர்.இற.வி.அ.)=பகைவர் 446, 1097; (பலர். இற. வி. மு.)= வெறுத்தார் 1245.

செற்றார்க்கு [செறு1—செற்று9, ஆர்2, க்5, கு12] (பலர்.இற.வி.அ. 4ம்வே.)=பகைவர்க்கு 313.

செற்றார்பின் [செறு1—செற்று9, ஆர்2, பின்12] (பலர்.இற.வி.அ.7ம் வே.) = அகன்று சென்றவர் பின் 1255.

செற்று [செறு1—செற்று9] (செய்து.இற.வி.எ.)= அழித்து 168, 1009; = அடக்கி 335.

சென்ற [செல்1—சென்10, ற்3, அ2] (செய்த.இற.பெ.எ.)=போன 422, 1261.

சென்றது [செல்1—சென்10, ற்3, அ4, து2] (ஒன். இற. வி. மு.)=போயிற்று 1284.

சென்றார் [செல்1—சென்10, ற்3, ஆர்2] (பலர். இற. வி. அ.)=போனவர் 1231, 1263, 1269; (பலர்.இற. வி.மு.)=((பிரிந்து)) போனார் 1278.

2250 சென்றுழை [செல்1—சென்10, ற்3, ஆர்2, ஐ12] (பலர். இற. வி. அ. 2ம்வே.) = ((விட்டுப்)) போனவரை 1210.

சென்று [செல்1—சென்10, ற்3, உ2] (செய்து. இற. வி. எ.) = போய் 207, 753, 895, 966, 957, 1058; = வந்து 1045; { மேற் சென்று } = விரைந்து 335; = முற்பட்டு 784.

சென்றேன் [செல்1—சென்10, ற்3, ஏன்2] (த. ஒ. இற. வி. மு.) = போயினேன் 1259, 1284.

## சே

சே [செம்மை1—சே10] (பண்.—ப.தொ.) = சிவந்த 1110.

சேண் (இட.) = தொலைவு = உயர்ந்த 869; { சேட் சென்றார் } = தொலைவிற் ((சென்றார்)) 1231, 1269.

சேர் { சேர் புகழ் } (உரி. வி. தொ.) = பற்றி வரும் 5|2; = சேர்ந்த 5|2|.

சேரா [சேர்1, ஆ2] (எ.ம. ..ல.வி. மு.) = பொருந்தமாட்டா 5.

சேராதார் [சேர்1, ஆ3, த்8, ஆர்2] (எ.ம. பலர்.வி. அ.) = இடைவிடாது நினையாதவர் 10.

சேராது [சேர்1, ஆ3, து2] (எ.ம. வி.எ.) = சேராமல் 734.

சேராமை [சேர்1, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.) = சேராதிருத்தல்; { சிற்றினஞ் சேராமை } அதி. 46.

2260 சேரின் [சேர1, இன்2] (செயின். எதி. வி. எ.) = சேர்ந்தால் 498.

சேரும் [சேர்1, உம்2] (செய்யும். எதி.வி.மு.) = சென்றடையும் 179.

சேர்ந்த [சேர்1, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இற.பெ.எ.) = செறிந்த 243; = மிகுதியாகக் கூடிய 492; = பொருந்திய 694, 910.

சேர்ந்தார் [சேர்1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = இடைவிடாது நினைந்தவர் 3.

சேர்ந்தாரை [சேர்1, த்5, ந்6, த்3, ஆர்2, ஐ12] (பலர். இற. வி. அ. 2ம்வே.) = சேர்ந்தவரை, சேர்ந்தவிடத்தை 306.

சேர்ந்தார்க்கு [சேர்1, த்5, ந்6, த்3, ஆர்2, க்5, கு12] (பலர்.இற.வி. அ.4ம்வே.) = இடைவிடாது நினைந்தவர்க்கு 4, 7, 8.

சேர்ந்து [சேர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = கூடி 492, 691, 910; { மன்னரைச் சேர்ந்தொழுகல் } அதி. 70.

சேர்வது [சேர்1, வ்3, அ4, து2] (ஒன். எதி. வி. அ.) = ஒன்று கூடி வாழ்வது 731.

சேறல் [செல்1—சேல்10—சேற10, தல்2—றல்10] (தொ.பெ.) = செல்லுதல் 1256; { பெண்வழிச் சேறல் } அதி. 91.

சேறி [செல்1—சேல்10—சேற10, த்8—ற்10, இ2] (மு.ஒ. எதி.வி. மு.) = செல்லுவாய் 1244, 1249, 129..

## சொ

2270 சொரிந்து [சொரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.) = பெய்து 259; { சொரிந்தற்று } = பெய்தாற் ((போலும்)) 718.

சொரியின் [சொரி1, ய்7, இன்2] (செயின். எதி. வி. எ.) = பெய்தால் 376.

சொல் (மு.தொ.) = மொழி; 35, 65, 66, 70, 91, 97, 98, 99, 11., 127, 128, 159, 160, 184, 189, 194, 196, 198, 200, 389, 402, 415, 453, 525, 564, 589, 607, 643, 645, 646, 682, 694, 717, 818, 819, 826, 827, 872, 911, 953, 959, 1044, 1046, 1096, 1097, 1147, 1154, 1198; =

புகழ் 56 ; { சொல்லாட } = உரையாட 405, 1070 ; { சொல்வன்மை } = ((அமைச்சியல் நடத்தற்கேதுவாகிய)) சொற்களைச் சொல்ல வல்லனாதல் அதி. 65.

சோலல் [சொல்1, அல்2] (தொ. பெ.) = சொல்லுதல் 139, 291, 647; (விய.) = சொல்லுக 696.

சொலவர்க்கு { இன்சொலவர்க்கு } [சொல்1, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர். கு. அ. 4ம்வே.) = ((இன்)) சொல்லையுடையவர்க்கு 94.

சொலன் { இன்சொலன் } [சொல்1, அன்2] (ஆண். கு. அ.) = ((இனிய)) சொல்லையுடையவன் 92, 95.

சொலால் [சொல்1, ஆல்12] (மு. தொ. 3ம்வே.) = சொல்லுடனே 387|1| ; புகழொடு மேவி 387|2|.

சொலின் [சொல்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = சொன்னால் 96, 195, 1096.

சொலினது { இன்சொலினது } [சொல்1, இன்4, அ4, து2] (ஒன். கு. மு.) = ((இனிய)) சொல்லின் கண்ணது 93.

சொல்ல [சொல்1, ல்5, அ2] (செய. எதி. வி. எ) = சொல்லுதற்கு 649 ; = சொல்லியு துணையால் 1078.

2280 சொல்லல் [சொல்1, ல்5, அல்2] (தொ. பெ.) = சொல்லுதல் 192, 634, 649, 713, 718.

சொல்லற்க [சொல்1, ல்5, அல்3 — அற்10, க2] (எ. ம. விய.) = சொல்லாதே 184, 200, 719.

சொல்லன் [சொல்1, ல்5, அன்2] (ஆண். கு. அ.) = சொல்லையுடையவன் 386, 566.

சொல்லா [சொல்1, ல்5, ஆ3, த்8, அ2] (எ. கெ. எ. ம. பெ. எ.) = சொல்லாத 984 ; { சொல்லாவிடல் } [சொல்1, ல்5, ஆ3, மல்2] (எ. கெ. எ. ம. வி. எ.) = சொல்லாமல் 697.

சொல்லாதார் [சொல்1, ல்5, ஆ3, த்8, ஆர்2] (எ. ம. பலர். வி. அ.) = சொல்லமாட்டாதவர் 728, 730.

சொல்லாது [சொல்1, ல்5, ஆ3, து2] (எ. ம. வி. எ.) = சொல்லாமல் 403.

சொல்லாமை [சொல்1, ல்5, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.) = சொல்லாதிருத்தல் 197 ; { பயனில சொல்லாமை } அதி. 20.

சொல்லாய் [சொல்1, ல்5, ஆய்2] (மு. ஒ. எதி. வி. மு.) = நீ சொல் 1241.

சொல்லார் [சொல்1, ல்5, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.) = சொல்லமாட்டார் 198, 199, 417.

சொல்லான் [சொல்1, ல்5, ஆன்2] (ஆண். கு. அ.) = சொல்லையுடையவன் அல்லது [சொல்1, ல்5, ஆ12] (தொ. பெ. 3ம்வே.) = சொல்லோடு 635.

2290 சொல்லி [சொல்1, ல்5, இ2] (செய்து. இற. வி. எ.) = உரைத்து 187|2|, 424, 646, 685, 686, 697, 724, 795, 1280 ; = புறங்கூறி 187|1|.

சொல்லிய { சொல்லிய வண்ணம் } [சொல்1, ல்5, இ3, ய்7, அ2] (இற. பெ. எ.) = சொன்ன ((படி)) 664.

சொல்லின் [சொல்1, ல்5, இன்2] (செயின். எதி. வி. எ.) = சொன்னால் 184, 197, 826, 1046 ; [சொல்1, ல்5, இன்4] (மு. தொ. 7ம்வே. தொ.) = சொற்களில் 200 ; (6ம்வே. தொ.) = சொல்லினது 711, 712, 713, 721.

சொல்லினால் [சொல்1, ல்5, இன்4, ஆல்12] (மு. தொ. 3ம்வே.) = சொல்லால் 825.

சொல்லின்கண் [சொல்1, ல்5, இன்4, கண்12] (மு. தொ. 7ம்வே.) = சொல்லில் 642.

சொல்லுக [சொல்1, ல்5, உ4, க2] (விய.) = சொல்வாயாக 197, 200, 644, 645, 711, 712.

சொல்லுதல் [சொல்1, ல்5, உ4, தல்2] (தொ. பெ.)=மொழிதல் 648, 664.

சொல்லும் [சொல்1, ல்5, உம்2] (செய்யும். எதி.வி. மு.)=உரைக்கும் 193; { சொல்லும்—இன்னாச் சொல், நெஞ்சத்தான், புன்மை } (செய்யும். எதி.பெ. எ.)=சொல்லும் 160, 185.

சொல்லுவ [சொல்1, ல்5, உ4, வ்3, அ2] (பல. எதி. வி. அ.)=பேசுபவை 1232.

சொல்லுவார் [சொல்1, ல்5, உ4, வ்7, ஆர்2] (பலர். எதி. வி. அ.)=சொல்லக்கூடியவர் 719, 722.

2300 சொல்லுவான் [சொல்1, ல்5, உ4, வ்7, ஆன்2] (ஆண்.எதி.வி. அ.)=சொல்லுபவன் 191.

சொல்லை [சொல்1, ல்5, ஐ12] (மு. தொ. 2ம்வே.) = மாற்றத்தை 644, 645.

சொற்கள் [சொல்1—சொற்10, கள்2] (பல. பொ. பெ.)=மொழிகள் 1100.

## சோ

சோகாப்பர் [சோகா1, ப்5, ப்3, அர்2—ஆரி. சோக: ஒ. நோ.] (பலர். எதி.வி.மு.)= துன்பம் உழப்பர் 127.

சோர [சோர்1, அ2] (செய.எதி. வி.எ.)=ஓய 818.

சோரா [சோர்1, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)=((வாய்)) சோர்ந்தும் ((சொல்லாத)) 689.

சோரார் [சோர்1, ஆ3, ஆர்2] (எ.ம. பலர். வி மு.)=வழுப்படச் சொல்லார் 721.

சோரும் { சோரும் அறிவிலான் } [சோர்1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = உட்கொள்ளாது போக்கும் 847; (செய்யும்.நிக.வி. மு.)=கழலாநின்றன 1234.

சோர்வு [சோர்1, வ்5, உ2] (தொ. பெ.)=மறவி 56, 531;=மறப்பாஞெழிதல் 647;=தளர்வு 586, 642, 930, 1044.

சோர்வுபடும் [சோர்1, வ்5, உ2—படு14, உம்2] (தே. தொ.—செய்யும். எதி. வி. மு.)=திண்ணமாகக் கெடும் 405;=இன்மையைத் தலைப்படும் 1046.

## ஞா

2310 ஞாட்பினுள் [ஞாட்பு1, இன்4, உள்12] (இட. 7ம்வே.)= போர்முனையில் 1088.

ஞாலத்திற்கு [ஞாலம்1, அத்து4 இன்4—இற்10, கு12] (இட.4ம்வே. ஆகு.)=உலகத்து உயிர்க்கு 557.

ஞாலத்தின் [ஞாலம்1, அத்து4, இன்12] (இட. 5ம்வே.) = நிலவுலகத்தைக் காட்டிலும் 102.

ஞாலத்து [ஞாலம்1, அத்து4] (இட. 7ம்வே. தொ.) = உலகத்தின் கண் 141.

ஞாலம் (இட)=உலகம் 484, 485, 648, 999, 1016; (ஆகு.) உலகத்துவாழ்பவர்கள் 245, 1058.

ஞானம் [ஆரி.] (பண்.)=அறிவு அதி. 34 முதல் 37 வரை.

ஞான்று { எஞ்ஞான்றும்= எக்காலத்தும் } (கால.)=பொழுது 44, 145, 317, 361, 439, 582, 635, 697, 701, 864, 870, 886, 903, 905, 910, 921, 926, 927.

## த

தக [தகு1, அ2] (செய.எதி.வி.எ.)=சரியாக=பொருந்த 391.

தகர் (ஒன். பொ. பெ.)=செம்மறிக்கடா 486.

தகவு [தகு1, அ4, வ்7, உ2] (தொ. ப.)=நடுவு நிலைமை 114.

2320 தகதி [சகு1, தி2] (தொ. ப.)=நடுவு நிலைமை 111.

தகுதியான் [தகு1, தி2, ய்7, ஆன்12] (தொ. ப. 3ம்வே.)=நடுவு நிலைமையால்=பொறுமையால் 158.

தகை [தகு1, ஐ2] (பண்.)=நன்மை 56;=தன்மை=குணம் 643; { பெண்டகை } =பெண்ணின் தன்மை=((நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு)) 1084; { அடற்றகை } = சென்றடுந் தறுகண்மை 768;=((விலை மகளிர்க்குரிய ஆடல், பாடல்)) அழகு 915;=((ஆக்கல் அழித்தல்கட்கு ஏதுவாய)) பெருமை 897; { நலத்தகை } =((நற்குணங்களால் தகுதி)) { புலத்தகை } =((புலவி)) மிகுதி 1305; { தகையணங்குறுத்தல் } = ((தலை மகன், தலை மகளது)) வனப்புத் ((தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல்)) அதி. 109.

தகைத்து [தகை1, த்5, து2] (ஒன். கு.மு.)=சிறப்பினையுடையது 125; =தன்மையுடையது 486;=பெருமையுடையது 1064.

தகைமை [தகை1, மை2] (பண்.)=மதிப்பு 405;=உரிமை 808;=உயர்குடிப் பிறப்பு 968;= நிறையுடைமை 1255; { கெழுதகைமை } =உரிமை ((யாற் செய்வன)) 700, 802, 803, 808.

தகைமைக்கண் [தகை1, மை2, க்5, கண்12] (பண். 7ம்வே.)=தன்மையில் 613;=பெருமையுள் 874.

தகைமையவர் [தகை1, மை2, ய்7, அ4, வ்7, அர்2] (பலர்.கு.அ.)= பெருமையுடையவர் 447.

தகைய [தகை1, ய்7, அ2] (பல. கு.மு.)=தன்மையுடையன 418.

தகையால் [சகை1, ய்7, ஆல்12] (பண்.3ம்வே.)=தோற்றப் பொலிவால் 768;=தன்மையால், உரிமையால் 804;=தன்மையோடு 1083; =பெருமிதத்தால் 1182.

தகையான் [தகை1, ய்7, ஆன்12] (பண்.3ம்வே.)=தன்மை பற்றி 804.

2330 தகையான்கண் [தகை1, ய்7, ஆன்2, கண்12] (ஆண். பொ. பெ. 7ம்வே.)=((பெருந்)) தன்மையுடையவனிடத்தில் 217.

தக்க [தகு1 — தக்கு9, அ2] (செய்த. இற. பெ. எ.)=தகுந்த 51, 580, 993, 1288; (பல. இற. வி. அ.)= தகுந்தவை 54, 466, 805.

தக்கது [தகு1—தக்கு9, அ4, து2] (ஒன். இற. வி. அ.)=தகுதி வாய்ந்தது 220, 663, 686, 734, 780, 1018, 1137, 1173.

தக்கனள் { புலத்தக்கனள் } [தகு1—தக்கு9, அன்4, அள்2] (பெண். இற. வி. மு.)=((புலவிக்கு)) அமைந்தாள் 1316.

தக்கார் [தகு1—தக்கு9, ஆர்2] (பலர். இற. வி. அ.)=நடு நிலைமையுடையவர், தகுதியுடையர் 114, 446, 731, 897; = ஏற்புடையவர் 1051

தக்கார்க்கு [தகு1—தக்கு9, ஆர்2, க்5, கு12] (பலர். இற. வி. அ. 4ம்வே.) =தகுதி யுடையவர்க்கு 212, 1006.

தக்காள் [தகு1—தக்கு9, ஆள்2] (பெண். இற. வி. அ.) = தகுதியுடையவள் 51.

தக்கு { தக்காங்கு—ஒரு சொல் } [சகு1—தக்கு9] (செய்து. இற. வி எ.) =நடுவாக ((நின்று)) 561.

தங்கண் [தாம்1—தம்10—தங்10, கண்12] (த. ப. 7ம்வே.)=தம்மிடத்தில் ((எய்திய)) 107.

தங்கா [தங்கு1, ஆ2] (எ.ம.பல. வி.மு.)=உளவாகமாட்டா 19.

2340 தங்கி [தங்கு1, இ2] (செய்து.இற.வி.எ.)=வைத்து 472.

தங்கியான் [தங்கு1, இ3, ய்7, ஆன்2] (ஆண். இற. வி. அ. 6ம்வே. தொ.)=தங்கினவனது 117.

தங்கிற்று [தங்கு1, இன்3—இற்10, று2] (ஒன். இற. வி. மு.)=நிலை பெற்றது 613; =அடங்கிற்று 874.

தங்கின் [தங்கு1, இன்2] (செயின். எதி. வி. எ.) = தங்குமானால் 608.

தங்குதல் [தங்கு1, தல்2] (தொ. பெ.)=நிலை பெறுதல் 671.

தங்கும் [தங்கு1, உம்2] (செய்யும்.எதி.வி.மு)=நிலை பெறும் 389.

தஞ்சம் (உரி.பண்.)=எளிமை, எளிது 863, 1300.

தடிந்து [தடி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=குறைத்து 17.

தண் { தண் — பதத்தால், என்னும், வளி } [தண்மை1—தண்10] (பண்.,ப.தொ.)=தாழ்மையான 548; குளிரா((நிற்கும்))1104; மென் சிறு ((காற்று)) 1239.

தணந்தமை [தண1, த்5, ந்6, த்3, அ4, மை2] (இற.தொ.பெ.)=பிரிந்தமை 1233, 1277.

2350 தணிக்கும் { தணிக்கும் வாய் } [தணி1, க்5, கு4, உம்2] (பி.வி.செய்யும்.எதி. பெ.எ.)=தீர்க்கும் ((உபாயம்)) 948.

தண்டம் [ஆரி.தண்ட3 :] (தொ. பெ.)=ஒறுத்தல்= தண்டனை 567.

தண்டா [தண்டு1, ஆ3, த்8, அ2] (எ. கெ. எ. ம. பெ. எ.) =தணியாத 1171.

தண்ணம் [தண்மை1—தண்10, ண்5, அம்2] (பண்.)=குளிர்ச்சி1277.

தண்மை [தண்1, மை2] (பண்.) =தண்ணளி= அருள் 30.

தத்தம் [தாம்1—தம்10—தந்10; தாம்1—தம்10=தத்தம்10—வலித்தல் விகாரம்] (பொதுப்பெயர், அடுக்கு, 6ம்வே.தொ.)=தங்கள் தங்களது 505.

தந்த [தா1—த10, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இற.பெ.எ.)=ஈட்டிய 212; = அறிவித்த 588.

தந்தது [தா1—த10, த்5, ந்6, த்3, அ4, து2] (ஒன். இற. வி. அ.)= கொடுத்தது 1065.

தந்தம் [தாம்1—தம்10—தந்10; தாம்1—தம்10=தந்தம்10] (பொதுப்பெயர், அடுக்கு, 6ம்வே. தொ.)= தமது தமது=தம்மை நோக்கிச் செய்யும் ((வினையால்)) 63.

தந்தார் [தா1—த10, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. மு.)=உண்டாக்கினார் 1182.

2360 தந்தாள் [தா1—த10, த்5, ந்6, த்3, ஆள்2] (பெண். இற.வி.மு.) =கொடுத்தாள் 1135.

தந்து [தா1—த10, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=படைத்து 1089; =கொடுத்து 1183.

தந்தை (ஆண். பொ. பெ.)= தகப்பன் 67.

தந்தைக்கு [தந்தை1, க்5, கு12] (ஆண். பொ. பெ. 4ம்வே.) = தகப்பனுக்கு 70.

தப்பா [தப்பு1, ஆ3, த்8, அ2] (எ. கெ. எ. ம. பெ. எ.)=தவறாத= பயன்படுகின்ற 217.

தம் [தாம்1—தம்10] (பொதுப்பெயர் 6ம்வே. தொ.)=தமது 63, 64, 66, 68, 158, 190, 266, 315, 473, 539, 584, 595, 720, 846, 916, 1015, 1024, 1034, 1107, 1205; (2ம்வே.தொ.)=தம்மை 237, 829, 1191; (4ம்வே.தொ.)=தமக்கு 051-

தமு [தாம்1—தம்10, அ12] (ப. பொதுப்பெயர்)=தம்முடையவை 120, 376.

தமக்கு [தாம்1—தம்10, அ4, க்5, கு12] (ப. பொதுப்பெயர் 4ம்வே.)=தங்களுக்கு 72, 319.

தமது [தாம்1—தம்10, அது12] (பொதுப்பெயர், 6ம்வே. ஒ.)=தம்முடைய 1107.

தமர [தாம்1—தம்10, அர்2] (பலர். பொதுப்பெயர்.) = தமக்குச் சிறந்தவர் 443, 444;=சுற்றத்தார் 529, 837, 1027, 1300;=ஞாதியார் 881.

**2370** தமரின் [தாம்1—தம்10, அர்2, இன்12] (பலர். பொதுப் பெயர், 5ம்வே.)=தமர்மையில்=சுற்றத்தாராந் தன்மையைக் காட்டிலும் 814.

தமியார் [தமி1, ய்7, அர்2] (பலர். கு.மு.எ.)=தனியராக 229.

தமியள் [தமி1, ய்7, அள்2] (பெண்.கு.மு.எ.)=தனியளாக 1007.

தமியன் [தமி1, ய்7, அன்2] (ஆண். கு. அ.) = தனித்தவன் ((ஆக)) 873.

தம்மின் [தாம்1—தம்10, ம்5, இன்12] (ப.பொதுப்பெயர்,5ம்வே.) =தம்மைக் காட்டிலும் 68, 444.

தம்மை [தாம்1—தம்10, ம்5, ஐ12] (ப. பொதுப்பெயர் 2ம்வே.)=தங்களை 151, 237, 843, 1303, 1312.

தம்மொடு [தாம்1—தம்10, ம்5, ஒடு12] (ப.பொதுப்பெயர்,3ம்வே.)=தம் நிலைமையோடு 470.

தரலான் [தா1—தரு14, அல்2, ஆன்12] (தொ.பெ.3ம்வே.)=கொடுத்தலால் 131.

தரற்கு [தா1—தரு10, அல்2,—அற்10, கு12] (தொ.பெ.4ம்வே.) =தருவதற்கு 859;=தருதலால் (நான்காவது மூன்றன் பொருண்மைக்கண் வந்தது) 1214.

தரின் [தா1—தரு10, இன்2] (செயின். எதி.வி. எ.)=கொடுத்தால் =பயந்தால் 113.

**2380** தருக்கி [தருக்கு1, இ2] (செய்து.இற.வி. எ.)=செருக்குற்று =மேற்கொண்டு 935.

தரும் [தா1—தரு10, உம்2] (செய்யும். எதி.வி.மு.)=கொடுக்கும் 71, 171, 183, 275, 284, 296, 313, 321, 370, 416, 457, 492, 507, 508, 510, 522, 619, 651, 658, 663, 692, 785, 853, 884, 885, 892, 902, 903;=பயக்கும் 98, 138, 700, 911, 1162;=உண்டாக்கும் 611, 792, 845, 1044; { தரும் நாடு } (செய்யும். எதி. பெ. எ.)=அடைவிக்கும் ((நாடுகள்)) 739.

தருவது [தா1—தரு10, வ்3, அ4, து2] (ஒன். எதி. வி. அ.)=கொடுப்பது 546, 839, 934.

தருவார் [தா1—தரு10, வ்3, ஆர்2] (பலர்.எதி.வி.அ.)=விற்பவர் 256.

தரூஉம் { தரூஉம் பகை } [தா1—தரு10—தரூஉ11, உம்2] (செய்யும். எதி. பெ. எ.)=பயக்கும் ((பகை)) 434; (செய்யும். எதி. வி. மு.)= கொடுக்கும் 651.

தலை (சினை.)=முடி 9, 16, 488: (உவம. ஆகு., பண்.)=முதன்மை, சிறப்பு 43, 47, 57, 151, 203, 295, 317, 322, 325, 411, 444, 579, 657, 687, 736, 761, 770, 814, 852, 891, 1031; { ஒரு தலை } =உறுதி 119 =தெளிவு 357.

தலைக்கூடி [தலை17, க்5, கூடு1, இ2] (செய்து. இற. வி. எ.)=ஒன்று சேர்ந்து 394.

தலைச்செல்லா [தலை17, ச்5, செல்1, ல்5, ஆ3, த்8, அ2] (எ.செ.எ. ம.பெ.எ.)=பின்னும் செய்யாத 561.

தலைப்படாதார் [தலை17, ப்5, படு1, ஆ3, த்8, ஆர்2] (எ.ம.பலர்.வி. அ.)=எய்தும் பொறியிலாதார் 88.

தலைப்படுவர் [தலை17, ப்5, படு1, வ்3, அர்2] (பலர்.எதி.வி.மு.)= எய்துவர் 356.

2390 தலைப்படுவார் [தலை17 ப்5, படு1, வ்3, ஆர்2] (பலர்.எதி.வி. அ.)= பெறுவார் 1289.

தலைப்பட்டவர்க்கு [தலை17, ப்5, படு1—பட்டு9, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர்.இறு.வி.4ம்வே.)= எய்தியவர்க்கு 269.

தலைப்பட்டார் [தலை17, ப்5, படு1 —பட்டு9, ஆர்2] (பலர்இற.வி.மு.)= எய்தினர் 348.

தலைப்பிரிதல் [தலை17, ப்5, பிரி1, தல்2] (தொ.பெ.)= நீங்குதல் 955.

தலைப்பிரிந்த [தலை17, ப்5, பிரி1, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இற.பெ. எ.)= நீங்கிவந்த 258.

தலைப்பிரியா [தலை17, ப்5, பிரி1, ய்7, ஆ3, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ. எ.)= நீங்காத 97.

தலைப்பிரியாதார் [தலை17, ப்5, பிரி1, ய்7, ஆ3, த்8, ஆர்2] (எ.ம. பலர்.வி.அ.)= நீங்காதவர் 810.

தலைப்பெய்து [தலை17, ப்5, பெய்1, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)= கண்டு 405.

தலையான் [தலை1, ய்5, ஆன்12] (பண். 3ம்வே., 7ம்வே. பொருளில் வந்தது)= சார்பின்கண் 1196.

தலையின் [தலை1, ய்5, இன்12] (சினை. 5ம்வே.) = தலையினின்றும் 964.

2400 தலைவந்த [தலை17, வா1— வ10, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இற. பெ.எ.)= மேல் வந்து தாக்கிய 767.

தவ் { தவ்வென்னும் } (இ.சொ. குறிப்பு மொழி.) தவ்வென்னும = சுருங்கும் 1144.

தவத்தான் [ஆரி. தப:] [தவம்1, அத்து4, ஆன்12] (தொ.பெ.3ம்வே.) = தவவலியால் 264.

தவத்திற்கு [ஆரி.தப:] [தவம்1, அத்து4, இன்4—இற்10, கு12] (தொ. பெ. 4ம்வே. மயக்கம்; 6ம்வே. பொருள்,= துறவினது 261.

தவத்தோடு [ஆரி. தப:] [தவம்1, அத்து4, ஒடு12] (தொ.பெ.3ம்வே.)= துறவுடன் 295.

தவம் [ஆரி. தப:] (தொ.பெ.)= துறவு, நோன்பு 19, 262, 263, 265, 266; (ஆகு.)= தவவேடம் 274; = நல்வினை 842; { தவம் } = மனம் பொறி வழி போகாது தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களை யோம்புதல் அதி. 27.

தவல் [தவ்1, அல்2] (தொ.பெ.) = அழிதல் 853; = குறைதல்= பிழை செய்தல் ((= வறுமையால் இன்னாதாதல்)) 856.

தவறு (பண்.)= குற்றம் 469, 1154, 1286, 1321, 1325.

தவா [தவ்1, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)= கெடாமைக்கு ஏதுவாகிய 367.

தவாஅ [தவ்1, ஆ3—ஆஅ11, த்8, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.)= கெடாது வருகின்ற 361.

2410 தவாஅது [தவ்1, ஆ3— ஆஅ11, து2] (ஈ. ம. வி. எ.)= முடிவின்றி 368.

தவ்வையை [தவ்வை1, ய்7, ஐ12] (பெண். பொ. பெ. 2ம்வே. உருபு மயக்கம்)= மூதேவிக்கு 167.

தழால் [தழுவு1, அல்2–தழாஅல்13] (தொ.பெ.)= நீங்காமல் அணைத்தல்; { சுற்றந்தழால் } அதி. 53.

தழீஇ [தழுவு1, இ2—தழீ10, தழீஇ11] (செ.அள.செய்து.இற. வி. எ.)= அணைத்து 544|1|9| 913; = பொருந்தி 544|2|

தழீஇயது [தழுவு1, இ3—தழீ இ11, ய்7, அ4, து2] (சொ.அள.இற. வி.அ.)= நட்பாக்குவது 425.

**தளர்ந்து** [தளர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = தவறி 716.

**தளிர்த்து** [தளிர்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = கொழுந்து விட்டு 78.

**தளிர்ப்ப** [தளிர்1, ப்5, ப்3, அ2] (செய. எதி. வி. எ.) = இன்பத்தால் தழைக்க 1106.

**தள்ளா** [தள்1, ள்5, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.) = குன்றாத 731.

**தள்ளாது** [தள்1, ள்5, ஆ3, து2] (எ.ம.ஒன்.வி.மு.) = தவறாது 290.

**2420** **தள்ளாமை** [தள்1, ள்5, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.) = தவறாமை = வெற்றி 596.

**தள்ளின்** [தள்1, ள்5, இன்2] (செயின். எதி. வி. எ.) = கூடாவிடின் 596.

**தள்ளும்** [தள்1, ள்5, உம்2] (செய்யும்.எதி.வி.மு.) = தவறும் 290.

**தறு** { தறுகண் } (வி.தொ.) = இரக்கமின்மை = மறம் 773.

**தற்று** [தறு1—தற்று9] (செய்து. இற. வி. எ.) = இறுக உடுத்திக் கொண்டு 1023.

**தன்** [தான்1—தன்10] (ஒருமைப் பொதுப் பெயர் 2ம்வே. தொ.) = தன்னை 51, 56, 529, 741, 878, 883, 1009 ; (6ம்வே. தொ.) = தனது 17, 69, 116, 161, 186, 244, 251, 268, 272, 281, 293, 318, 327, 373, 387, 436, 471, 535, 608, 615, 619, 630, 756, 758, 776, 838, 1102 ; (7ம்வே. தொ.) = தன் கண் 157 ; (4ம்வே. உருபும் பயனும் உடன் தொக்க தொகை) = தனக்கு உதவும் ((துணை)) 875.

**தனக்கு** [தான்1—தன்10, அ4, க்5, கு12] (ஒ,பொதுப்பெயர்4ம்வே.) = தனக்கு 7 ; = தன்பொருட்டு 847.

**தனி** (இ.சொ.வி.எ.பொருட்டு.) = பிரிந்திருந்து 1296 ; { தனிப்படர் மிகுதி } = துன்ப மிகுதி தலைவன் கண் இன்றித் தன் கண்ணே யாதல் கூறுதல் அதி. 120.

**தனித்து** [தனி1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.) = தனியாகி 338.

**தனிமை** [தனி1, மை2] (பண்.) = ஒன்றியான தன்மை 814.

**2430** **தன்கண்** [தான்1—தன்10, கண்12] (ஒ.பொதுப்பெயர்,7ம்வே.) = தன்னிடத்தில் 794.

**தன்மை** [தான்1—தன்10, மை2] (பண்.) = வகுப்பு 767 ; = இயல்பு 1144.

**தன்மைத்து** [தன்மை1, த்5, து2] (ஒன்.கு.மு.) = இயல்புடையது 255.

**தன்மையவர்** [தன்மை1, ய்7, அ4, வ்7, அர்2] (பலர். கு. அ.) = இயல்பினை யுடையவர் 855.

**தன்மையான்** [தன்மை1, ய்7, ஆன்2] (ஆண். கு. அ.) = இயற்கை யுடையவன் 511.

**தன்னின்** [தான்1—தன்10, ன்5, இன்12] (ஒ.பொதுப்பெயர்,5ம்வே.) = தன்னைக் காட்டிலும் 250, 603.

**தன்னை** [தான்1—தன்10, ன்5, ஐ12] (ஒ.பொதுப்பெயர்,2ம்வே.) = தன்னை 206, 208, 209, 250, 293, 305, 439, 474, 974, 978, 1319.

## தா

**தா** (பண்.உரி.) = கேடு { தாவில் = கேடில்லாத } 853.

**தாஅம்** [தாம்1—தாஅம்11] (பன்மைப் பொதுப் பெயர்) = தாங்கள் 1176.

**தாஅயது** [தாவ்1, இ3, ய்7, அ4, து2—தாயது எனக் குறைந்து நின்றது ; தாயது—தாஅயது11] (ஒன். இற.வி.அ.) = கடந்த பரப்பு 610.

**2440** **தாக்க** [தாக்கு1, அ2] (செய. எதி. வி. எ.) = மோது மாறல் 1068.

**தாக்கற்கு** [தாக்கு1, அல்2—அற்10, கு12] (தொ. பெ. 4ம்வே.) = பாயும் பொருட்டு 486.

**தாக்கு** (மு. தொ.) = எதிர்த்தல் 599; { தாக்கணங்கு } (வி. தொ.) = தாக்கி வருத்துகின்ற 1082.

**தாங்காது** [தாங்கு1, ஆ3, து2] (எ. ம. ஒன். வி. மு.) = பொறுக்காது 990.

**தாங்கி** [தாங்கு1, இ2] (செய்து. இற. வி. எ.) = கேடில்லாமல் இனிதிருப்பச் செய்து 733; = மேல் வாராமல் தடுத்து 767.

**தாங்கும்** { தாங்கும் நிலம், தன்மை } [தாங்கு1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = சுமக்கும் ((நிலம்)) 151; = விலக்கும் ((வகுப்பு)) 767.

**தாம்** (ப. பொதுப் பெயர்) = தாங்கள் 158, 228, 229, 319, 399, 539, 646, 724, 843, 98,, 1073, 1076, 1103, 1140, 1150, 1169, 1171, 1173, 1191, 1194, 1195, 1202, 1299, 1300, 1325; (சாரியை) 658.

**தாமரை** (ஒன். பொ. பெ. ஆகு.) = தாமரை மலர் 1103.

**தாமரையினாள்** [தாமரை1, ய்7, இன்4, ஆள்2] (பெண். பொ. பெ.) = திருமகள் 617.

**தாய்** (பெண். பொ. பெ.) = அன்னை 69.

**2450** **தாயான்** [தாய்1, ஆன்12] (பெண். பொ. பெ. 3ம்வே.) = தாயினால் 1047.

**தார்** (சினை.) = தூசிப்படை 767.

**தாழ்** (ஒன். பொ. பெ.) = தாழ்ப்பாள் 71, 1251.

**தாழாது** [தாழ்1, ஆ3, து2] (எ. ம. வி. எ.) = சளைக்காமல் 620; = விரைந்து 1024.

**தாழ்ச்சியுள்** [தாழ்1, ச்5, சி2, ய்7, உள்12] (தொ. பெ. 7ம்வே.) = ((பொழுதால்)) வினை நீட்டிப்பின்கண் 671.

**தாழ்ந்த** [தாழ்1, த்5, ந்6, த்3, அ2] (செய்த. இற. பெ. எ.) = ஆட்படுவதற்கு ஏதுவாகிய 903.

**தாழ்வு** [தாழ்1, வ்3, உ2] (தொ. பெ.) = வறுமை 117; = கேடு 731.

**தாள்** (சினை.) = அடி 2, 7, 8; (ஆகு.) முயற்சி 212, 617, 1065; { தாளாண்மை } = முயற்சி 613, 614.

**தாளை** [தாள்1, ஐ12] (சினை. 2ம் வே.) = அடிகளை 9.

**தான்** (ஒருமைப் பொதுப் பெயர்) = குறித்த ஒரு பொருள் 11, 17, 380, 451, 707, 990, 1023, 1024, 1060; = குறித்த ஒருவன் 43, 82, 206, 209, 250, 251, 268, 272, 305, 316, 318, 327, 367, 387, 398, 424, 446, 524, 540, 548, 792, 834, 835, 847, 848, 849, 862, 875, 974, 1006, 1018, 1026, 1094, 1102, 1290; (இ. சொ., சாரியை,) = தேற்றப் பொருள்—உ-ம். { வினை தான் } 515, 785, 977, 1215; = (அசை நிலை) 980.

**2460** **தானம்** [ஆரி. தானம்3] (தொ. பெ.) = கொடை 19, 295.

**தானை** (ஒன். பொ. பெ.) = படை 767, 768, 770, 1082.

## தி

**திகழ்தரும்** { திகழ்தரும்—நூல் } [திகழ்1, தா14—தரு10, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = புலனாகும் ((நூல்)) 1273.

**திகழ்வது** [திகழ்1, வ்3, அ4, து2] (எதி. வி. அ.) = புலனாகின்றது 1273.

**திங்களை** [திங்கள்1, ஐ12] (ஒன். பொ. பெ. 2ம்வே.) = சந்திரனை 1146.

திட்பம் [திண்மை1—திண்10—திட்10, பம்2] (பண்.)=திண்மை= உறுதி 661, 665, 670; { வினைத் திட்பம் } அதி. 67.

திண்ணியர் [திண்மை1—திண்10, ண்5, இ4, ய்7, அர்2] (பலர்.பண். வரு.)=வலியர் 666.

திண்மை [திண்1, மை2] (பண்.) =கலங்கா நிலைமை 54;=வலிமை 743, 988.

திரிந்து [திரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=வேறுபட்டு 90, 452; { திரிந்தற்று } =கெட்டாற் ((போன்றது)) 1000.

திரியாது [திரி1, ய்7, ஆ3, து2] (எ.ம.வி.எ.)=வேறுபடாமல் 124.

**2470** திரு (ஒன். பொ. பெ.)= செல்வம் 168, 215, 374, 408, 568; (பண்.) = நன்மை 1072; { திருநுதல் } (இம்வே. உருபும் பயனும் உடன் தொக்க தொகை)=அழகையுடைய 1011, 1123; (பெண்.பொ. பெ.)=திருமகள் 179, 519, 920.

திருவினை [திரு1, வ்7, இன்4, ஐ12] (ஒன்.பொ. பெ. 2ம்வே.)=செல்வத்தை 482, 616.

திறப்பாடு [திறம்1, ப்5, பாடு2] (தொ.பெ.)=கூறுபாடு 640.

திறம் (பண்.)=கூறுபாடு 501, 1184, 1298; { பகைத் திறந் தெளிதல் } அதி. 88.

திறன் [திறம்1—திறன்15] (பண்.) =செய்யத் தகுந்தவை 157;=கூறுபாடு 179, 441, 635;=தகுதி வேறுபாடுகள் 644;=நெறி 754; (ஆகு.) = உளையுந் தன்மை யுடைய பழி 186.

தினல் [தின்1, அல்2] (தொ.பெ.) =தின்னுதல் 254, 256.

தினிய [தின்1, இய2] (செய்யிய. எதி. வி. எ.) = தின்னுதற் பொருட்டு 1296.

தினை (சினை.) =தினைப்பயிரின் அலகு 104, 144, 433, 1282.

தின்பவர்க்கு [தின்1, ப்3, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர்.எதி.வி. அ. 4ம்வே.) = உண்ணுபவர்களுக்கு 252.

தின்னும் [தின்1, ன்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.)=தின்பன போன்று நலியா நிற்கும் 1244.

## தீ

**2480** தீ (ஒன். பொ. பெ.) = நெருப்பு 674, 691, 947, 1104, 1159;=விளக்கு 929; [× நல்; தீமை1—தீ10] (பண்.)=கொடிய 128, 138, 201, 206, 209, 210, 227, 460; = இழிந்த { தீநட்பு } =தீக் குணத்தாரோடு உளதாய நட்பு அதி. 82; { தீவினையச்சம் }= பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல் அதி. 21.

தீங்கு (பண்.)=தீமை 827.

தீண்டல் [தீண்டு1, அல்2] (தொ. பெ.)=தொடுதல் 65, 227.

தீண்டலால் [தீண்டு1, அல்2, ஆல்12] (தொ.பெ.3ம்வே.)=தொடுதலால் 1106.

தீண்டா [தீண்டு1, ஆ2] (எ.ம. பல்.வி.மு.)=சென்றடையா 62.

தீது [தீமை1—தீ10, து2] (ஒன்.கு. மு.)=கொடிது 182, 192, 222, 282, 302, 531;=குற்றமுடையது 671; (ஒன். கு. அ.)=துன்பம் 190;= கொடியது 422;=கொடுங்கோன்மை 754.

தீமை [தீ1, மை2] (பண்.) = கெடுதி143, 291, 511;=குற்றம்984.

தீமைத்து [தீமை1, த்5, து2] (ஒன்.கு.மு.)=தீங்குடையது 450.

தீமையால் [தீமை1, ய்7, ஆல்12] (பண்.3ம்வே.)=கெடுதியால், குற்றத்தால் 1000.

தீய [தீமை1—தி10, ய்7, அ2] (பல. பண்.)=கொடிய சொற்கள் 139;=துன்பங்கள் 202;=தீ வினை கள் 203;=கொடியவை 302, 303, 375.

2490 தியவை [தீமை1—தி10, ய்7, அ4, வை2] (பல.பண்.)=துன் பங்கள் 62;=கொடிய வினைகள் 202, 205, 208.

தீயில் [தீ1, ய்7, இல்12] (ஒன். பொ. பெ. 7ம்வே.)=நெருப்பின் கண் 1260.

தீயின் [தீ1, ய்7, இன்12] (ஒன். பொ. பெ. 5ம்வே.)=நெருப்பைக் காட்டி((லும்)) 202.

தீயினால் [தீ1, ய்7, இன்4, ஆல்12] (ஒன். பொ. பெ. 3ம்வே.)=நெருப் பால் 129

தீயுழி [தீ1, ய்7, உழி12] (ஒன். பொ. பெ. 7ம்வே.) = நரகத்தின் கண் 168.

தீர் {பொய் தீரொழுக்கம்} (வி.தொ.)=நீங்கிய 6.

தீர [× சேர., தீர்1, அ2] (உரி. செய. எதி. வி. எ.)=முற்றும் அற 348;=அற 575.

தீரா [தீர்1, ஆ3, த்8, அ2] (உரி. ஈ.கெ.எ. ம. பெ. எ.)=நீங்காத 508, 510, 1201.

தீராமை [தீர்1, ஆ3, மை2] (உரி.எ.ம.வி.எ.)=நீங்காமல் 482.

தீர்க்கும் {தீர்க்கும் மருந்து} [தீர்1, க்5, கு4, உம்2] (உரி. பி. வி. செய்யும்.எதி.பெ.எ.)=விடுவிக்கும் ((மருந்து)) 1241, 1275.

2500 தீர்த்தல் [தீர்1, த்5, தல்2] (உரி.விய.)=போக்குக 226.

தீர்ந்த [தீர்1, த்5, ந்6, த்8, அ2] (உரி.பல. இற.வி. அ.)=நீங்கியவை 199; (இற.பெ.எ.)=நீங்கிய 292.

தீர்ந்தன்று [தீர்1, த்5, ந்6, த்3, அன்4, று2] (உரி.ஒன்.இற.வி.மு.) =விட்டது 612.

தீர்ந்தார் [தீர்1, த்5, ந்6, த்3, ஆர்2] (உரி. பலர். இற. வி. அ.)=நீங்கின வர் 170.

தீர்ந்தாரின் [தீர்1, த்5, ந்6, த்3, ஆர்2, இன்12] (உரி.பலர்.இற.வி.அ. 5ம்வே.)=செய்யாது விட்டாரை அல்லது நீங்கினர் போல 612.

தீர்ப்பான் [தீர்1, ப்5, ப்3, ஆன்2] (உரி. பி. வி. ஆண். எதி. வி. அ.)= ((நோயை)) ஆற்றுபவன் 950.

தீர்வாம் [தீர்1, வ்3, ஆம்2] (உரி. த. ப. எதி. வி. மு.)=நீக்கக் கட வோம் 1063.

## து

துகில் (ஒன். பொ. பெ.)= ஆடை 1087.

துச்சு {துச்சில்} (ப. தொ.) துச்சில்=ஒதுக்கு 340.

துஞ்சல் [துஞ்சு1, அல்2] (தொ. பெ.)=உறங்குதல் 1049.

2510 துஞ்சா [துஞ்சு1, ஆ2] (எ. ம. பல. வி. மு.)=உறங்க மாட்டா 1179.

துஞ்சின் [துஞ்சு1, இன்2] (செ யின்.எதி.வி.எ.)=உறங்கினால்1212.

துஞ்சினர் [துஞ்சு1, இன்3, ஆர்2] (பலர். இற. வி. அ.)=உறங்கினவர் கள் 926.

துஞ்சும் {துஞ்சுங்கால்} [துஞ்சு1, உம்2] (செய்யும். நிக. பெ. எ.) = உறங்குகின்ற ((பொழுது)) 1218.

**துடைத்தவர்** [துடை1, த்5, த்3, அ4, வ்7, அர்2] (பலர்.இற.வி.அ.)= நீக்கினவர் 107.

**துடைத்து** [துடை1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)= நீக்கி 615.

**துணிக** [துணி1, க2] (விய.)= ((உறுதிகொள்க))= தொடங்குக 467.

**துணிந்தபின்** [துணி1, த்5, ந்6, த்8, அ4, பின்2] (செயின். எதி. வி. எ.)= தொடங்கியபின் 467.

**துணிவு** [துணி1, வ்3, உ2] (தொ. பெ.) = முடிவு 21, 533, 671|1|; = முடிவு செய்யப்பட்ட வினை 671|2|; { துணிவாற்றி } = திட்ப முடைய வராய் ((துணிவு = கலங்காமை)) 669; { துணிவுடைமை } = ஆண்மை 383; = அஞ்சாமை 688.

**துணை** (இ. சொ.)= அளவு 22, 87, 104, 144, 156, 397, 433, 1282; (பண்.)= ஒப்புமை 310; = உதவி 36, 41, 42, 51, 76, 132, 242, 414, 460, 471, 497, 635, 651, 862, 875, 1168, 1222, 1263, 1299; = துணைவர் 1234; { வாழ்க்கைத் துணை நலம் } அதி. 6; { பெரியோரைத் துணைக் கோடல் } அதி. 45.

2520 **துணைத்து** [துணை1, த்5, து2] (ஒன். கு. மு.) = அளவினை யுடையது 87.

**துணைமை** [துணை1, மை2] (பண்.)= உதவியாந்தன்மை 688.

**துணையர்** { எனைத்துணையர் } [துணை1, ய்7, அர்2] (பலர்.கு.அ.)= பெருமை யுடையவர் 144.

**துணையாரை** [துணை1, ய்7, ஆர்2, ஐ12] (பலர்.கு.அ.2ம்வே.)= துணையாந் தன்மையுடைய வரை 447.

**துப்பார்க்கு** [து1, ப்5, ப்3, ஆர்2, க்5, கு12] (பலர் எதி.வி.அ.4ம்வே.) = உண்பவர்க்கு 12.

**துப்பின்** [து1, ப்5, ப்2, இன்4. (தொ.பெ.2ம்வே.தொ.)= வலிவினை யுடைய 895; (தொ. பெ. 7ம்வே தொ.)= பகைமைக்கண் 1165.

**துப்பு** [து1, ப்5, பு2] (தொ.பெ.) = உணவு 12; = பற்றுக்கோடு 106; = வலிமை 862.

**துப்புரவு** [து1, ப்5, பு2—துப்பு1, உரவு2] (தொ.பெ.)= நுகரப்படுவன 263, 378, 1050.

**தும்மல்** [தும்மு1, அல்2] (தொ. பெ.)= தும்முதல் 1203, 1253.

**தும்மினார்** [தும்மு1, இன்3, ஆர்2] (பலர்.இற.வி.மு.) 1312.

2530 **தும்மினீர்** [தும்மு1, இன்3, ஈர்2] (மு.ப.இற.வி.மு.) 1317.

**தும்மினேன்** [தும்மு1, இன்3, ஏன்2] (த.ஒ.இற.வி.மு.) 1317.

**தும்மு** (மு.தொ.)= தும்மல் 1318.

**துயர்** (பண்.)= துன்பம் 1135, 1165, 1256, 1275.

**துயரம்** [துயர்1, அம்2] (பண்.)= துன்பம் 792.

**துயில்** (மு.தொ.)= தூக்கம் 605.

**துயிலின்** [துயில்1, இன்12] (தொ. பெ. 5ம்வே.) = துயில் போல 1103.

**துயிற்றி** [துயில்1—துயிற்று10, இ2] (பி. வி. செய்து. இற. வி. எ.)= உறங்கப் பண்ணுதலால் 1168.

**துய்க்க** [துய்1, க்5, க2] (விய.)= உண்க 944.

**துய்த்தல்** [துய்1, த்5, தல்2] (தொ.பெ.)= நுகர்தல் 377.

2540 **துய்ப்பது** [துய்1, ப்5, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.)= நுகர்வது 1005.

**துரீஇ** { துரீஇயற்று } [துருவு1, இ2—துரீஇ11] (சொ. அள. செய்து. இற. வி. எ.)= தேடினாற் ((போன்றது)) 929.

**துலை** (பண்.)= ஒப்பு 986.

துவர [துவரு1, அ2] (செய.எதி. வி.எ.)=மிக 944 ;=முற்ற 1050.

துவ்வாதவர்க்கு [து1, வ்5, வ்7, ஆ3, த்8, அ4, வ்7, அர்2, க்5, கு12] (எ. ம. பலர். வி. அ. 4ம்வே.)=நல்கூர்ந்தார்க்கு=ஏழைகட்கு 42.

துவ்வாமை [து1, வ்5, வ்7, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.)= நுகராமை =ஏழ்மை 94.

துவ்வாய் [து1, வ்5, வ்7, ஆ3, ஆய்2] (எ.ம. மு. ஒ. வி. மு.)= நுகரக் கருதாய் 1294.

துவ்வான் [து1, வ்5, வ்7, ஆ3, ஆன்2] (எ. ம. ஆண். வி. மு.)= துவ்வினைச் செய்யான்=வலியிலன் 862 ;= நுகரமாட்டான் 1006.

துளக்கு [துளங்கு1—துளக்கு10] (பி. வி. மு. தொ.)= நடுக்கம்= நிலை பெருமை 699.

துளங்காது [துளங்கு1, ஆ3, து2] (எ. ம. வி. எ.) = அசைதலின்றி= சோம்பலின்றி 668.

2550 துளி (ஒன். பொ. பெ. ஆகு.)=மழை 16, 557.

துறக்க [துற1, க்5, க2] (விய.)= பற்றறுக 342.

துறந்தபின் [துற1, த்5, ந்6, த்8, அ4, பின்2] (செயின். எதி. வி. எ.)= துறவு கொண்டால் 342.

துறந்தமை [துற1, த்5, ந்6, த்3, அ4, மை2] (இற.தொ.பெ.)=பிரிய நேர்ந்தமை 1157.

துறந்தார் [துற1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர்.இற.வி.அ.)=பற்றினை விட்டவர் 22, 276, 348, 586 ;= நீங்கினவர் 310 ;=பிரிந்தவர் 529 ; (பலர். இற.வி. மு.)= பிரிந்து போயினார் 1188.

துறந்தாரின் [துற1, த்5, ந்6, த்3, ஆர்2, இன்12] (பலர்.இற.வி.அ.5ம் வே.)=பற்றற்றவர்போல 159.

துறந்தாரை [துற1, த்5, ந்6, த்3, ஆர்2, ஐ12] (பலர். இற. வி. அ. 2ம் வே.)= நீங்கிப் போனவரை 1250.

துறந்தார்க்கு [துற1, த்5, ந்6, த்3, ஆர்2, க்5, கு12] (பலர். இற. வி. அ. 4ம்வே.)=களை கணைவரால் துறக்கப்பட்டார்க்கு 42 ;= துறவிகட்கு 263.

துறப்பர் [துற1, ப்5, ப்3, அர்2] (பலர்.எதி.வி.மு.)= நீக்குவர் 1017.

துறப்பார் [துற1, ப்5, ப்3, ஆர்2] (பலர். எதி. வி. மு.)= துறவு கொள்வர் 378.

2560 துறவற்க [துற1, வ்7, அல்3—அற்10, க2] (எ. ம. விய.)= விடாதொழிக 106.

துறவாமை [துற1, வ்7, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)= துறவு கொள்ளாதிருத்தல் 1050.

துறவார் [துற1, வ்3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.)= துறவு கொள்ள மாட்டார்கள் 276 ;= விடமாட்டார் 806 ;= நீக்கார் 1017.

துறவு [துற1, வ்3, உ2] (தொ. பெ.)= பற்று அறுதல் ; { துறவு } = பற்றினை விடுதல் அதி. 35; { நாணுத்துறவுரைத்தல் } அதி.114; { துறவறவியல் } = வீடு பேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம் அதி. 25 முதல் 37 வரை.

துறைவன் [துறை1, வ்3, அன்2] (ஆண். இட. வரு.)=சேர்ப்பன்= காதலன் 1157, 1277.

துனி (பண்.)= வெறுப்பு769 ;= ((வெறுப்பைத் தருதலால்)) வறுமை 1010 ;= உயிர் வாழ்வதில் வெறுப்பு 1223 ;= புலவி 1294 ;= முதிர்ந்த கலாம 1306, 1322.

துனித்து [துனி1, த்5, து2] (செய்து.இற.வி.எ.)=ஊடி 1290.

துன்பங்கள் [துன்1, பம்2—பங்10, கள்2] (பல. பண்.) = துயரங்கள் 1045.

துன்பத்திற்கு [துன்பம்1— அத்து4, இன்4—இற்10, கு12] (பண். 4ம்வே.)=துன்பம் வந்தால் நீக்கு தற்கு 1299.

துன்பத்துள் [துன்பம்1, அத்து4, உள்12] (பண். 7ம்வே.) = துயரத்துள் 106, 369, 854; =முயற்சியால் வரும் இடுக்கணில் 629.

2570 துன்பம் [துன்1, பம்2] (பண்.)=துயரம் 267, 368, 369, 615, 628, 629, 669, 854, 940, 1052, 1166, 1223, 1307.

துன்பு [துன்பம்1—துன்பு10— துன்1, பு2?] (பண்.)=துயரம் 94.

துன்னற்க [துன்1, ன்5, அல்3— அற்10, க2] (எ.ம.விய.)=செய்யாதொழிக 209.

துன்னா [துன்1, ன்5, ஆ3, மல்2] (ஈ.கெ.எ.ம.வி.எ.)=கூடாமல்1250.

துன்னாமை [துன்1, ன்5, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=மேவாமை 316.

துன்னி [துன்1, ன்5, இ2] (செய்து. இற. வி. எ.) = பொருந்தி நின்று 494.

துன்னியார் [துன்1, ன்5, இ3, ய்7, ஆர்2] (பலர். இற. வி. அ.)= செறிந்தவர்=நண்பர் 188; = பொருந்திச் சென்ற அரசர் 494.

## தூ

தூ(மு. தொ.)=பற்றுக்கோடு455.

தூஉய்மை [தூய்1—தூஉய்11, மை2] (பண்.)=வான்மை=வீடு364.

தூக்கம் [தூங்கு1—தூக்கு10, அம்2] (தொ. பெ.)=((வினையை)) நீட்டித்தல் 668.

2580 தூக்காத [தூக்கு1, ஆ3, த்8, அ2] (எ. ம. பெ. எ.)=வரையறுக்காத 480.

தூக்கார் [தூக்கு1, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். மு. எ.)=ஆராய்தலிலராய் 103.

தூக்கி [தூக்கு1, இ2] (செய்து. இற.வி.எ.)=அளந்தறிந்து471, 912.

தூக்கின் [தூக்கு1, இன்2] (செயின். எதி. வி. எ.) = ஆராயின் 103.

தூக்கும் {சீர் தூக்கும் கோல், நட்பு} [தூக்கு1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = வரையறுக்கும் 118, 813.

தூங்கற்க [தூங்கு1, அல்3— அற்10, க2] (எ.ம.விய.)=நீட்டியாதொழிக 672.

தூங்காது [தூங்கு1, ஆ3, து2] (எ.ம.வி.எ.)=நீட்டியாமல் 672.

தூங்காமை [தூங்கு1, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=விரைவுடைமை 383.

தூங்கி [தூங்கு1, இ2] (செய்து. இற.வி.எ.)=நீட்டித்து 672.

தூங்குக [தூங்கு1, க2] (விய.)= நீட்டிக்க 672.

2590 தூங்கும் [தூங்கு1, உம்2] (செய்யும். நிக. வி. மு.) = தொங்குகின்றன 1163.

தூண் (ஒன்.பொ.பெ.)=கம்பம் 615, 983.

தூண்டில் (ஒன்.பொ. பெ.)= மீன் விழுங்கு முள் 931.

தூது1 (தொ.பெ.)=தூது வார்த்தை 681, 682; (ஆண்.பொ.பெ.) (சொல்லால் அஃறிணை) = தூதன் தூதர் 1228; {தூது} =சந்தி விக்கிரங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மை அதி. 69.

1. [ஆரி. தூ3, த:]

தூதோடு [தூது1, ஒடு12] (தொ. பெ. 3ம்வே.) = தூதினைக் கொண்டு 1211.

தூயார்க்கு [தூய்மை1—தூய்10, ஆர்2, க்5, கு12] (பலர்.பண்.வரு. 4ம்வே.) = தூய்மையுடையவர்க்கு 456.

தூய்மை [தூய்1, மை2] (பண்.) = வான்மை, நன்மை 159, 298, 455, 688; { வினைத் தூய்மை } அதி. 66.

தூய்மையவர் [தூய்மை1, ய்7, அ4, வ்7, அர்2] (பலர்.பொ.பெ.) = தூய்மையினையுடையார் 711, 721.

தூவாத [தூய்மை1—தூ10, வ்7, ஆ3, த்8, அ2] (எ.ம. பல. வி. அ.) = வெய்ய சொற்கள் 685.

தூவி (சினை.) = மென் சிறகு 1120.

**2600** தூவேன் { கைதூவேன் } [தூ1, வ்3, ஆ3, ஏன்2] (எ. ம. த. ஒ. வி. மு.) = ((முயற்சி)) ஒழியேன் 1021.

தூறு (ஒன். பொ. பெ.) = ((வைக்கோர்)) போர் 435.

தூற்றா [தூற்று1, ஆ2] (எ.ம. பல. வி. மு.) = அறிவிக்கமாட்டா 1157.

தூற்றார் [தூற்று1, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.) = இகழ்ந்து சொல்லார் 1190.

தூற்றும் { தூற்றும்—மரபினோர் } [தூற்று1, உம்2] (செய்யும். எதி.பெ.எ.) = இகழ்ந்து சொல்லும் ((இயல்பினையுடையார்)) 188.

## தெ

தெய்வத்தான்1 [தேவு1, அம்2—தெய்வம்10, அத்து4, ஆன்3] (ஒன். பொ. பெ. 3ம்வே.) = ஊழால் 619.

தெய்வத்துள் [தெய்வம்1, அத்து4, உள்12] (ஒன். பொ. பெ.7ம்வே.) = தேவருள் 50.

தெய்வத்தோடு [தெய்வம்1, அத்து4, ஒடு12] (ஒன். பொ. பெ. 3ம்வே.) = தேவரோடு 702.

தெய்வம் (ஒன். பொ. பெ.) = தேவர் 43; = கடவுள் 55. 1023.

தெரிதல் [தெரி1, தல்2] (தொ. பெ.) = ஆராய்ந்தறிதல் 634; = ஆராய்தல் 717; { பகைத்திறந்தெரிதல் } அதி. 88.

**2610** தெரிந்த [தெரி1, த்5, ந்6, த்3, அ2] (செய்த. இற. பெ. எ.) = ஆராய்ந்த 462, 712.

தெரிந்து [தெரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = ஆராய்ந்து ((அறிந்து)) 23, 132, 186, 501, 712, 1172; { தெரிந்து செயல்வகை } = அரசன் தான் செய்யும் வினைகளை யாராய்ந்து செய்யுந்திறம் } அதி. 47; { தெரிந்து வினையாடல் } = தெளியப்பட்டாரை அவர் செய்ய வல்ல வினைகளையறிந்து அவற்றின் கண்ணே யாளுந்திறம் அதி. 52; { தெரிந்து தெளிதல் } = அமைச்சர் முதலாயினாரை ஆராய்ந்து தெளிதல் அதி. 51.

தெரியா [தெரி1, ய்7, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.) = ஆராயாத 583.

தெரியான் [தெரி1, ய்7, ஆ3, ஆன்2] (எ.ம.ஆண்.மு.எ.) = ஆராயாதவனை 947.

தெரியுங்கால் [தெரி1, ய்7, உம்4—உங்10, கால்2] (செயின்.எதி.வி.எ.) = ஆராயுமிடத்து 503.

1. [ஆரி. தை3, வம்:]

தெரிவார் [தெரி1, வ்3, ஆர்2] (பலர். எதி. வி. அ.) = அறிபவர் 104, 329.

தெரிவான் [தெரி1, வ்3, ஆன்2] (ஆண். எதி. வி. அ.) = ஆராய்பவன் 27.

தெருளாதான் [தெருள்1, ஆ3, த்8, ஆன்2] (எ. ம. ஆண். வி. அ.) = மெய்யுணர்வு இல்லாதவன் 249.

தெவ் (பல.பண்.உரி.சொல்லால் அஃறிணை) = பகைவர் 639.

தெவ்விர் [தெவ்1, வ்5, இர்2] (மு. பலர். பெ. 8ம்வே.) = பகைவர்களே 771.

2620 தெள் { தெண்ணீர் } [தெண்மை1—தெள்10] (பண்.—ப. தொ.) = தெளிவான 1065.

தெளிதல் [தெளி1, தல்2] (தொ. பெ.) = நம்புதல்; { தெரிந்து தெளிதல் } அதி. 51.

தெளித்த [தெளி1, த்5, த்3, அ2] (பி.வி.செய்த. இற. பெ. எ.) = ஐயம் நீங்க அறிவிக்கப்பட்ட 1154.

தெளிந்தார் [தெளி1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ) = ஐயுறுதார் 143.

தெளிந்தார்க்கு [தெளி1, த்5, ந்6, த்3, ஆர்2, க்5, கு12] (பலர்.இற.வி. அ. 4ம்வே.) = மெய்யுணர்ந்தார்க்கு 353.

தெளிந்தான் [தெளி1, த்5, ந்6, த்3, ஆன்2] (ஆண். இற. வி. அ.) = ஐயந்தீர்ந்தவன் 508.

தெளிந்தான்கண் [தெளி1, த்5, ந்6, த்3, ஆன்2, கண்12] (ஆண்.இற. வி. அ. 7ம்வே.) = ஆராய்ந்து ஐயந்தீர்ந்தவன் மாட்டு 510.

தெளிவு [தெளி1, வ்3, உ2] (தொ. பெ.) = ஆராய்ந்து துணிதல் 464, 502, 510, 513.

தெள்ளியர் [தெண்மை1—தெள்10, ள்5, இ4, ய்7, அர்2] (பலர். கு.அ.) = அறிவுடையர் 374.

தெறல் [தெறு1, அல்2] (தொ. பெ.) = கெடுத்தல் 264.

2630 தெறு { தெறுபொருள் } (வி. தொ.) = திறை ((யாகக்கொளளும் பொருள்)) 756.

தெறும் [தெறு1, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = அழிக்கும் 674, 883.

தெறூஉம் { தெறூஉம்—தீ } [தெறு1—தெறூஉ11, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = சுடா நிற்கும் ((தீ)) 1104.

தெற்றென்க [தெற்றென்1, க2] (விய.) = தெளிக 581.

தென் { தென்புலத்தார் } [தெற்கு1—தென்10] (இட.) = தெற்கிலுள்ள 43.

## தே

தேய [தேய்1, அ2] (செய.இற. வி.எ.) = குறைய 96.

தேயத்து [ஆரி.தே3, ச:-தேயம்1, அத்து4] (வட.இட.7ம்வே.தொ.) = இடத்தில் 753.

தேயும் [தேய்1, உம்2] (செய்யும். எதி.வி.மு.) = குறையும் 888.

தேய்க்கும் { தேய்க்கும் படை, அரம் } [தேய்1, க்5, கு4, உம்2] (செய்யும்.எதி.பெ.எ.) = குறைக்கும் ((படை, அரம்)) 555, 567.

தேய்ந்த [தேய்1, த்5, ந்6, த்3, அ2] (பல. இற. வி. மு.) = குறைந்தன 1261.

2640 தேர் (பல. பொ. பெ.) = இரதங்கள் 496.

தேர்க்கு [தேர்1, க்5, கு12] (ஒன். பொ. பெ. 4ம்வே.) = இரதத்திற்கு 667.

பதி (இட.)=வாழிடம் 1015 ;= நிலையிடம் 1229.

பதியின் [பதி1, ய்7, இன்12] (இட. 5ம்வே.) = நிலையினின்றும் 1116.

பத்து { பத்தடுத்த } (பல. பொ. பெ.) = பத்து 817 ; = பதிற்று ((மடங்கு)) 450.

பயக்கும் [பய1, க்5, கு4, உம்2] (உரி. செய்யும். எதி.வி. மு.)=பயன் தரும், உண்டாக்கும் 97, 123, 292, 352, 659, 669, 854 ; { பயக்கும் ஊதியமும் } (செய்யும். எதி.பெ.எ.) = தரும் ((ஊதியத்தையும்)) 461.

பயத்த [பய1, த்5, த்3, அ2] (உரி. பல.இற.வி.மு.)=பயனுடையன705.

பயத்தது [பய1, த்5, த்3, அ4, து2] (உரி. ஒன். இற. வி. மு.)=பயனை யுடையது 987.

பயத்தலால் [பய1, த்5, தல்2, ஆல்12] (உரி. தொ. பெ. 3ம்வே.)= பயனைத் தருதலால் 202.

3190 பயந்து { பயந்தற்று } [பய1, த்5, ந்6, த்3, உ2] (உரி. செய்து. இற. வி. எ.)=பெய்தாற் ((போலும்)) 1192.

பயப்பது [பய1, ப்5, ப்3, அ4, து2] (உரி.ஒன். எதி. வி. அ.) (சொல்லால் அஃறிணை)=விளைவிப்பது = விளைவிப்பவன் 685, 690.

பயப்பின் [பய1, ப்5, ப்3, இன்2] (உரி. செயின். எதி. வி. எ.)=தருமாயின் 690.

பயம் (உரி. பண்.)=நன்மை, பயன் 354, 728, 740.

பயவா [பய1. வ்7, ஆ3, த்8, அ2] (உரி. ஈ. கெ. எ. ம. பெ. எ.)=விளையாத 406 ;=விளைக்காத 439, 652.

பயன் [பயம்1—பயன்15 ?] (உரி. பண்.)=நன்மை, விளைவு 2, 45, 87, 97, 103, 104, 128, 172, 177, 191, 192, 193, 194, 195, 196, 197, 198, 200 524, 606, 646, 676 994, 1078, 1100, 1109 ;=விளையுள்=விளைச்சல் 239 ;=பால் 560; = அறம் 901 ;=பொருள் 912;= பயன் படுகின்ற 216 ; { பயனில சொல்லாமை } = தமக்கும் பிறர்க்கும் ஒரு பயனும் பயவாத சொற்களைச் சொல்லாமை அதி. 20.

பயன்படும் [பயம்1—பயன்15, படு14, உம்2] (செய்யும்.எதி.வி.மு) =உள்ளது கொடுப்பர் 1078.

பயன்படுவர் [பயம்1—பயன்15, படு14, வ்7, அர்2] (பலர்.எதி.வி.மு.) =உள்ளது கொடுப்பர் 1078

பயில் { பயிறொறும் } =பழகப் பழக (மு.தொ.)=பழகு 783.

பரத்த [பர1, த்5, த்8, அன்2— பரத்த12] (ஆண்.பொ.பெ.8ம்வே.) =விடனே ! 1311.

3200 பரந்து [பர1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=எங்கும் அலமந்து 1062.

பரிதல் [பரி1, தல்2] (தொ.பெ.) =வருந்துதல் 1243.

பரிந்து [பரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=வருந்தி 88, 132 ;=கூறுபடுத்தி 1172 ;=இரங்கி 1243 ;=நொந்து ((வந்து)) 1248.

பரியது [பருமை1—பரு10, இ4, ய்7, அ4, து2] (ஒன். கு. மு. எ.)= பெரிய உடம்பினையுடையதாய் 599.

பரியின் [பரி1, ய்7, இன்2] (செயின். எதி. வி. எ.)=வருந்திக் காப்பின் 376.

பரியும் { பரியும் நாணுடையான் } [பரி1, ய்7, உம்2] (செய்யும். எதி. பெ. எ.)=அஞ்சுகின்ற 502 ; (செய்யும். எதி. வி. மு.)=தொலைக்கும் 862.

பருகுவன் [பருகு1, வ்3, அன்2] (த. ஒ. எதி. வி. மு.)=இன்பம் நுகர்வேன் 1266.

பருகுவார் [பருகு1, வ்3, ஆர்2] (பலர். எதி. வி. அ.)=((காதலின் மிகுதியால்)) குடிப்பவர் 811.

பருவத்து [பருவம்1, அத்து4] (கால. 7ம்வே. தொ.)=காலத்தில் 218, 490.

பருவத்தோடு [பருவம்1, அத்து4, ஓடு12] (காலம். 3ம்வே.) = காலத்தோடு 482.

3210 பருவந்து [பருவரல் ?)—பருவா1, (பருவரல் ?)—பருவ10, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)= துன்புற்று 83.

பருவம் (கால.) = காலநியதி 1028.

பருவரல் [பருவா1—பருவரு10, அல்2] (தொ.பெ.)=வருத்தம் 1197; =துன்பம் 1240; { பசப்புறு பருவரல் } அதி. 119.

பருவரார் [பருவா1—பருவரு10, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.)= துன்புற மாட்டார் 1126.

பல் [× சில். பன்மை1—பல்10] (பண்.—ப.தொ.)=பலவாகிய 242, 322, 735, 1045, 1258.

பல [பன்மை1—பல்10, அ2] (பல.பொ.பெ.)= அநேக 140, 275. 337, 342, 373, 492, 522, 649, 823, 868, 884, 885, 934, 1034.

பலர் [பன்மை1—பல்10, அர்2] (பலர். பொ. பெ.)= அநேகர் 270, 278, 468, 473, 514, 528, 771, 1112, 1119, 1141, 1149, 1160.

பல்லவை [பன்மை1—பல்10, ல்5, அ4, வை2] (பல. பொ. பெ. 2ம் வே.தொ.)=பல நூல்களை 728.

பல்லார் [பன்மை1—பல்10, ல்5, ஆர்2] பலர்.பொ.பெ.)=பலர் 191, 192, 194, 450, 873.

பழகிய [பழகு1, இ3, ய்7, அ2] (செய்த.இற. பெ.எ.)=பழையதாய் வந்த 803, 937.

3220 பழகுதல் [பழகு1, தல்2] (தொ.பெ.)=பயிலல் 785.

பழம் [பழு1, அம்2] (சினை.)= ((நெருஞ்சி)) முள் 1120; [பழமை1—பழம்10] (பண்.—ப. தொ.) { பழங்குடி } = தொன்று தொட்டு வருகின்ற 955.

பழி (பண்.)=தீவினை 40, 44 ;= பழிக்கப் படுதல் 62, 137 ;=குடிப்பழி 145, 146, 172, 186, 433, 506, 618, 657, 794, 865, 1015, 1051 ;= தவறு 1285.

பழிக்கும் { பழிக்கும் வினை } [பழி1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி.பெ.எ.)= தூற்றுதற்குக்காரணமாகிய 656.

பழித்தது [பழி1, த்5, த்3, அ4, து2] (ஒன். இற. வி. அ.)= குற்றம் கூறிய ((ஒழுக்கத்தை)) 280.

பழிப்பது [பழி1, ப்5, ப்3, அ4, து2] (எதி.தொ.பெ.)= தூற்றுவது= கூடாவொழுக்கம் 49.

பழிப்பார் [பழி1, ப்5, ப்3, ஆர்2] (பலர். எதி. வி. அ.)=பழி கூறுவார் 820.

பழியுள் [பழி1, ய்7, உள்12] (பண். 7ம்வே.) = பழிக்கப்படுவதில் 186.

பழுது (உரி. பண்.)=பிழை, குற்றம் செய்தல் 639.

பழுத்து { பழுத்தற்று } [பழு1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)= கனிந்தாற் ((போன்றது))216, 1008.

3230 பழைமை [பழை1, மை2] (பண்.) பறறருக்காலத்துத் தமக்குச் செய்த உதவி 521, 801; { பழைமை } =நட்டாரது பழையராந் தன்மை பற்றி அவர் பிழைத்தன பொறுத்தல் அதி. 81.

பழையம் [பைழமை1—பழை10, ய்7, அம்2] (த.ப.கு.மு.)=முன்பிருந்தே தொடர்புடையோம் 700.

பழையார்கண் [பழமை1—பழை10, ய்7, ஆர்2, கண்12] (பலர். பொ.பெ.7ம்வே.)=பழைய நண்பர்களிடத்தில் 810.

பளிங்கு (ஒன். பொ. பெ.) = கண்ணாடி போலும் ஒரு வகைக் கல் 706.

பள்ளியுள் [பள்ளி1, ய்7, உள்12] (ஒ. இட. 7ம்வே.)=((இன்பந்தரும்)) அமளிக்கண் 840.

பறந்து { பறந்தற்று } [பற1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = பறந்து போன ((தன்மைத்து)) 338.

பறியா [பறி1, ய்7, ஆ2] (செய்யா. இற. வி. எ.)=பறித்து=பிடுங்கி 774.

பறை (ஒன்.பொ.பெ.)='தப்பு' என்னும் ஒரு வகை இசைக்கருவி 1076, 1115, 1180.

பற்றற்கு [பற்று1, அல்2—அற்10, கு12] (தொ.பெ.4ம்வே.)=கொள்ளுதற்கு 747.

பற்ரு [பற்று1, ஆ3, த்8, அ2] (பற்ருத என்பது பற்ரு என விகாரமாயிற்று; எ. ம. பல. வி. அ.)= வெறுப்பன 852.

3240 பற்ருர்க்கு [பற்று1, ஆ3, ஆர்2, க்5, கு12] (எ. ம. பலர். பொ.பெ.4ம்வே.)=பகைவர்க்கு865.

பற்றி [பற்று1, இ2] (செய்து. இற.வி.எ.)=காதல் கூர்ந்து 347; = பொருந்தி ஒத்து 956|1|; = ஒத்து 956|2|.

பற்றியார் [பற்று1, இ3, ய்7, ஆர்2] (பலர். இற. வி. அ.)=பற்றிய அகத்தோர் 748.

பற்றினை [பற்று1, இன்4, ஐ12] (பண். 2ம்வே.) = நசையை 347; = வீட்டு நெறியை 350.

பற்று (மு. தொ. பெ.)—பற்றுக்கோடு (தொ. ஆகு.) 88; = நசை= விருப்பம் 275, 349, 350; = பிடித்தல் 438; = தொடர்பு 506; = செல்வம் 521, 606; (ஆகு.) = பற்றிய இடம் 748.

பற்றுக [பற்று1, க2] (விய.)= மனத்துக் கொள்க 350|1|; = மனத்தாற் செய்க 350|2|.

பற்றை [பற்று1, ஐ12] (பண். 2ம்வே.) = நசையை = ((விரும்ப வேண்டிய)) உபாயத்தை 350.

பனி (மு. தொ. பெ.) = நடுக்கம், குளிர்ச்சி 1223; (ஒன்பொ.பெ.)= நீர் 1232.

பனுவல் [பன்1, உ4, வ்7, அல்2] (தொ.பெ., = நூல் 21,

பனை (ஒன். பொ. பெ.)=பனை மரம் 104, 433, 1282.

## பா

3250 பாகம் [பகு1—பாகு10, அம்2—பாக: ஆரி ?] (பண்.) = பாதி 1092. 3

பாக்கியத்தால் [பாக்யம்—ஆரி; 4 3 —பாக்கியம்1, அத்து4, ஆல்12] (பண். 3ம்வே.)=தெய்வத்தன்மையால் 1141.

பாடற்கு [பாடு1, அல்2—அற்10, கு12] (தொ. பெ. 4ம்வே.)= பாடுதல் தொழிலோடு 573.

பாடு (பண்)=பெருமை 409, 597, 768, 1322; = ஆண்மை 906; = மேம்பாடு 1237.

பாத்தி [பகு1—பா10, த்5, த்8, இ2] (தொ.பெ. 'இ' செயப்.விகு.)= பகுக்கப்பட்ட நிலம் = வளரும் நிலம் 465.

பாத்தியுள் [பகு1—பா10, த்5, த்8, இ2, ய்7, உள்12] (தொ.பெ. 'இ' செயப்.விகு.7ம்வே.)=பகுத்த நிலத்தில் 718.

பாத்து [பகு1—பா10, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=பகுத்து =பிரித்துக் கொடுத்து 44, 227; ((பகுத்த பங்கு?)) 1107.

பாம்பு (ஒன். பொ.பெ.)=பாம்பு —ஈண்டு இராகு 1146.

பாம்போடு [பாம்பு1, ஓடு12] (ஒன். பொ. பெ. 3ம்வே.)=பாம் புடன் 890.

பாய்பவர் [பாய்1, ப்3, அ4, வ்7, அர்2] (பலர். எதி. வி. அ.—பொருள். ஆகு.) = பாய்பவர் செயல் 1287.

3260 பார் (ஒன். இட.)=வன் னிலம் 1068.

பாராட்டுதல் [பார்17, ஆடு1—ஆட்டு4, தல்2] (பி. வி. தொ. பெ.) கொண்டாடுதல் 521.

பாராட்டும் [பார்17, ஆடு1—ஆட்டு9, உம்2] (பி.வி.செய்யும்.எதி. வி.மு.)=கொண்டாடும் 994

பாராட்டுவானை [பார்17, ஆடு1—ஆட்டு9, வ்3, ஆன்2, ஐ12] (ஆண். எதி. வி. அ. 2ம்வே.)=பலகாலும் சொல்லுவானை 196.

பாரிக்கும் { பாரிக்கும் நோய் } [பாரி1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = வளர்க்கும் ((குற்றம்)) 851.

பாரித்து [பாரி1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=விரித்து 193.

பாரிப்பார் [பாரி1, ப்5, ப்3, ஆர்2] (பலர். எதி. வி. அ.)=பரப்பு கின்றவர் 916.

பார்க்கும் [பார்1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. வி. மு.)=நோக்கும் 130, 1186|2|; { பார்க்கும்—இருள் } (செய்யும். எதி. பெ. எ.)=பார்த்து நெருங்கி வரும் ((இருள்)) 1186|1|.

பார்த்து [பார்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=நோக்கி 86, 487;=சீர் தூக்கி 676.

பார்ப்பார்கண் [பார்1, ப்5, ப்3, ஆர்2, கண்12] (பலர். எதி. வி. அ. 7ம்வே.)=காணுபவரிடத்தில் 285.

3270 பார்ப்பான் [பார்1, ப்5, ப்3, ஆன்2] (ஆண். தொ. பெ.)= அந்தணன் 134.

பார்வல் [பார்1, வ்8, அல்2] (தொ.பெ.)=நோக்கு 1152.

பால் (இட.)=பக்கம் 118; (பண்.)=முறைமை 111;=பகுதி 209, 950;=வகை533;=ஊழ்வினை 376; (7ம்வே. உருபின் பொருள்)= கண், இடத்தில் 422, 999; (சினை. அல்லது ஒன். பொ. பெ.)=ஆவின் பால் 1000; { அறத்துப்பால் } = அறத்தினது பகுதி அதி. 5—38 வரை; { பொருட்பால் } = பொருளினது பகுதி அதி. 39—108 வரை; { காமத்துப்பால் } = காமத்தினது பகுதி அதி. 109—133 வரை.

பால [பான்மை1—பால்10, அ2] (பல. கு. அ.)=கூற்ற=வகைமையுடையவை 206;=முறைமையுடையவை 342, 378, 437 =பகுதியவாயவை 672.

பாலது [பான்மை1—பால்10, அ4, து2] (ஒன். கு. மு.)=தன்மையுடையது 40, 437.

பாலவை [பான்மை1—பால்10, அ4, வை2] (பல. கு. அ.) { நற்பாலவை } =((தூய வினையான் வந்த)) பொருள்கள் 659.

பாலால் [பான்மை1—பால்10, ஆல்12] (பண்.3ம்வே.)=கூறு பாட்டால் 279.

பாலோடு [பால்1, ஓடு12] (சினை. அல்லது ஒன். பொ. பெ. 3ம்வே.)= பாலுடன் 1121.

பாவம் [ஆரி. பாப:] (பண்.)= தீவினை 146.

பாவாய் [பாவை1—பாவாய்10] (பெண். பொ. பெ. 8ம்வே.—உவம ஆகு.)=((கண்ணில் உறையும்)) பாவையே ((=கருவிழியுள் தோன்றும் படிவமே)) 1123.

**3280** பாவி [ஆரி. பாபீ?] (ஒன். பண்.) = தீவினையாற் கொடியது 168, 1042

பாவை (ஒன். பொ. பெ.) = பதுமை 407, 1020, 1058.

பாழ் (பண்.) = கெடுதல் 83 ; = கெடுதலாக 735.

பாற்கண் { வன்பாற்கண் } [பால்1—பாற்10, கண்12] (இட.7ம் வே.) = ((வலிய)) நிலத்தில் 78.

பாற்று [பால்1—பாற்10, று2] (ஒன்.கு.மு.) = தன்மையுடையது 11, 829 ; = முறைமையுடையது 82, 825 ; = இயல்புடையது 515 ; = இயற்கையுடையது 871.

## பி

பிடித்து [பிடி1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ) { கடைப்பிடித்து } = ((குறிக்)) கொண்டு 944 ; { பிடித்தெரு } [பிடி1, த்5, து2] (ஒன். தொ. பெ. ஆகு.) = ஒரு கைப்பிடியளவு 1037.

பிணம் (ஒன். பொ. பெ.) = சவம் 913.

பிணி (பண்.) = நோய் 227, 734, 738, 949, 1014.

பிணிக்கு [பிணி1, க்5, கு12] (பண். 4ம்வே.) = நோயைத் ((தீர்ப்பதற்கு)) 1102.

பிணிக்கும் { பிணிக்கும்தகை } [பிணி1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = கவர்ச்சிக்கும் 643 ; (செய்யும். எதி. வி. மு.) = கூட்டா நிற்கும் 570.

**3290** பிணை (ஒன். பொ. பெ.) = பெண்மான் 1085, 1089.

பிரிதல் [பிரி1, தல்2] (தொ. பெ.) நீங்குதல் 394 ; { தலைப்பிரிதல் } = நீங்குதல் 955.

பிரித்தல் [பிரி1, த்5, தல்2] (பி. வி. தொ. பெ.) = நீக்குதல் = தனித்தனியார்க்கல் 633.

பிரிந்த { தலைப்பிரிந்த—ஒருசொல் நீர்மைத்து } [பிரி1, த்5, ந்6, த்3, அ2] (செய்த. இற. பெ. எ.) = நீங்கிய 258.

பிரிந்தவர் [பிரி1, த்5, ந்6, த்3, அ4, வ்7, அர்2] (பலர். இற. வி. அ.) = நீங்கிப் போனவர் 1248.

பிரிந்தார் [பிரி1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = விட்டு நீங்கியவர் 633, 1264.

பிரிந்து [பிரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = நீங்கி 530.

பிரிப்பர் [பிரி1, ப்5, ப்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = விலகப் பண்ணுவர் 187.

பிரியலம் [பிரி1, ய்7, அல்3, அம்2] (எ. ம. த. ப. வி. மு.) = விட்டு நீங்க மாட்டோம் 1315

பிரியா { தலைப்பிரியா } [பிரி1, ய்7, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.) = நீங்காத 97.

**3300** பிரியாதார் { தலைப்பிரியாதார் } [பிரி1, ய்7, ஆ3, த்8, ஆர்2] (எ. ம. பலர். வி. அ.) = நீங்காதவர் 810

பிரிவின்கண் [பிரி1, வ்3, உ2, இன்4, கண்12] (தொ. பெ. 7ம்வே.) = நீங்குதல் வந்துழி 839.

பிரிவு [பிரி1, வ்3, உ2] (தொ. பெ.) = நீங்குதல் 1152, 1153, 1158, 1160, 1295 ; = செலவு 1155, 1156 ; { பிரிவாற்றாமை } = வரைந்தெய்திய பின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்து செல்லும் ; செல்லுஞான்று அப் பிரிவினை அவள் ஆற்றுளாந் தன்மை அதி. 116.

பிழை (பண்.) = குற்றம் 535.

பிழைத்த [பிழை1, த்5, த்3, அ2] (இற. பெ. எ.) = ((குறி)) தவறிய 772.

பிழைத்தது [பிழை1, த்5, த்3, அ4, து2] (இற. தொ. பெ.)=தப்பியது 779.

பிழைத்து [பிழை1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=பிறழ்ந்து=பிறழ 417 ;=தவறு செய்து 896.

பிழைப்பின் [பிழை1, ப்5, ப்3, இன்2] (செயின். எதி. வி. எ.)=குற்றப் பட்டால் 1019.

பிழையாது { பிழையாதற்று } [பிழை1, ய்7, ஆ3, து2] (எ.ம.ஒன். வி. அ.—பிழையாதது = பிழையாது, தொகுத்தல்)=தவறாதது ((போன்றது)) 307.

பிழையாமை [பிழை1, ய்7, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=தவறு செய்யாமை ; { பெரியாரைப் பிழையாமை } அதி. 90.

3310 பிற [அரி. பர : ஒ. நோ.] (இ. சொ.—பல. பெ. பெ.)=மற்றவை 34, 61, 95, 120, 213, 300, 302, 495. 661, 710, 917, 1011, 1102 ; (ப. தொ.)=பிறவாகிய 8, 297, 304, 321, 909, 982 ; (அசைநிலை) 1181, 1184.

பிறக்கும் { பிறக்கும்—சோர்வு } [பிற1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.)=உண்டாதற் கேதுவாகிய 1044.

பிறங்கா [பிறங்கு1, ஆ3, த8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)=உண்டாகாத 62.

பிறங்கிற்று [பிறங்கு1, இன்3—இற்10, று2] (ஒன். இற. வி. மு.)=உயர்ந்தது 23.

பிறத்தல் [பிற1, த்5, தல்2] (தொ. பெ.)=உளவாதல் 303 ;=தோன்றுதல் 681, 992.

பிறந்த [பிற1, த்5, ந்6, த்3, அ2] (இற. பெ. எ.) = தோன்றிய 603, 1026.

பிறந்தார் [பிற1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர்.இற.வி.அ.)=தோன்றியவர் 409, 952, 954, 959.

பிறந்தார்கண் [பிற1, த்5, ந்6, த்3, ஆர்2, கண்12] (பலர். இற. வி. அ. 7ம்வே.)=தோன்றியவர்மாட்டு 951, 957, 1044.

பிறந்து [பிற1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=தோன்றி 409, 502, 794

பிறப்பின் [பிற1, ப்5, பு2, இன்4] (தொ. பெ. 7ம்வே. தொ.)=பிறப்பில் 1315

3320 பிறப்பு [பிற1, ப்5, பு2] (தொ. பெ.)=தோற்றம் 62, 107, 339, 345. 349, 351, 357, 358, 361, 972, 1002 ;=வருணம், சாதி 133, 134.

பிறர் [பிற1, ர்2] (பலர். பொ. பெ.)=மற்றவர் 157, 160, 4:4, 436, 646, 984, 1009, 1015, 1018, 1079.

பிறர்கண் [பிற1, ர்2, கண்12] (பலர். பொ. பெ. 7ம்வே.)=மற்றவரிடத்து 206.

பிறர்க்கு [பிற1, ர்2, க்5, கு12] (பலர். பொ. பெ. 4ம்வே.)=மற்றவர்க்கு 72, 311, 319, 834, 1076 ;=பிற மகளிர்க்கு 1319.

பிறவாமை [பிற1, வ்7, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.)=பிறக்காமல் இருத்தல் 362.

பிறவி [பிற1, வி2] (தொ. பெ.)=பிறப்பு=பிறத்தல் 10.

பிறற்கு [பிற1, ன்2—ற்10, கு12] (ஆண். பொ. பெ. 4ம்வே.)=மற்றவனுக்கு 149.

பிறன் [பிற1, ன்2] (ஆண். பொ. பெ.)=மற்றவன் 49, 141, 142, 144, 147, 148, 150, 163, 172, 186,

204, 287, 1047 ; { பிறனில் விழையாமை } = பிறனுடைய இல்லாளை விரும்பாமை, அதி. 15

பிறனை [பிற1, ன்2, ஐ12] (ஆண். பொ. பெ. 2ம்வே.) = தன்னோடு இயைபுடையனல்லாதானை 50.

பிறன்கண் [பிற1, ன்2, கண்12] (ஆண். பொ. பெ. 7ம்வே.) = மற்றவன்கண் 316.

**3330** பிறிதின் [பிற1—பிறி10, து2, இன்4] (ஒன்.பொ.பெ.6ம்வே. தொ.) = மற்றதனுடைய 315.

பிறிது [பிற1—பிறி10, து2] (ஒன்.பொ.பெ.) = மற்றது 251, 257, 327, 645, 841, 842.

பிறை (சினை.) = இளமதி 782.

பின் (இ. சொ.) = பிறகு 160, 184, 207, 225, 319, 323, 535, 659, 782, 791, 966, 967, 1033, 1160, 1248 1255, 1256, 1265, 1293; (வி.எ.விகு.) = 293, 342, 391, 457, 491, 509, 662, 693, 1265.

பின்றை [பின்1, ற்8, ஐ4] (இ. சொ.) = பிறகு (பின்1—பின்றை13. சிதைவு ?] 518.

பின்னது [பின்1, ன்5, அ4, து2] (ஒன்.கு.மு.) = வழியது 1031.

## பீ

பீடு (பண்.) = பெருமிதம் 59, 1014 ; = மானம் 968 ; = பெருமை 1021 ; = வலிமை 1088.

பீலி (சினை.) = மயிலின் தோகை 475.

பீழிக்கும் { பீழிக்கும் பீழை } [பீழி1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = வருத்தும் ((வருத்தம்)) 843.

பீழிப்பது [பீழி1, ப்5, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = துன்புறுத்தல் 1217.

**3340** பீழை (பண்.) = துன்பம் 658, 839 ; = வருத்தம் 843.

## பு

புகல் [புகு1, அல்2] (தொ.பெ.) = புகுதல் = நுழைதல் 144, 243, 840.

புகழ் (பண்.) = இசை 5, 39, 59, 156, 232, 233, 234, 237, 296, 457, 966 ; { புகழ் } = இவ்வுலகின் கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி அதி. 24

புகழை [புகழ்1, ஐ12] (பண். 2ம்வே.) = இசையை = கீர்த்தியை 532.

புகழொடு [புகழ்1, ஒடு12] (பண். 3ம்வே.) = இசையொடு 236, 652.

புகழ்ந்தவை [புகழ்1, ந்5, ந்6, த்3, அ4, வை2] (பல. இற. வி. அ.) = உயர்த்துக் கூறிய செயல்கள் 538.

புகழ்மை [புகழ்1, மை2] (பண்.) = இசையுடைமை 533.

புகின் [புகு1, இன்2] (செயின். எதி. வி. ஏ.) = நுழைந்தால் = கழிந்தால் 937.

புக்கு { புக்கில் } [புகு1—புக்கு9] (வி.தொ.) = இருக்கும் ((இடம்)) 340.

புகுத்திவிடும் [புகு1, த்5, த்3, இ2—விடு14, உம்2] (தே. தொ. அல்லது செய்யும்.எதி.வி.மு.) = திண்ணமாக அடைவித்துவிடும் 608, 616.

**3350** புகும் [புகு1, உம்2] (செய்யும்.எதி.வி.மு.) = எய்தும் 346.

புக்கு [புகு1—புக்கு9] (செய்து. இற.வி.எ.) = புகுந்து 835, 996.

புடை (இட.) = பக்கம் 1187

புண் (சினை. ?—ஒன்.பொ.பெ.) = சிறங்கு, வடு 129, 257, 393, 575, 776.

புணரின் [புணர்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = கூடுமாயின் 308.

புணர்ச்சி [புணர்1, ச்5, சி2] (தொ. பெ.) = ஒரு தேயத்தராதல் 785; = சேர்க்கை 887; { புணர்ச்சி மகிழ்தல் } = தலைமகள் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல் அதி. 111; { புணர்ச்சி விதும்பல் } = தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக் கண்ணே விரைதல் அதி. 129.

புணர்தல் [புணர்1, தல்2] (தொ. பெ.) = கூடல் 1109

புணர்தலின் [புணர்1, தல்2, இன்12] (தொ. பெ. 5ம்வே.) = கூடலைக்காட்டிலும் 1326.

புணர்ந்து [புணர்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.) = சேர்ந்து = சேர 1260.

புணர்பவர் [புணர்1, ப்3, அ4, வ்7, அர்2] (பலர்.எதி.வி.அ.) = மெய்யாற் பொருந்தும் மகளிர் 917.

3360 புணர்வது [புணர்1, வ்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = சேர்தல் 1307.

புணர்வு [புணர்1, வ்3, உ2] (தொ.பெ.) = மீளச் சேர்தல் 1152; = மீளக் கூடுதல் 1155.

புணை (ஒன். பொ. பெ.) = தெப்பம் 1134, 1164.

புணையை [புணை1, ய்7, ஐ12] (ஒன். பொ. பெ. 2ம்வே.) = தெப்பத்தை 306.

புதல் (இட.) = புதர் 274.

புதல்வர் [புதல்1, வ்3, அர்2] (பலர். பொ. பெ.) = ஆண் மக்கள் { புதல்வரைப் பெறுதல் } = நன்மக்களைப் பெறுதல் அதி. 7.

புதை (ஒன்.பொ.பெ.) = அம்புக்கட்டு 597.

புத்தேள் (ஆண். பொ. பெ.) = வானவன் 213, 234, 290, 966, 1323.

புத்தேளிர் [புத்தேள்1, இர்2] (பலர்.பொ.பெ.) = வானவர் 58

புயல் (ஒன். பொ. பெ.) = மழை 14

3370 புரந்தார் [புர1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = ஆண்ட மன்னவர் 780.

புரளவிடல் [புரள்1, அ2, விடு14, அல்2] (வியா.) = கழிய விடுக 755.

புரிந்த [புரி1, த்5, ந்6, த்3, அ2] (செய்த.இற.பெ.எ.) = விரும்பிய 59, 511, 994; = மிக்க 977.

புரிந்தார்கண் [புரி1, த்5, ந்6, த்3, ஆர்2, கண்12] (பலர். இற. வி. அ. 7ம்வே.) = விரும்பினவரிடத்தில் 287.

புரிந்தார்மாட்டு [புரி1, த்5, ந்6, த்3, ஆர்2, மாட்டு 12] (பலர்.இற.வி.அ. 7ம்வே.) = விரும்பினாரிடத்தில் 5.

புரிந்து [புரி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இ.ற. வி. எ.) = விரும்பி 143, 541|1; = பொருந்தி 541|2; = மிகச் செய்து 607.

புருவம் [ஆரி.ப்ரூ : ? ஒ.நோ.] (சினை.) = புருவம் 1086.

புரை (பண்.) = குற்றம் 292; (உரி.) = உயர்வு, அறிவு 919.

புல் (ஒன். பொ. பெ.) = புல் 16; [புன்மை1—புல்10] (பண்._ப.தொ.) = கீழ்மையாகிய 331, 719, 846, 914, 915, 916; (பண்.) = கீழ்மை, அற்பம் 790; { புல்லறிவாண்மை } = தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொற் கொள்ளாமை, அதி. 85.

புலத்தகை [புல1, த்5, தகு14, ஐ2] (தொ.பெ.) = புலவி மிகுதி 1305.

**3380** புலத்தக்கனள் [புல1, த்5, தகு14 — தக்கு9, அன்4, அள்2 ; புலக்க + தக்கனள் = புலத்தக்கனள்13] (பெண். இற. வி. மு.)= புலத்தற்கு ((=ஊடுதற்கு)) அமைந்தாள் 1316

புலத்தலின் [புல1, த்5, தல்2, இன்12] (தொ. பெ. 5ம்வே.)= சிறு துனி ((=ஊடல்)) செய்தல் போல 1323 ; { நெஞ்சொடு புலத்தல் } அதி. 130.

புலத்தார் { தென்புலத்தார் } [புலம்1, அத்து4, ஆர்2] (பலர். இட. வரு.)=((தென்)) திசையிலுள்ளவர் = பிதிரர் 43.

புலத்து [புலம்1, அத்து4] (இட. 7ம்வே. தொ.)= இடத்தின் கண் ((செய்யும்)) 43.

புலத்தை [புல1, த்5, த்8, ஐ2] (முன்.ஒ.எதி.வி.மு.)= நீ புலப்பாய் 1301 ; [புலம்1, அத்து4, ஐ12] (பண். 2ம்வே.)= ஐம்புலன்களை 343.

புலந்தாரை [புல1, த்5, ந்6, த்3, ஆர்2, ஐ12] (பலர்.இற.வி.அ.2ம்வே.) = பிணங்கிய மகளிரை 1303.

புலந்து [புல1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)= வெறுத்து 1039 ;= பிணங்கி 1246, 1287.

புலப்பல் [புல1, ப்5, ப்3, அல்2] (த.ஒ. எதி. வி. மு.)= நான் பிணங்குவேன் 1259.

புலப்பேன் [புல1, ப்5, ப்3, ஏன்2] (த. ஒ. எதி. வி. மு.)= நான் பிணங்கக் கடவேன் 1267.

புலம் (இட.)= வயல்85 ; (பண்.) = ஐம்புலம் 174 ;= அறிவு 417 ;= நூற்பொருள் 716.

**3390** புலம்பல் [புலம்பு1, அல்2] (உரி. தொ. பெ.)= தனிமையெய்துதல் ; { நினைந்தவர் புலம்பல் } அதி. 121.

புலவர் [புலம்1—புல10, வ்3, அர்2] . (பலர். பெ. பெ.)= நற்றுவல்லுவர் 394.

புலவரை [புலம்1—புல10, வ்3, அர்2, ஐ12] (பலர்.பெ.பெ.2ம்வே.) = ஞானிகளை 234.

புலவி [புல1, வி2] (தொ.பெ.)= பிணக்கு, இளைய கலாம் 1304, 1306, 1309 ; { புலவி } = ஒருவரோடொருவர் புலத்தல், அதி. 131 ; { புலவி நுணுக்கம் } = காரணமின்றியும் தலைமகள் புலத்தல், அதி. 132.

புலவியுள் [புல1, வி2, ய்7, உள்12] (தொ. பெ. 7ம் வே.) = பிணக்கினுள் 1324.

புலன் [புலம்1—புலன்15] (ஒன். பொ.பெ.)= நுகர் பொருள் 1101.

புலாஅல் [புலால்1—புலாஅல்11] (சினை.)= ஊன், இறைச்சி 257.

புலாலை [புலால்1, ஐ12] (சினை. 2ம்வே.)= ஊனை = இறைச்சியை 260 ; { புலான் மறுத்தல் } = ஊனுண்டலை யொழிதல் அதி. 26.

புலி (ஒன். பொ. பெ.)= வேங்கை 599.

புலியின் [புலி1, ய்7, இன்4] (ஒன். பொ. பெ. 6ம்வே. தொ.)= வேங்கையினது 273.

**3400** புலை [புன்மை1—புல்10, ஐ2 ?] (தொ. பெ.) = புலால் உண்ணுந் தொழில் 329.

புல்லல் { புற்லற்பாற்று } [புல்1, ல்5, அல்2] (தொ.பெ.)= தழுவல் 829.

புல்லாது [புல்1, ல்5, ஆ3 து2], (எ.ம.வி.எ.)= தழுவாமல் 1301.

புல்லார் [புல்1, ல்5, ஆ3, ஆர்2] (எ.ம.பலர்.வி.மு.எ.)= பொருந்தாதவராய் 755.

புல்லாவிடல் [புல்1, ல்5, ஆ3, மல்2, விடு14, அல்2] (ஈ.கெ.எ.ம.வி.

எ.—தொ.பெ.) = கல்வாமல் விட்டுச் செல்லல் 1303.

புல்லாள் [புல்1, ல்5, ஆ3, ஆள் 2] (எ.ம.பெண். வி. மு. எ.) = தழுவாதவளாய் 1316.

புல்லி [புல்1, ல்5, இ2] (செய்து. இற. வி. எ.) = தழுவி 1187, 1324.

புல்லினேன் [புல்1, ல்5, இன்3, ஏன்2] (த. ஒ. இற. வி. மு.) = தழுவினேன் 1259.

புல்லுதல் [புல்1, ல்5, உ4, தல்2] (தொ.பெ.) = தழுவுதல் 12 0.

புல்லுவேன் [புல்1, ல்5, உ4, வ்3, ஏன்2] (த. ஒ. எதி. வி. மு.) = தழுவுவேன் 1267.

**3410** புழுதி (ஒன்.பொ.பெ.) = மண், துகள் 1037.

புள் (ஒன்.பொ.பெ.) = பறவை 274, 338; ((' புள் ' என்றே ஒரு பறவை உள தென்பர்.))

புறத்த [புறம்1, அத்து4, அ2] (பல. கு. மு.) = வேறுயுள்ளவை ((= துன்பத்தினிடத்த)) 39.

புறத்தது [புறம்1, அத்து4, அ4, து2] (ஒன். கு. மு.) = வெளியில் இருப்பது 82

புறத்து [புறம்1, அத்து4] (பெ. தொ.) = புறமாகிய 46; (இட. 7ம் வே.தொ.) = வெளியில் 79.

புறப்படுத்தான் [புறம்1—புற10, ப்5, படு14, த்5, த்3, ஆன்2] (ஆண். இற. வி. அ.) = வெளிப்படுத்தினவன் 590.

புறம் (இட.) = காணுதவிடம் 181, 183, 185; = வெளியிடம் 277; = உடம்பு 298; = வெளிப்பட 487; (ஆகு.) = பிறர் 549; = பகைவர் 933; = எதிர் முகமாகாமை 924; { புறங் கூறுமை } = காணுதவழிப் பிறரையிகழ்ந்துரையாமை அதி.19.

புறன் [புறம்1—புறன்15] (இட.) = காணுதவிடம் 182; = நீங்கின அளவு 189.

புற்கென்ற [புல்கென்1, ற்3, அ2] (பல. இற. வி. மு.) = புல்லியவாயின 1261.

புற்கை [புல்1—புற்10, கை2 ?] (ஒன்.பொ.பெ.) = கஞ்சி 1065.

**3420** புன் [புன்மை1—புன்10] (பண்.—ப. தொ.) { புன்கண் } = துன்பம் 71, 1222; = அச்சம் 1152; { புன்கேண்மை } = தீ ((நட்பு))815; { புன்சொல் } = தீய ((சொல்)) = பழித் ((துரை)) 189; { புன்னலம் } = இழிந்தார்க்கே உரிய ((அழகு)) 914, 915, 916.

புனல் (ஒன். பொ. பெ.) = நீர் 737, 11'4, 1287; { கடும்புனல் } = கடல் 1167

புனலின் [புனல்1, இன்12] (ஒன். பொ. பெ. 5ம்வே.) = நீரினின்றும் 495.

புனலுள் [புனல்1, உள்12] (ஒன்.பொ.பெ.7ம்வே.) = நீருள்495.

புனை { புனைபாவை } வி. தொ.) = அணிந்த 407; (ஒன். பொ. பெ.) = தளை = விலங்கு 836.

புனைந்து [புனை1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = அணிந்து; { நலம்புனைந்துரைத்தல் } அதி. 112.

புனையின் [புனை1, ய்7, இன்2] (செயின். எதி.வி. எ.) = சிறப்பித்துக் கூறினல் 790.

புன்மை [புல்1—புன்10, மை2] (பண்.) = குற்றம்174; = கீழ்மை329.

புன்மையால் [புன்மை1, ய்7 ஆல்12] (பண். 3ம்வே.) = கீழ்மையால் 185.

## பூ

பூ (சினை.) = மலர் 1112, 1115, 1305; (சினை. ஆகு.) = மலர் மாலை 1313.

3430 பூசல் (தொ. பெ.) = தூற்றுதல் 71; = ஆரவாரம் 1237.

பூசனை [ஆரி. பூஜநு. ஒ. நோ.] (தொ.பெ.) = வழிபாடு 18.

பூணும் [பூண்1, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = மாட்டிக் கொள்ளும் 836.

பூண்டார் [பூண்1, ட்3, ஆர்2] (பலர். இற. வி அ.) = மேற் கொண்டவர் 23.

பூண்டு [பூண்1, ட்3, உ2] (செய்து. இற. வி. எ.) = விரதமாகக் கொண்டு 30.

பூதங்கள் [பூதம்1—பூதங்10, கள்2—ஆரி. பூதம் ஒ. நோ.] (பல. பொ. பெ.) = மண், நீர், எரி, கால், விசும்பு என்ற இயற்கைப் பெரும் படைப்புகள் 271.

பூப்பர் [பூ1, ப்5, ப்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = பொலிவர் 245.

பூரியர்கள் [பூரி1, ய்7, அர்2, கள்2] (பலர். பொ. பெ.) = கீழ் மக்கள் 919.

பூரியார்கண் [பூரி1, ய்7, ஆர்2, கண்12] (பலர். பொ. பெ. 7ம்வே.) = இழிந்தார்கண் 241.

## பெ

பெட்ட {பெட்டாங்கு} [பெள்1—பெட்10, ட்8, அ2] (செய்த. இற. பெ. எ.) = விரும்பிய ((படி)) 908, 1293.

3440 பெட்டார் [பெள்1—பெட்10, ட்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = விழைந்தவர் 1178.

பெட்டு [பெள்1—பெட்10, ட்3, உ2] (செய்து. இற. வி. எ.) = காதலித்து 141.

பெட்ப [பெள்1—பெட்10, ப2] (பல. இற. வி. அ.) = விரும்பியவை 1257, 1283; [பெள்1—பெட்10, ப்3, அ2] (செய. எதி. வி. எ.) = மகிழ 1276.

பெண் (பெண். பொ. பெ.) = பெண் மகள் 1083, 1084, 1272, 1311; = பெண்மை 402; = மனையாள் 56, 902, 907|1|, 909, 910; = பெண்தன்மை 907|2|; = {பெண்வழிச் சேறல்} = தன் வழி ஒழுகற்பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல் அதி. 91.

பெண்டிர் [பெண்1, ட்8, இர்2] (பலர். பொ. பெ.) = பெண்கள் 58; = மகளிர் 913, 920.

பெண்ணின் [பெண்1, ண்5, இன்12] (பெண். பொ. பெ. 5ம்வே.) = இல்லாளைக் காட்டிலும் 54; = பெண் பிறப்புப் போல 1137.

பெண்ணினால் [பெண்1, ண்5, இன்4, ஆல்12] (பெண். பொ. பெ, 3ம்வே.) = பெண்மைமேலும் 1280.

பெண்மை [பெண்1, மை2] (பண்.) = பெண்ணின் தன்மை 147, 150, 1280; = நிறையாகிய அரண் 1258.

பெய் [பெய்1, ஆய்2] (ஏ. ஒ.) = பொழிவாய் 55; {பெய் சாகாடு} (வி. தொ.) = ஏற்றிய 475.

பெய [பெய்1, அ2] (செய. நிக. வி. எ.) = இட 580.

3450 பெயரார் [பெயர்1, ஆ3, ஆர்2] (எ.ம. பலர். வி. மு.) = மாறுபடமாட்டார் 989.

பெயரின் [பெயர்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = மாறுபட்டால் 989.

பெயர்த்து [பெயர்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = மறுபடி 205, 344.

பெயர்ந்தேன் [பெயர்1, த்5, ந்6, த்3, ஏன்2] (த.ஒ.இற.வி.மு.)=மாறினேன் 1187.

பெயல் [பெய்1, அல்2] (தொ.பெ.)=பருவ மழை 545;=பொழிதல் 559;=((அழுதலால் கண்ணீர்)) பொழிதல் 1174.

பெயின் [பெய்1, இன்2] (செயின்.எதி.வி.எ.)=ஏற்றினால் 475

பெய்தாள் [பெய்1, த்3, ஆள்2] (பெண். இற. வி. மு.)=இட்டாள்= சூடினாள் 1115

பெய்து [பெய்1, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = { தலைப் பெய்து } = கண்டு 405; =சொரிந்து 660.

பெய்யும் [பெய்1, ய்5, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = பொழியும் 55

பெரிது [பெருமை1—பெரு10, இ4, து2] (ஒன். கு. மு.)=பெரியது 102, 103, 124, 328, 1092, 1166;= மிகுந்தது 1272; (கு.வி.எ.)=பெரிதாக, மிகவும் 69, 839, 947, 1276.

**3460** பெரியது [பெருமை1—பெரு10, இ4, ய்7, அ4, து2] (ஒன்.கு.மு.எ.)=பெரியதாக 902.

பெரியர் [பெருமை1—பெரு10, இ4, ய்7, அர்2] (பலர். பண்.) = பெருமையுடையவர் 26, 160.

பெரியார் [பெருமை1—பெரு10, இ4, ய்7, ஆர்2] (பலர்.பண்.வரு.)= ((ஆற்றல்களால்)) பெருமையுடையவர்=அமைச்சர், புரோகிதர், அரசர் 444, 680, 694, 896.

பெரியாரால் [பெருமை1—பெரு10, இ4, ய்7, ஆர்2, ஆல்12] (பலர்.பண்.வரு.3ம்வே.)=((ஆற்றல்களால்))பெருமையுடையவரால்892.

பெரியாரை [பெருமை1—பெரு10, இ4, ய்7, ஆர்2, ஐ12] (பலர். பண். வரு. 2ம்வே.) = ((ஆற்றல்களால்))பெருமையுடையவரை 443, 892, 976; { பெரியாரைத் துணைக் கோடல் } = பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கோடல் அதி. 45; { பெரியாரைப் பிழையாமை } = பெரியாராயினாரை ((=வேந்தரையும், முனிவரையும்)) அவமதித்து ஒழுகாமை அதி. 90.

பெரு [பெருமை1—பெரு10] (பண்—ப. தொ.)=மிக்க 380.

பெருகலின் [பெருகு1, அல்2, இன்12] (தொ. பெ. 5ம் வே.)= வளர்தலைவிட 811.

பெருகும் [பெருகு1, உம்2,] (செய்யும். எதி. வி. மு.)=மிக வளரும் 96;=பல்கும் 604.

பெருக்கத்தின் [பெருகு1—பெருக்கு9, அத்து4, இன்12] (பி. வி. தொ. பெ. 5ம்வே.)=ஆக்கத்தினின்றும் 170.

பெருக்கத்து [பெருகு1—பெருக்கு9, அத்து4] (பி. வி. தொ. பெ. 7ம்வே. தொ.)=நிறைந்த செல்வமுளதாய வழி 963.

**3470** பெருக்கம் [பெருகு1—பெருக்கு9, அம்2] (பி. வி. தொ. பெ.) =ஆக்கம் 115=செல்வம் 431.

பெருக்கி [பெருகு1—பெருக்கு9, இ2] (பி. வி. செய்து. இற. வி. எ.)= ((இறையை)) விரியச் செய்து 512.

பெருக்கற்கு [பெருகு1—பெருக்கு9, அல்2—அற்10, கு12] (பி. வி. தொ. பெ. 4ம் வே.)=வீக்குதற் பொருட்டு 251.

பெரும் [பெருமை1—பெரும்10] (பண்—ப. தொ.)=பெரியதாகிய, மிக்க 10, 54, 58, 198, 217, 332, 526, 565, 571, 667, 732, 805, 816, 837, 847, 866, 924, 968, 1000, 1001, 1006, 1137, 1201, 1239, 1255.

பெருமித [பெருமை1—பெரு10, மிதம்14—பெருமித10] (பண். 6ம்வே. தொ.)=மேம்பாட்டின் 431.

பெருமிதம் [பெருமை1— பெரு10, மிதம்14] (பண்.) = தருக்கு 979.

பெருமை [பெரு1, மை2] (பண்.) = உயர்வு, பீடு 21, 22, 23, 28, 416, 611, 974, 975; = நிலையாமை மிகுதி 336; = பெரியோரியல்பு 451; = மேம்பாடு 907; = பெருமைக்குணம் 979; (ஆகு.) = பெருமையுடையார் 978, 980; { நீத்தார் பெருமை } அதி 3; { பெருமை } = நற் குணங்களாற் பெரியாரது தன்மை அதி 98.

பெருமைக்கு [பெருமை1, க்5, கு12] (பண். 4ம் வே.) = உயர்வுக்கு 505.

பெருமையின் [பெருமை1, ய்7, இன்12] (பண். 5ம்வே.) = பெருமைபோல 1021.

பேள் { பெட்டக்கது } [பெட்கத்தக்கது — பெட்டக்கது13; பெண்மை1—பெள்10] (பண்.—பெ. எ.) விரும்ப ((த்தக்கது)) 732.

**3480** பெறல் [பெறு1, அல்2] (தொ.பெ.) = அடைதல் 213; = அறிதல் 1180.

பெறுஅ [பெறு1, ஆ3—ஆஅ11, து2] (ஈ.கெ.எ.ம.வி.எ.) = அடையாமல்.

பெறுஅது [பெறு1, ஆ3—ஆஅ11, து2] (எ. ம. வி. எ.) = அடையாமல் 1143, 1198.

பெறுஅமை [பெறு1, ஆ3—ஆஅ11, மை2] (எ. ம. தொ. பெ.) = அடையாமை 1295.

பெறுஅவிடின் [பெறுஅ1, விடு14, இன்2] (செயின்.எதி.வி.எ.) = அடையாமற் போனால் 238.

பெறின் [பெறு1, இன்2] (செயின். எதி.வி.எ.) = அடைந்தால், நேர்ந்தால் 54, 58, 62, 92, 111, 119, 123, 162, 257, 311, 334, 403, 540, 648, 666, 680, 708, 709, 812, 838, 869, 954, 988, 1270, 1295, 1330.

பெறுகுவம் [பெறு1, கு4, வ்3, அம்2] (த. ப. எதி. வி. மு.) = அடைவோம் 1328

பெறுதல் [பெறு1, தல்2] (தொ. பெ.) = அடைதல் 1190; { புதல்வரைப் பெறுதல் } அதி. 7.

பெறுதி [பெறு1, த்8, இ2] (முன். ஒ.எதி.வி.மு.) = அடைவாய் 1237

பெறும் [பெறு1, உம்2] (செய்யும்.எதி.பெ.எ.) = அடைகின்ற 61; (செய்யும். எதி. வி. மு.) = அடையும் 768, 1322.

**3490** பெறுவது [பெறு1, வ்3, அ4, து2] (எதி. தொ. பெ.) = அடைவது 46; = அடையும்விலை 813.

பெறுவர் [பெறு1, வ்3, அர்2] (பலர்.எதி.வி.மு.) = அடைவர் 58.

பெறுவான் [பெறு1, வ்3, ஆன்2] (ஆண். எதி. வி. அ.) = அடைகின்றவன் 842.

பெற்ற { பெற்றத்தால்—பெற்ற, அத்தால்—ஈறு தொகுத்தல் } [பெறு1—பெற்று9, அ2] (செய்த. இற. பெ. எ.) = அடைந்த 524, 1000, 1109.

பெற்றக்கால் [பெறு1-பெற்று9, அ4, க்5, கால்2] (செயின்.எதி.வி.எ.) = அடைந்தால் 1270.

பெற்றம் (ஒன். பொ. பொ.) = ஆன், பசு 273.

பெற்றவர் [பெறு1—பெற்று9, அ4, வ்7, அர்2] (பலர்.இற.வி.அ.) = ((காதலிக்கப்)) பெற்ற மகளிர் 1191.

பெற்றார் [பெறு1—பெற்று9, ஆர்2] (பலர். இற. வி. மு.) = அடைந்தார் 1191

பெற்றால் [பெறு1—பெற்று9, ஆல்2] (செயின். எதி. வி. எ.) = அடைந்தால் 333.

பெற்றாள் [பெறு1—பெற்று9, ஆள்2] (பெண். இற. வி. அ.) = பெற்றவள் = அடைந்தவள் 1007 (பெண். இற. வி. மு.) = அடைந்தாள் 1104.

3500 பெற்றான் [பெறு1—பெற்று9, ஆன்2] (ஆண். இற. வி. அ.) = கணவன் 58 ; = அடைந்தவன் 226, 943.

பெற்றானை [பெறு1—பெற்று9, ஆன்2, ஐ12]) ஆண். இற. வி. அ. 2ம் வே.) = அடைந்தவனை 268.

பெற்றியார் [பெற்றி1, ய்7, ஆர்2] (பலர். பொ. பெ.) = தன்மையுடையார் 442.

பெற்று {பெற்றன்ன} [பெறு1—பெற்று9] (செய்து. இற. வி. எ.) = பெற்றார் ((போன்ற)) 1143.

பெற்றேம் [பெறு1-பெற்று9, ஏம்2] (த. ப. இற. வி.மு.) = அடைந்தோம் 626.

## பே

பேஎய் [பேய்1—பேஎய்11] (ஒருமைப் பொதுப் பெயர்) = அலகை 565.

பேடி (பெண்.பொ.பெ.) = அலி 614, 727.

பேண [பேண்1, அ2] (உரி.செய. எதி.வி.எ.) = விரும்ப; பேணப்படும் [பேண1, ப்5, படு14, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = விரும்பிக் கொள்ளப் படும் 866.

பேணலர் [பேண்1, அல்3, அர்2] (உரி.எ.ம.பலர்.வி.மு.) = ((கொள்ள)) விரும்பார் 1016.

பேணா [பேண்1, ஆ3, த்8, அ2] (உரி.ஈ. கெ. எ. ம. பெ. எ.) = விரும்பாத = ((யாவரும்)) இகழும் 924.

3510 பேணாது [பேண்1, ஆ3, து2] (உரி.எ. ம.வி.எ.) = உவவாமல் = விரும்பாமல் 163, 902, 1178 ; = அவமதித்து 892, 1283.

பேணாமை [பேண்1, ஆ3, மை2] (உரி. எ. ம. தொ. பெ.) = விரும்பிக் கொள்ளாமை 833 ; = பகைமை 866.

பேணான் [பேண்1, ஆ3, ஆன்2] (உரி.எ.ம.ஆண்.வி.மு. எ.) = விரும்ப மாட்டானை 526.

பேணி [பேண்1, இ2] (உரி. செய்து. இற. வி. எ.) = விரும்பி 120, 917 ; = உவப்பன செய்து 56, 442, 443, 633, 976.

பேணியார் [பேண்1, இ3, ய்7, ஆர்2] (பலர்.இற.வி.அ.) = விரும்பப் பட்டவர் = காதலர் 1257

பேதை (ஒருமைப் பொதுப் பெயர்) (ஆண்.) = அறிவில்லாதான் 603, 816, 833, 835, 836, 837, 838, 840 ; (பெண்.) = மடமையுடைய தலை மகள் 1238, 1239, 1274 ; (ஒன்.) = அறிவில்லாதது 1248 ; {பேதைப்படுக்கும்} = அறியாமையுடையது ((ஆக்கும்)) 372.

பேதைக்கு [பேதை1, க்5, கு12] (ஒருமைப் பொதுப் பெயர் 4ம்வே.) (பெண்.) = மடமையுடைய தலை மகளுக்கு 1084, 1106 1136, 1272

பேதைமை [பேதை1, மை2] (பண்.) = அறியாமை 141, 428, 507, 805, 910, 1242 : = யாதும் அறியாமை 831, 832 ; = அவிச்சை 358 ; (ஆகு.) = அறியாமை பயக்கும் சொற்கள் 417 ; {பேதைமை} = யாதும் அறியாமை அதி. 84.

பேதைமையுள் [பேதைமை1, ய்7, உள்12] (பண். 7ம்வே.) = அறியாமைகளுள் 832.

பேதையார் [பேதை1, ய்7, ஆர்2] (பலர்.பண்.வரு.) = அறிவிலார் 142, 782, 797, 834, 839.

3520 பேதையின் [பேதை1, ய்7, இன்12] (ஒருமைப் பொதுப் பெயர். 5ம்வே.) (ஆண்.) = அறிவில்லாதவன் போல 834.

பேர் [பெருமை1—பேர்10] (பண்.—ப. தொ.) = பெரியதாகிய 148, 215, 744, 946, 962, 1083; = மிக்க 773; [பெயர்1—பேர்10] (ஒன்.பொ.பெ) = நாமம் 1190.

பேரா [பேர்1, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.) = மாறாத 370; = நீங்காத 892.

பேரும் { பேரும்—தகைத்து } [பேர்1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = பின்றுகக் கால் வாங்கும் ((தன்மைத்து)) 486.

பேர்த்து [பேர்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = மாறி 357.

பேறு [பெறு1—பேறு10] (மு. தி. தொ.) = பெறுதல் 60, 61.

பேற்றின் [பெறு1—பேறு10—பேற்று10, இன்4] (மு. தி. தொ. 7ம் வே. தொ.) = பேறுகளுள் = பெறுகின்ற வாய்ப்புகளுள் 162.

## பை

பைதல் [பை1, தல்2] (தொ.பெ.) = துன்பம் 1172, 1175, 1197, 1229, 1243, 1266; = பசப்புத் துன்பம் 1223.

பைம் [பசுமை1—பைம்10] (பண்.—ப. தொ.) = பசுமையாகிய 550; = பசும் பொன்னலாகிய 1234, 1238.

பைய [பை1, ய்7, அ2] (செப நிக. வி. எ.) = மெல்ல 1098.

## பொ

3530 பொச்சாந்தார் [பொச்சா1, த்5, ங்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. அ.) = மறந்தவர் 246.

பொச்சாந்து [பொச்சா1, த்5, ங்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = மறந்து 199, 719.

பொச்சாப்பார்க்கு [பொச்சா1, ப்5, ப்3, ஆர்2, க்5, கு12] (பலர். எதி. வி. அ. 4ம் வே.) = மறந்தொழுகுவார்க்கு 533.

பொச்சாப்பு [பொச்சா1, ப்5, பு2] (தொ. பெ.) = சோர்வு 285; = மறவி 532, 534.

பொச்சாவா [பொச்சா1, வ்7, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.) = மறவாத 537.

பொச்சாவாமை [பொச்சா1, வ்7, ஆ3, மை2] (எ. ம. தொ. பெ.) = மறவாமை; = சோர்தலைச் செய்யாமை அதி. 54.

பொதிந்து [பொதி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = ((முடிச்சாக)) முடிந்து 155.

பொது [× சிறப்பு] (பண்.) = பலவும் ஒரு தன்மையவாதல் 528, 915, 1311; = யாவர் மாட்டும் ஒரு தன்மைத்தாகிய 1099.

பொத்துப்படும் [பொந்து1—பொத்து10, ப்5, படு14, உம்2] (தே. தொ. அல்லது செய்யும். எதி. வி. மு.) = புரைபடும் = தவறும் 468.

பொய் [× மெய்] (பண்.) = இல்லாதது, மெய் அல்லாதது 6, 938, 1246.

3540 பொய்படும் [பொய்1, படு14, உம்2] (தே. தொ. அல்லது செய்யும். எதி. வி. மு.) = திண்ணமாகப் பின் ஆகாவகை உள்ளழியும் 836.

பொய்த்தபின் [பொய்1, த்5, து4 அ4, பின்2] (செயின். எதி. வி. எ.) = பொய் கூறிய பிறகு 293.

போய்த்தல் [பொய்1, த்5, தல்2] (தொ.பெ.)=புரை படுதல் 1287.

போய்த்து [பொய்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=பொய்யாகி 182, 183.

போய்ப்பின் [பொய்1, ப்5, ப்3, இன்2] (செயின்.எதி.வி.எ.)=பொய் யானல்=பொய்யாவிடில் 13.

பொய்ம்மை [பொய்1, ம்5, மை2] (பண்.)=பொய்யாந்தன்மை 292, 913.

பொய்யற்க [பொய்1, ய்5, அல்3, —அற்10, க2] (எ.ம.விய.)=பொய் கூறு தொழிக 293.

பொய்யா [பொய்1, ய்5, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)=பொய் படாத 299; { பொய்யா விளக்கம் } = நந்தா விளக்கு= அவியாத விளக்கு 753.

பொய்யாது [பொய்1, ய்5, ஆ3, து2] (எ. ம. வி. எ.)=பொய் கூறு மல் 294.

பொய்யாமை [பொய்1, ய்5, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.)=பொய் கூறுதிருத்தல் 296, 297, 323.

**3550** பொரு { பொருதகர் } (வி.தொ.)=தாக்கு ((கின்ற)) 486.

பொருட்டு (4ம்வே.சொல்லுருபு; இ.சொ.)=கு 81, 725, 784; [பொருள்1—பொருட்10, டு2] (பல. கு. மு.)=பயத்த=பயனுடையன 212; (பண்.)=காரணம் 256, 1017.

பொருத [பொரு1, த்3, அ2] (செயப்.செய்த.இற.பெ. எ.)=அரா வப்பட்ட 888.

பொருது [பொரு1, த்3, உ2] (செயப். செய்து.இற. வி. எ.)=தாக் கப்பட்டு 888.

பொருத்தல் [பொருந்து1—பொருத்து10, அல்2 × பிரித்தல்] (பி. வி. தொ. பெ.) = சேர்த்தல்= சந்தி 633.

பொருள் (பண்.)=உண்மை, மெய்ப்பொருள் 5, 351; = வினை 509; = செய்தி 423|1|2|, 695; = பயன் 199, 423|3| 434, 583; = உறுதிப் பொருள் 122, 246; = அறம் 91. 254; = குணம் 307; = சிறந்தது 741; = சொற் பொருள் = உரை 128, 424, 1046; (ஆகு.) = பொருள் நூல் 141; = நூற் பொருள் 249, 857; (ஒன். பொ. பெ.)=உடைமை=சொத்து 63, 171, 176, 212, 226, 241, 247, 248, 252, 285. 477, 501, 592, 644, 660, 751|4|, 753, 754, 755, 756, 757, 909, 911, 913, 914, 925, 933, 938, 1001, 1230; = ஒரு பண்டம்= வஸ்து=செல்வம் 178, 355, 356, 358, 371, 462, 675, 746, 751|3|, 760, 870, 897, 901, 1009; = மதிப்பு 751|1|2|.

பொருள [பொருள்1, அ2] (பல. கு. மு. எ.)=பொருளையுடையன வாய் 424.

பொருளார் [பொருள்1, ஆர்2] (பலர். பொ. பெ.)=பயனுகவுடை யவர் 914.

பொருளால் [பொருள்1, ஆல்12] (ஒன். பொ. பெ. 3ம்வே.)=பொரு ளுடையாமையால் 732.

பொருளாள் [பொருள்1, ஆள்2] (பெண். பொ. பெ.)=உரிமையான வள் 141.

**3560** பொருளான் [பொருள்1. ஆன்12] (ஒன்.பொ. பெ. 3ம் வே.)= பொருளொன்றும் உண்டாக அதனல் 1002.

பொருளை [பொருள்1, ஐ12] (ஒன். பொ. பெ. 2ம்வே.)=உடைமையை 282; =காரியத்தை 588; =மறைப் பொருளை=இரகசியத்தை 695; = செல்வத்தை 759.

போல்லாத [பொல்1, ல்5, ஆ3, த்8, அ2] (எ. ம. பல. வி. அ.)=குற்ற நெறிகள் 176.

பொழுதின் [பொழுது1, இன்12] (கால. 5ம்வே.) = நேரத்தைக்காட்டிலும் 69 ; [பொழுது1, இன்4] (கால. 7ம்வே.தொ.) = நேரத்தின்கண் 1105.

பொழுது (கால.) = நேரம், கணம் 337, 481, 1215 ; (8ம்வே.) = பொழுதே 1221 ; { பொழுதுகண்டிரங்கல் } = மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகள் இரங்குதல் அதி. 123.

பொள்ளென (இ. சொ. ஒலிக் குறிப்பு) = சரேலென 487.

பொறி (சினை) = ஐம்பொறி = மெய், வாய், கண், மூக்குச், செவி 6; (ஒன். பொ. பெ.) = விதி = வாய்ப்பு 618.

பொறியின் [பொறி1, ய்7, இன்5] (சினை. 5ம்வே.) = பொறி போல 9.

பொறுக்கும் { பொறுக்கும் வேந்தன் } [பொறு1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = பொறுத்துக்கொள்கின்ற ((மன்னவன்)) 389.

பொறுத்த [பொறு1, த்5, த்3, அ2] (செய்த. இற. பெ.எ.) = சுமந்த 239.

3570 பொறுத்தல் [பொறு1, த்5, தல்2] (தொ.பெ.) = மன்னித்தல் 151 ; (விய.) = மன்னிக்க 152.

பொறுத்தாரை [பொறு1, த்5, த்3, ஆர்2, ஐ12] (பலர். இற. வி. அ. 2ம் வே.) = பிழையைப்பொறுத்துக் கொண்டவரை 155.

பொறுத்தார்க்கு [பொறு1, த்5, த்3, ஆர்2, க்5, கு12] (பலர். இற. வி. அ. 4ம்வே.) = பிழையைப்பொறுத்துக்கொண்டவருக்கு 156.

பொறுத்தானொடு [பொறு1, த்5, த்3, ஆன்2, ஒடு12] (ஆண். இற. வி. அ.4ம்வே.) = காவுவானோடு = சுமப்பவனோடு 37.

பொறுத்து [பொறு1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) { பொறுத்தாற்றும்—ஒருசொல் நீர்து } = பொறுக்கும் = மன்னிக்கும் 579 ; = தாங்குதலால் 1032.

பொறேன் [பொறு1, ஆ3, ஏன்2] (எ. ம. த. ஒ. வி. மு.) = தாங்கும் மதுகை ((ஆற்றல்)) இல்லாதேன் 1247.

பொறை [பொறு1, ஐ2] (தொ. பெ.) = மன்னித்தல் 153, 154 ; = சுமை 189 570, 572, 733, 990, 1003, 1027 ; { பொறையுடைமை } தமக்கு மிகை செய்தவழித் தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தலையுடையராதல் அதி.16.

பொன் (ஒன்.பொ.பெ.) = தங்கம் 155, 267 ; = இரும்பு 888, 931.

பொன்றா [பொன்று1, ஆ3, த்3, அ2] (ஈ.கெ.எ.ம.பெ.எ.) = அழிவில்லாத 36.

பொன்றாது [பொன்று1, ஆ3, து2] (எ.ம.வி.எ.) = இறவாமல் 233.

3580 பொன்றாமை [பொன்று1, ஆ3, மை2] (எ.ம.தொ.பெ.) = இறவாதிருத்தல் 886.

பொன்றி [பொன்று1, இ2] (செய்து. இற. வி. எ.) = அழிந்து ((= கெடச்செய்து)) 171.

பொன்றும் { பொன்றும்—கால், துணையும் } [பொன்று1, உம்2] (செய்யும். எதி. பெ. எ.) = அழியும் ((காலத்தில்)) 36 ; = அழியும் ((அளவும்)) 156.

# போ

போஒம் { போஒம்—அளவும் } [போ1, கு4—போஒ11 கு4—உம்2, இடைக்குறை] (செய்யும். எதி. பெ. எ.)= நீங்கும் ((வரைக்கும்)) 848; (செய்யும். எதி. வி. மு.) = போய் விடும் 1070.

போஒய் [போ1—போஒ11—ய்2] (செய்து. இற. வி. எ.) = சென்று 46; = விட்டு நீங்கி 933.

போக [போ1, கு4, அ2] (செய. எதி. வி. எ.) = நீங்க, போகவிடல் [போக1, விடு14, அல்2] (தொ. பெ.) = கைவிடுதல் 831.

போகா [போ1, கு4, ஆ2] (எ. ம. வி. மு.) = நீங்கமாட்டா 370.

போகாது [போ1, கு4, ஆ3, து2] (எ. ம. ஒன். வி. அ.) { அறை போகாதாகி } = ((கிழறுக்கப்)) படாதது ((ஆகி)) 764.

போகார் [போ1, கு4, ஆ3, ஆர்2] (எ. ம. பலர். வி. மு.) = நீங்கமாட்டார் 1126.

போகு { போகாறு } [போ1, கு4] (வி. தொ.) = செலவழியும் ((வகை)) 478; { போகூழ் } = அழிக்கும் ((ஊழ்)) 371.

3590 போக்கி [போ1, கு4—போக்கு9, இ2] (செய்து. இற. வி. எ.) = செலுத்தி 774.

போக்கு [போ1, கு4—போக்கு9] (மு. வி. மு. தொ.) = கலந்து போகுதல் 332.

போதாய் [போ1, த்8, ஆய்2] (மு. ஒ. எதி. வி. மு.) = நீவருவாய், நீ போகருவாயாக 1123.

போது (சினை.) = பேரரும்பு 1227.

போம் [போ1, கு4, உம்2—போம்10—இடைக்குறை] (செய்யும். எதி. வி. மு.) = தொலையும் 659.

போர் [பொரு1—போர்10] (மு. தொ.) = சண்டை 758, 767.

போர்த்த [போர்1, த்5, த்3, அ2] (பல. இற. வி. மு.) = சுற்றி மூடியன 80.

போர்த்து [போர்1, த்5, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = போர்வையாகச் செய்து 273.

போல் (இ. சொ.—உவமவுருபு.) = நிகராக 59, 118, 120, 126, 155, 190, 253, 267, 276, 315, 334, 395, 574, 706, 781, 826, 882, 887, 940, 946, 957, 1078, 1090, 1096, 1097, 1118, 1180, 1186, 1222, 1253, 1269, 1273, 1274, 1285, 1287; = (உரையசை) 235.

போல [போல்1, அ2] (செய. எதி. வி. எ.) = ஒத்திருப்ப, ஒக்க 77, 151, 283, 288, 435, 454, 479, 614, 674, 788, 822, 888, 974, 1027, 1047, 1095, 1099, 1117, 1159, 1161, 1196, 1224.

3600 போலின் { போலினும் } [போல்1, இன்2] (செயின். எதி. வி. எ.) = ஒத்திருந்தாலும் 811.

போலும் [போல்1, உம்2] (செய்யும். எதி. வி. மு.) = ஒத்திருக்கும் 339, 552, 783, 1054, 1105, 1232, 1233; { போலும்—கூர்மையர், நிரப்பு, மாலைக்கு } (செய்யும். எதி. பெ. எ.) = ஒத்திருக்கின்ற 997, 1048, 1228|1|; (உரையசை) 1228|2|.

போல்க [போல்1, க2] (விய.) = ஒத்திருக்க 691.

போல்வர் [போல்1, வ்3, அர்2] (பலர். எதி. வி. மு.) = ஒத்திருப்பர் 997, 1071.

போழ [போழ்1, அ2] (செய. இற. வி. எ.) = நுழைந்ததாக 1239.

போழப்படாஅ [போழ்1, ப்5, படு14, ஆ3—ஆஅ11, த்8, அ2] (செயப். ஈ. கெ. எ. ம. பெ. எ.) = இடையறுக்கப்படாத 1108.

போழ்தில் [போழ்து1, இல்12] (கால.7ம்வே.) = நேரத்தில் 569, 930.

போழ்து [பொழுது1 — போழ்து10?] (கால.) = நேரம் 412, 539, 1229.

போற்றல் [போற்று1, அல்2] (விய.) = ((வராமற்)) காக்க 693.

போற்றலுள் [போற்று1, அல்2, உள்12] (தொ. பெ. 7ம்வே.) = காவல்கள் எல்லாவற்றுள்ளும் 891.

3610 போற்றாக்கடை [போற்று1, ஆ3, க்5, கடை2] (எ. ம. வி. எ.) = ((குறிக்கொண்டு)) காவாவிடத்து 315.

போற்றாதார்க்கு [போற்று1, ஆ3, த்8, ஆர்2, க்5, கு12] (எ. ம. பலர். வி. அ.) = பாதுகாவாதவர்க்கு 252.

போற்றாது [போற்று1, ஆ3, து2] (எ.ம.ஒன்.வி.மு.) = பேணாது 234.

போற்றார்கண் [போற்று1, ஆ3, ஆர்2, கண்12] (எ. ம. பலர். வி. அ. 7ம்வே.) = பகைவர் மாட்டு 493.

போற்றி [போற்று1, இ2] (செய்து. இற. வி. எ.) = காத்து 154, 477, 493; = எண்ணி 537, 538; = தெளிய அறிந்து 942.

போற்றின் [போற்று1, இன்2] (செயின். எதி. வி. எ.) = பாது காத்தால் 468; = காக்கக் கருதினால் 693.

போற்றுபவர்க்கு [போற்று1, ப்3, அ4, வ்7, அர்2, க்5, கு12] (பலர்.எதி. வி. அ. 4ம்வே.) = அடைபவர்களுக்கு 741.

போற்றுவார் [போற்று1, வ்3, ஆர்2] (பலர். எதி. வி. அ.) = தீங்கு வராமற் காப்பவர் 891.

போன்று [போல்1—போன்10, ற்3, உ2] (செய்து. இற. வி. எ.) = ஒத்து 135, 822, 1097, 1170, 1203.

## ம

மகளிர் [மக1, ள்2, இர்2] (பலர். பொ.பெ.) = பெண் பாலார் 57, 822, 912, 918, 974; { வரைவின் மகளிர் } = தந்நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார், ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு அதி. 92.

3620 மகற்கு [மக1, ன்2—ற்10, கு12] (ஆண்.பொ.பெ.4ம்வே.) = புதல்வனுக்கு 67; = ஒருவனுக்கு 110.

மகன் [மக1, ன்2] (ஆண். பொ. பெ.) = புதல்வன் 70; = மனிதன் 196.

மகனை [மக1, ன்2, ஐ12] (ஆண். பொ.பெ.2ம்வே.) = புதல்வனை 69.

மகிழ் (மு.தொ.) = மகிழ்ச்சி = களிப்புறுதல் 1090, 1201.

மகிழ்ச்சியின் [மகிழ்1, ச்5, சி?, ய்7, இன்12] (தொ.பெ.5ம்வே.) = களிப்பால் 531, 539.

மகிழ்தல் [மகிழ்1, தல்2] (தொ. பெ.) = ((உணர்வழிந்து)) களித்தல் 1281; { புணர்ச்சி மகிழ்தல் } அதி. 111.

மகிழ்ந்து [மகிழ்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.) = களிப்புற்று 1057.

மக்கட்கு [மக்கள்1—மக்கட்10, கு12] (பலர்.பொ.பெ.4ம்வே.) = மாந்தர்க்கு 388.

மக்கள் (பலர்.பொ.பெ.) = புதல்வர் 60, 61, 62, 63, 64, 65, 66, 68; = மாந்தர் 196, 410, 600, 993, 997, 1071; { நிலை மக்கள் } = வீரர் 770.

மங்கலம் [ஆரி.] (பண்.) = நன்மை 60.

3630 மட [மடமை1—மட10] (பண்.—பெ. தொ.) = வெருவுதலையுடைய 1089; = கண்டவழி நினைந்து காணாதவழி மறக்கும் தவற்றைக்

காணுதவழி நினைந்து கண்டவழி மறக்கின்ற 1297.

மடங்கின் [மடங்கு¹, இன்2] (செயின். எதி.வி.எ.)=வாளா விருப்பின் 1036.

மடந்தை [மடம்1—மட10, ந்5, தை2] (பெண். பொ. பெ.)=மங்கை 1116 1273.

மடந்தையோடு [மடம்1—மட10, ந்5, தை2, ய்7, ஒடு12] (பெண்.பொ. பெ.3ம்வே.)=மங்கையுடன் 1122.

மடமை [மட1, மை2] (பண்.)= அறியாமை 89

மடல் (சினை.)=பனையோலை, பனங்கருக்கு; (ஆகு.) பனங்கருக்கு களால் இயன்ற குதிரை ((அதன் மேல் காதலன் ஏறித் தன் காதல் துன்பத்தை வெளியிடுவன்)) 1131, 1132, 1133, 1136, 1137.

மடலொடு [மடல்1, ஒடு12] (சினை. 3ம்வே.) = மடல் ஏறுதலுடன் 1135.

மடவரல் [மடம்1—மட10, வா14—வரு10, அல்2] (பெண்.பொ.பெ.) =மங்கை 1085.

மடவார் [மடமை1—மட10, வ்7, ஆர்2] (பலர். பொ. பெ.)= அறிவிலிகள் 153.

மடவார்கண் [மடமை1—மட10, வ்7, ஆர்2, கண்12] (பலர்.பொ.பெ. 7ம்வே.)=பேதையார் மாட்டு= அறிவிலிகள் மாட்டு 89.

3640 மடி (பண்)=சோம்பல் 371, 601, 602, 603|1|, 604, 605, 606, 607, 609, 6 0, 617, 1028; =மடியில்=தன்னுள் 603|2|; (தொ. பெ. ஆகு.)=ஆடை 1023 {மடியின்மை}=கருதியன செய்யுங்கால் சோம்புதல் இல்லாமை அதி. 61.

மடிந்து [மடி1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=வீழ்ந்து= சோம்பி=சோம்புதலால் 604|2|;= நாள் உலந்து=அழிந்து 604|1|.

மடிமை [மடி1, மை2] (தொ.ப.) =சோம்பல்=காரியக்கேடு 608.

மடியும் [மடி1, ய்7, உம்2] (செய்யும்.எதி.வி.மு.)=அழியும் 603.

மடியை [மடி1, ய்7, ஐ12] (பண். 2ம்வே.)=சோம்பலை 602.

மடுத்த [மடு1, த்5, த்3, அ2] (செய்த.இற.பெ.எ.)=விலங்கிய 624.

மண் [× விண்] (ஒன்.பொ.பெ.) =சுதை 407; மண் ((=களிமண்)) 660; =தரை 966; (கருவி.ஆகு.)= மட்கலம் 883; (இட.)=நிலம் 742.

மணந்த [மண1, த்5, ந்6, த்3, அ2] (செய்த. இற. பெ. எ.)=வரைந்து கொண்ட 1233

மணந்தார் [மண1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர்.இற.வி.அ.)=வரைந்து கொண்டவர் 1221, 1226

மணல் [மண்1, அல்3?] (ஒன். பொ.பெ.)=மணல் 396.

3650 மணி [ஆரி மணி:?] (ஒன். பொ.பெ.)=மாணிக்கம் 742.

மணியில் [மணி1, ய்7, இல்12] (ஒன். பொ. பெ. 7ம்வே.)=பளிக்கு மணியகத்து 1273.

மணியின் [மணி1, ய்7, இன்4] (சினை. 7ம்வே. தொ.)=கருவிழியின் கண் ((உறையும் பாவை)) 1123.

மண்ணொடு [மண்1, ண்5, ஒடு12] (ஒன். பொ. பெ. 3ம்வே.)=மண்ணுடன் 576.

மதலை (ஒன்.பொ.பெ.)=முட்டுத் தூண் 449.

மதி [ஆரி. மதி:?] (பண்.)= ((நுண்)) அறிவு 636, 915, 1229; (ஒன்.பொ.பெ.)=திங்கள் ((=முழுமதி)) 782, 1116; (விளி வே.)= திங்களே 1118, 1119, 1210.

மதிக்கண் [மதி1, க்5, கண்12] (ஒன்.பொ.பெ.7ம்வே.)=திங்களிடத்தில் 957.

மதிக்கு [மதி1, க்5, கு12] (ஒன். பொ.பெ.4ம்வே.மயக்கம்7ம்வே.)= திங்களின்கண் 1117.

மதிப்பின் [மதி1, ப்5, ப்3, இன்2] (செயின். எதி. வி. எ.) = நினைத்தால் 898.

மந்திரியின் [ஆரி.மந்த்ரீ] [மந்திரி1, ய்7, இன்12] (ஆண். பொ. பெ. 5ம் வே.)= அமைச்சனைவிட 639

3660 மயக்கம் [மயங்கு1—மயக்கு10, அம்2] (தொ. ப.) = அவிச்சை= அறியாமை 360

மயங்கி [மயங்கு1, இ2] (செய்து. இற.வி.எ.)= அறிவிழந்து 348

மயல் (பண்.)= மயக்கம்= அறியாமை 344.

மயிர் (சினை.)= உரோமம் 964, 969.

மயில் (ஒன். பொ. பெ.)= மயில் ((பறவை)) 1081.

மர { மரப்பாவை } [மரம்1—மர10] (ஒன். பொ. பெ. —3ம்வே. உருபும் பயனும் உடன்றொக்க தொகை) = மரத்தாலான 1020, 1058.

மரத்து [மரம்1, அத்து4, (ஒன். பொ. பெ- 2ம்வே. தொ.) { மரத்தற்று } = மரம் ((போன்றது)) 217 ; { மரத்தனையர் } = மரம் ((போன்றிருப்பர்)) 576

மரபினார் [மரபு1, இன்4, ஆர்2] (பலர்.பொ.பெ.பண்.வரு.) = இயல்பினையுடையவர் 188

மரம் (ஒன்.பொபெ.)= மரம் 78, 216, 600, 879, 997, 1008.

மரீயஇவனை [மருு1, இ3–மரீஇ11, ய்7, அ4, வ்7, அன்2, ஐ12] (சொல். அள., ஆண். இற. வி. அ. 2ம்வே.) = பயின்றவனை 227.

3670 மருங்கு { மருங்கோடி } (இட. 7ம்வே. தொகை) = பக்கத்தில்= கொடு நெறியிற் ((சென்று)) 210 ; { மருங்குடையார் } (சினை.)= கிளை= சுற்றம் ((உடையார்)) 526.

மருட்டி { மருட்டியற்று } [மருள்1—மருட்டு10, இ2] (பி. வி. செய்து. இற. வி. எ.)= மயக்கினார் ((போலும்)) 1020.

மருண்டு [மருள்1—மருண்10, ட்3, உ2] (செய்து. இற. வி. எ.)= மயங்கி 1139, 1229.

மருந்து (ஒன். பொ. பெ.)= அமிழ்தம் 82 ;= ஔடதம் 217, 942, 950, 968, 1091, 1102, 1241, 1275 ; { மருந்து } = பிணிகளைத் தீர்க்கும் மருந்தின் றிறம் அதி 95.

மருவுக [மருவு1, க2] (விய)= பயில்க 800

மருள் (பண்.)= மயக்கம்= அவிச்சை 199, 351, 352 ; (வி.தொ.) மயங்கிய 1222, 1230

மருளான் [மருள்1, ஆன்12, (பண். 3ம்வே.)= மயக்கத்தால், அவிச்சையால் 1002.

மலர் (சினை.)= பூ 595, 650, 1112, 1119, 1142, 1231.

மலரின் [மலர்1, இன்12] (சினை. 5ம்வே.)= பூவைக்காட்டிலும் 1289.

மலரும் [மலர்1, உம்2] (செய்யும். எதி.வி.மு.)= விரியும் 1227.

3680 மலர்தல் [மலர்1, தல்2] (தொ.பெ.)= அலர்தல்= விரிதல் 425.

மலர்மிசை [மலர்1, மிசை12] (சினை.7ம்வே.)= மலரின்கண் 3.

மலை (இட.)= அடுக்கம் 737, 742.

மலையின் [மலை1, ய்7, இன்12] (இட. 5ம்வே.) = மலையைக்காட்டிலும் 124.

மலைந்து [மலை1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)= மேற்கொண்டு = செய்து 657.

மல்க [மல்கு1, அ2] (செய.எதி. வி.எ.)= நிரம்ப 780

மல்லல் [உரி. பண்.]= வளப்பம் 245.

மழலை [மழ—உரி.= இளமை] (பண்.) = குதலை = கொச்சைமொழி 66

மழித்தல் [மழி1, த்5, தல்2] (தொ. பெ.)= சிரைத்தல் 280

மழை (ஒன். பொ. பெ.)= மாரி 12, 15, 55 ;= கண்ணீர் 1239.

3690 மறக்கல்லா [மற1, க்5, கு4, அல்3, ல்5, ஆ4, க்8, அ2] (ஈ. கெ. எ. ம. பெ. எ.)= மறக்க முடியாத 1297.

மறத்தல் [மற்1, த்5, தல்2]=(தொ.பெ.)=நினைவொழிதல், 152; (விய.)=ஒழிக 303.

மறத்தலின் [மற்1, த்5, தல்2, இன்12] (தொ. பெ. 5ம்வே.)=மறத்தலைவிட 32.

மறத்திற்கு [மறம்1, அத்து4, இன்4—இற்10, கு12] (பண்.4ம்வே.)=தீவினையை நீக்குவதற்கு 76.

மறந்தார் [மற்1, த்5, ந்6, த்3, ஆர்2] (பலர். இற. வி. மு.)=நினைவொழிந்தார் 263

மறந்தீர் [மற்1, த்5, ந்6, த்3. ஈர்2] (மு. ப. இற. வி. மு.) = நினைத்திலீர் 1316.

மறந்து [மற்1, த்5, ந்6, த்3, உ2] (செய்து. இற. வி. எ.)=நினைவொழிந்து 204, 1284.

மறந்தேன் [மற்1, த்5, ந்6, த்3, என்2,] (த. ஒ. இற. வி. மு.)=நினைப்பொழிந்தேன் 1297.

மறப்பது [மற்1, ப்5, ப்3, அ4, து2] (எதி. தொ. பெ.)=மறத்தல் 108.

மறப்பர் [மற்1, ப்5, ப்3, அர்2] (பலர். எதி. வி. மு.)=பொச்சாப்பர்=நினைப்பொழிவர் 560.

**3700** மறப்பின் [மற்1, ப்5, ப்3, இன்2] (செயின்.எதி.வி.எ.)=நினைவொழிந்தால் 134, 1125, 1207, 1262.

மறப்பு [மற்1, ப்5, பு2] (தொ. பெ.)=பொச்சாப்பு=நினைவு ஒழிதல் 1125, 1207.

மறம் [மறு1, அம்2 ?] (பண்.)=தறுகண்மை=வீரம் 766.

மறவர் [மறம்1, வ்3, அர்2] (பலர்.பண்.வரு.)=வீரர் 778.

மறவற்க [மற்1, வ்7, அல்3—அற்10, க2] (எ. ம. விய.)=நினைவுகூர்க 106.

மறவி [மற்1, வி2] (தொ.பெ.)=பொச்சாப்பு=நினைவில்லாமை 605.

மறன் [மறு1, அம்2—மறன்15] =வீரம் 384.

மறு (பண்.)=மாசு=களங்கம், =கறை 957, 1117

மறுகில் [மறுகு1, இல்12] (இட. 7ம்வே.)=தெருவில் 1139

மறுகும் [மறுகு1, உம்2] (செய்யும். நிக. வி. மு.) = சுழலுகின்றது 1139.

**3710** மறுத்தல் [மறு1, த்5, தல்2] (தொ. பெ.) = நீக்குதல்; { புலான் மறுத்தல் } அதி. 26.

மறுத்தானை [மறு1, த்5, த்3, ஆன்2, ஐ12] (ஆண். இற. வி. அ. 2ம்வே.)=நீக்கியவனை 260.

மறுத்து [மறு1, த்5, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=மீண்டும் 312; ((உள்ளம் வேண்டிய அளவை)) ஒழித்து 945.

மறுமை [மறு1, மை2] (பண்.)= வேறு பிறப்பு=துறக்கம் 98, 459, 904, 1042.

மறை [மறு1, ஐ2 ?] (மு.தொ.)= மறைத்தல்=ஒழித்தல் 1138, 1254; =மந்திரம் 28; =((சிலர்க்கு)) மறுக்கப்படுவது=இரகசியம் 590, 695, 1076, 1180; =உபதேசம் 847.

மறைக்கும் [மறை1, க்5, கு4, உம்2] (செய்யும். எதி.வி. மு.)=மூடிவைக்கும் 980.

மறைத்தல் [மறை1, த்5, தல்2] (தொ.பெ.)=மூடுதல் 846.

மறைத்திர் [மறை1, த்5, த்8, இர்2] (மு.ப. இற.வி. மு.)=மறைக்கலுற்றீர் 1318.

மறைந்தவை [மறை1, த்5, ந்6, த்3, அ4, வை2] (பல. இற. வி. அ.)= மறையச் செய்த செயல்கள் 587.

மறைந்து [மறை1, த்5, ந்6, த்3, உ2] (செய்து.இற.வி.எ.)=ஒளிந்து 274, 278

3720 மறைப்பான் [மறை1, ப்5, ப்3, ஆன்2] (ஆண்.எதி.வி.அ.) =((குற்றம்)) வராமற் காக்க முயல் பவன் 1029

மறைப்பின் [மறை1, ப்5, ப்3 இன்2] (செயின்.எதி.வி.எ.) = வில கினல் 1086

மறைப்பேன் [மறை1, ப்5, ப்3, ஏன்2] (த. ஒ. எதி. வி. மு.)=ஒளிப் பேன் 1161, 1253.

மறையா {மறையாவழி} [மறை1, ய்7, ஆ3, த்8, அ2] (ஈ. கெ. எ.மு.பெ.எ.)=கடியாத ((போது))= இலவாக்காத ((போது)) 846

மற்ற {மற்றெல்லாம்} [மற்று1, அ2] (பல.பொ.பெ.)=பிற((=அறத் தொடு பொருந்தாது வருவன)) 39.

மற்று (இ.சொ.) அசை நிலை:— 30, 36, 60, 95, 205, 323, 596, 773, 802, 905, 1122; வினைமாற்று= 'அவ்வாறன்றி', 'ஆனல்', 'பின்', என்னும் பொருளது:—15, 16, 65, 248, 266, 349, 359, 362, 364, 459, 490, 506, 655, 695, 923, 966, 968, 1151, 1155, 1166, 1178, 1206, 1294, 1308, 1316; = பிறிது = வேறு:—173, 221, 380, 58 , 591, 1033; =மீண்டு 356; {மற்றும்} = பின்னும் 344 345, 373, 540.

மற்றைய [மற்று1, ஐ4, ய்7, அ2] (பல. பொ. பெ.) = பிற 289;= ((அஃது)) ஒழிந்தவை 661.

மற்றையவர் [மற்று1, ஐ4, ய்7, அ4, வ்7, அர்2] (பலர்.பொ.பெ.)= பிறர் 348.

மற்றையவர்கள் [மற்று1, ஐ4, ய்7, அ4, வ்7, அர்2, கள்18] (பலர். பொ.பெ.)=பிறர்கள் 263.

மற்றையவை [மற்று1, ஐ4, ய்7, அ4, வை2] (பல. பொ. பெ.)= ஒழிந்த பிற 490.

3730 மற்றையார் [மற்று1, ஐ4, ய்7, ஆர்2] (பலர். பொ. பெ.) =பிறர் 365.

மற்றையான் [மற்று1, ஐ4, ய்7, ஆன்2] (ஆண். பொ. பெ.) = பிறன் 214

மன் (இ. சொ.) அசைநிலை:— 819. 1016, 1146, 1164, 1327; ஒழியிசை=சொல்லா தொழிந்த சொற்களால் பொருளை இசைப் பது:—378, 540, 990, 996, 1086. 1102, 1125, 1161, 1165. 1170, 1178, 1184, 1189, 1206, 1207, 1212, 1216, 1253, 1254, 1265, 1266, 1284; ஆக்கம்:—1329; மிகுதி:—1138; நிலைபேறு {மன்னுயிர்}:—68, 244, 268, 318, 457, 1168.

மன {மனக்கவலை} [மனம்1—மன10] (ஒன். பொ. பெ. 7ம்வே. உருபும் பயனும் உடன் தொக்க தொகை)=மனத்தின்கண் நிகழும் ((கவலை)) 7; {மன நலம்} (6ம்வே. தொ.)=மனத்தது ((நன்மை)) 457. 458, 459; {மனத்திட்பம்} = மனத் தினது ((திண்மை)) 661; {மனப் பெண்டிர்} (2ம்வே.உருபும் பயனும் உடன் தொக்க தொகை)=மனத் திணையுடைய ((மகளிர்)) 920.

மனத்தது [மனம்1, அத்து4, அ4, து2] (ஒன். கு. மு. எ.)=நெஞ்சத் துள்ளது 278.

மனத்தான் [மனம்1, அத்து4, ஆன்2] (ஆண். பொ. பெ.)=உள்ள முடையவன் 271; [மனம்1, அத்து4, ஆன்12] (ஆண்.பொ.பெ.3ம்வே.)= உள்ளத்தோடு317; =மனம் காரண மாக 453.

மனத்தின் [மனம்1, அத்து4, இன்4] (ஒன்.பொ.பெ.3ம்வே.தொ.) =உள்ளத்தால் 825.

மனத்து [மனம்1, அத்து4] (ஒன். பொ. பெ. 7ம்வே. தொ.)=உள்ளத் தின்கண் 454.

## 4. அறன்வலியுறுத்தல்

சிறப்பீனுஞ் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்(கு)
ஆக்க மெவனோ உயிர்க்கு. 31

அறத்தினூஉங்(கு) ஆக்கமு மில்லை யதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு. 32

ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 33

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 34

அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம். 35

அன்றறிவா மென்னா(து) அறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. 36

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை 37

வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 38

அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. 39

செயற்பால தோரும் அறனே யொருவற்கு
உயற்பால தோரும் பழி. 40

## 5. இல்வாழ்க்கை

இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. 41

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை. 42

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென் [றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை. 43

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்று மில். 44

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்
போஒய்ப் பெறுவ தெவன். [றில் 46

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. 47

ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து. 48

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. 49

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். 50

## 6. வாழ்க்கைத்துணை நலம்

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 51

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில். 52

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. 53

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 54

தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. 55

தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 56

சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 57

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்
புத்தேளிர் வாழு முலகு. [புப் 58

புகழ்புரிந்(த) இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 59

மங்கல மென்ப மனைமாட்சி, மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. 60

## 7. மக்கட்பேறு

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. 61

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 62

தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும். 63

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 64

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு. 65

குழலினி(து) யாழினி(து) என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 67

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. 68

ஈன்ற பொழுதில் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். 69

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல். 70

## 8. அன்புடைமை

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். 71

அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு. 72

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்(கு)
என்போ டியைந்த தொடர்பு. 73

அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. 74

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்துஞ் சிறப்பு. 75

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 76

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். 77

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 78

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு. 79

அன்பின் வழிய(து) உயிர்நிலை அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு. 80

## 9. விருந்தோம்பல்.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 81

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 82

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 83

அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல். 84

வித்து மிடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். 85

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 86

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். 87

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். 88

உடைமையு ளின்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்க ணுண்டு. 89

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 90

## 10. இனியவைகூறல்

இன்சொலா லீரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 91

அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்(து)
இன்சொல னாகப் பெறின். 92

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம். 93

துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சொ லவர்க்கு 94

பணிவுடைய னின்சொல னாதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 95

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 96

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற்றலைப்பிரியாச் சொல். 97

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையு மின்பந் தரும் 98

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. 99

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

## 11. செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. 101

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 102

பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது. 103

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 104

உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 105

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. 106

எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. 107

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. 108

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். 109

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 110

## 12. நடுவுநிலைமை

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின். 111

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து. 112

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 113

தக்கார் தகவில ரென்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும். 114

கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 115

கெடுவல்யா னென்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின். 116

கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. 117

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொரு
கோடாமை சான்றோர்க் கணி. [பாற் 118

சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்ட மின்மை பெறின். 119

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். 120

## 13. அடக்கமுடைமை

அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும். 121

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு. 122

செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றி னடங்கப் பெறின். 123

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினும் மாணப் பெரிது. 124

எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 125

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து. 126

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 127

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்
நன்றாகா தாகி விடும். 128

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. 129

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து. 130

## 14. ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். 131

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. 132

ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 133

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். 134

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. 135

ஒழுக்கத்தி னொல்கா ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. 136

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி. 137

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 138

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். 139

உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். 140

## 15. பிறனில்விழையாமை

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை
அறம்பொருள் கண்டார்க ணில். [ஞாலத்(து) 141

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். 142

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார். 143

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். 144

எளிதென இல்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. 145

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண். 146

அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். 147

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்(கு)
அறனொன்றோ ஆன்ற வொழுக்கு. 148

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோள்தோயா தார். 149

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

## 16. பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

பொறுத்த லிறப்பினை என்றும் அதனை
மறத்த லதனினும் நன்று. 152

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 153

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை
போற்றி யொழுகப் படும். [யுடைமை 154

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 155

ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். 156

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்(து)
அறனல்ல செய்யாமை நன்று. 157

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல். 158

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். 159

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின். 160

## 17. அழுக்காறாமை

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்றன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு. 161

விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 162

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். 163

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து. 164

அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. 165

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும். 166

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 167

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 168

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 159

அழுக்கற் றகன்றாரு மில்லைஅஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். 170

## 18. வெஃகாமை

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். 171

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 172

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 173

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 174

அஃகி யகன்ற அறிவென்னாம் யார்மட்டும்
வெஃகி வெறிய செயின். 175

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்
பொல்லாத சூழக் கெடும்.
[வெஃகிப் 176

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். 177

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 178

அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. 179

இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு. 180

## 19. புறங்கூறாமை

அறங்கூறா னல்ல செயினும் ஒருவன்
புறங்கூறா னென்ற லினிது. 181

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 182

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும். 183

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். 184

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்
புன்மையாற் காணப் படும். [சொல்லும் 185

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும். 186

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட லேற்றா தவர். 187

துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு. 188

அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. 189

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு. 190

## 20. பயனிலசொல்லாமை

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். 191

பயனில பல்லார்முற் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. 192

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை. 193

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து. 194

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். 195

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 196

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 197

அரும்பய னாயும் அறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல். 198

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். 199

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 200

## 21. தீவினையச்சம்

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. 201

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். 202

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். 203

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. 204

இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. 205

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். 206

எனைப்பகை உற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். 207

தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. 208

தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். 209

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின். 210

## 22. ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு. 211

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 212

புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற. 213

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 215

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின். 216

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின். 217

இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். 218

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யா தமைகலா வாறு. 219

ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. 220

## 23. ஈகை

வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர் துடைத்து. 221

நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. 222

இலனென்னு மெவ்வ முரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள. 223

இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணு மளவு. 224

ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். 225

அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 226

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. 227

ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 228

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். 229

சாதலி னின்னாத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை. 230

## 24. புகழ்

ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதிய மில்லை உயிர்க்கு. 231

உரைப்பா ருரைப்பவை யெல்லாம் இரப்பார்க்
றீவார்மே னிற்கும் புகழ். [கொன் 232

ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். 233

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. 234

நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. 235

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. 236

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன். 237

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்
எச்சம் பெறாஅ விடின். [னும் 238

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். 239

வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 240

## 25. அருளுடைமை

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்
பூரியார் கண்ணு முள. [செல்வம் 241

நல்லாற்றா னாடி அருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. 242

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 243

மன்னுயி ரோம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. 244

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி. 245

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்பர் அருணீங்கி
அல்லவை செய்தொழுகு வார். 246

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு. 247

பொருளற்றார் பூப்ப ரொருகால் அருளற்றார்
அற்றார்மற் றாத லரிது. 248

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யும் அறம். 249

வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. 250

## 26. புலான்மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். 251

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்றின் பவர்க்கு 252

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றன்
உடல்சுவை யுண்டார் மனம். [றன் 253

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். 254

உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு. 255

தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். 256

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். 257

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த ஊன். 258

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. 259

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும். 260

## 27. தவம்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. 261

தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது. 262

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம். 263

ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும். 264

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும். 265

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு. 266

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 267

தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். 268

கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. 269

இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். 270

## 28. கூடாவொழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும். 271

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின். 272

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. 273

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று. 274

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கம் எற்றெற்
றேதம் பலவுந் தரும். [றென் 275

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில். 276

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. 277

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். 278

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். 279

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின். 280

## 29. கள்ளாமை

எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்தொன்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. [றுங் 281

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். 282

களவினா லாகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும். 283

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். 284

அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில். 285

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர். 286

களவென்னுங் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில். 287

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. 288

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 289

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. 290

## 30. வாய்மை

வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். 291

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். 292

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 293

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன். 294

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 295

பொய்யாமை யன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும். 296

பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 297

புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 298

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 299

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்
வாய்மையி னல்ல பிற. [றும் 300

## 31. வெகுளாமை

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்
காக்கினென் காவாக்கா லென். [துக் 301

செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற. 302

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். 303

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. 304

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம். 305

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்
ஏமப் புணையைச் சுடும். [னும் 306

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 307

இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 308

உள்ளிய வெல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். 309

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 310

## 32. இன்னாசெய்யாமை

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 311

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 312

செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும். 313

இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 314

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை. 315

இன்னா எனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். 316

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை. 317

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். 318

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். 319

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்
நோயின்மை வேண்டு பவர். [செய்யார் 320

## 33. கொல்லாமை

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். 321

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. 322

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 323

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி. 324

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. 325

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்
செல்லா துயிருண்ணுங் கூற்று. [நாண்மேற் 326

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. 327

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை. 328

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. 329

உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். 330

## 34. நிலையாமை

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 331

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று. 332

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். 333

நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின். 334

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். 335

நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 336

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல. 337

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. 338

உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 339

புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுட்
டுச்சி லிருந்த உயிர்க்கு. 340

## 35. துறவு

யாதனின் யாதனி னீங்கியான் நோதல்
அதனி னதனின் இலன். 341

வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல. 342

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு. 343

இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து. 344

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை. 345

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும். 346

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 347

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 348

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். 349

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 350

## 36. மெய்யுணர்தல்

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானம் மாணாப் பிறப்பு. 351

இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 352

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து. 353

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. 354

எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 355

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 356

ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 357

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு. 358

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். 359

காமம் வெகுளி மயக்க மிவைமூன் றன்
நாமங் கெடக்கெடும் நோய். 360

## 37. அவாவறுத்தல்

அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. 361

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 362

வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டு மஃதொப்பதில். 363

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். 364

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர். 365

அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரு மவா. 366

அவாவினை யாற்ற அறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். 367

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். 368

இன்ப மிடையறா தீண்டும் அவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். 369

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். 370

## 38. ஊழ்

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்றும் மடி. 371

பேதைப் படுக்கு மிழவூழ் அறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை. 372

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும். 373

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 374

நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு 375

பரியினு மாகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம. 376

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. 377

துறப்பார்மற் றுப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின். 378

நன்றாங்கா னல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். 379

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தாள்முந் துறும் 380

பொருள் **39. இறைமாட்சி** அரசியல்

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு. 381

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு. 382

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு. 383

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. 384

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. 385

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறும் மன்ன னிலம். 386

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு. 387

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். 388

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. [தன் 389

கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி. 390

## 40. கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. 391

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. 392

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 393

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 394

உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். 395

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. 396

யாதானும் நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. 397

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையு மேமாப் புடைத்து. 398

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 399

கேடில் விழுச்செல்வங் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 400

## 41. கல்லாமை

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். 401

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. 402

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். 403

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். 404

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 405

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். 406

நுண்மா ணுழைபுல மில்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று. 407

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. 408

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. 409

விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். 410

## 42. கேள்வி

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்
செல்வத்து ளெல்லாந் தலை.
[வஞ் 411

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். 412

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. 413

கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. 414

இழுக்க லுடையுழி ஊற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல். 415

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 416

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்
தீண்டிய கேள்வி யவர்.
[துணர்ந் 417

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. 418

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. 419

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென். 420

## 43. அறிவுடைமை

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். 421

சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. 422

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. [பொருள் 423

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்
நுண்பொருள் காண்ப தறிவு. [வாய் 424

உலகந் தழீஇய தொட்பம் மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு. 425

எவ்வ துறைவ துலகம் உலகத்தோ(டு)
அவ்வ துறைவ தறிவு. 426

அறிவுடையா ராவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். 427

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில். 428

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய். 429

அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர். 430

## 44. குற்றங்கடிதல்

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார் 431
பெருக்கம் பெருமித நீர்த்து.

இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா 432
உவகையு மேத மிறைக்கு.

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக் 433
கொள்வர் பழிநாணு வார்.

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே 434
அற்றந் தரூஉம் பகை.

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் 435
வைத்தூறு போலக் கெடும்.

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு. 436

செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். 437

பற்றுள்ள மென்னு மிவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. 438

வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. 439

காதல காத லறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். 440

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். 441

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 442

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 443

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 444

சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். 445

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். 446

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். 447

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 448

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை. 449

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 450

## 46. சிற்றினஞ்சேராமை

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். 451

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்(கு)
இனத்தியல்ப தாகும் அறிவு. 452

மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல். 453

மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகு மறிவு. 454

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். 455

மனந்தூயார்க் கெச்சநன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை. 456

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும். 457

மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து. 458

மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து. 459

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில். 460

## 47. தெரிந்துசெயல்வகை

அழிவதூஉம் ஆவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல். 461

தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்று மில். 462

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார். 463

தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர். 464

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. 465

செய்தக்க அல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். 466

எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு. 467

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். 468

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. 469

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. 470

## 48. வலியறிதல்

வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். 471

ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லா ததில். 472

உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். 473

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும். 474

பீலிபெய் சாகாடும் அச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 475

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 476

ஆற்றி னளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கு நெறி. 477

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை. 478

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 479

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். 480

## 49. காலமறிதல்

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. 482

அருவினை யென்ப உளவோ கருவியாற்
கால மறிந்து செயின். 483

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி இடத்தாற் செயின். 484

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். 485

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. 486

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர். 487

செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை. 488

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல். 489

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 490

## 50. இடனறிதல்

தொடங்கற்க எவ்வினையு மெள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. 491

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும். 492

ஆற்றாரு மாற்றி யடுப இடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். 493

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 494

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கி னதனைப் பிற. 495

கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடும்
நாவாயு மோடா நிலத்து. 496

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின். 497

சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையான்
ஊக்க மழிந்து விடும். 498

சிறைநல னுஞ் சீரு மிலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோ டொட்ட லரிது. 499

காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு. 500

## 51. தெரிந்துதெளிதல்

அறம்பொரு ளின்ப முயிரச்சம் நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும். 501

குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு. 502

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு. 503

குணநாடிக் குற்றமு நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 504

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். 505

அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. 506

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். 507

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். 508

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். 509

தேரான் றெளிவுந் தெளிந்தான்கண் ணையுறவுந்
தீரா இடும்பை தரும். 510

## 52. தெரிந்துவினையாடல்

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். 511

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை. 512

அன்பறிவு தேற்ற மவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 513

எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகை
வேறாகும் மாந்தர் பலர். [யான் 514

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. 515

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த உணர்ந்து செயல். 516

இதனை இதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்து
அதனை யவன்கண் விடல். 517

வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். 518

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு. 519

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. 520

## 53. சுற்றந்தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 521

விருப்பறாச் சுற்ற மியையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும். 522

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. 523

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். 524

கொடுத்தலு மின்சொலு மாற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். 525

பெருங்கொடையான் பேணன் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். 526

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. 527

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். 528

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும். 529

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல். 530

## 54. பொச்சாவாமை

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு. 531

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 532

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு. 533

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 534

முன்னுறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்னா றிரங்கி விடும். 535

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். 536

அரியவென் றாகாத இல்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். 537

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யாது
இகழ்ந்தார்க் கெழுமையு மில். 538

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 539

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின். 540

## 55. செங்கோன்மை

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. 541

வானோக்கி வாழு முலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 542

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு. 544

இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. 545

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின். 546

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 547

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றானே கெடும். 548

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். 549

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்
களைகட் டதனொடு நேர். [கூழ் 550

## 56. கொடுங்கோன்மை

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்
டல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண் 551

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. 552

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். 553

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு. 554

அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்
மன்னுவா மன்னர்க் கொளி. [றேன் 556

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு. 557

இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். 558

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நான்மறப்பர்
காவலன் காவா னெனின். 560

## 57. வெருவந்தசெய்யாமை

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து. 561

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 562

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும். 563

இறைகடிய னென்றுரைக்கும் இன்னாச்சொல்
உறைகடுகி ஒல்லைக் கெடும். [வேந்தன் 564

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. 565

கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும். 566

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். 567

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. 568

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 569

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. 570

## 58. கண்ணோட்டம்

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு. 571

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 572

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்
கண்ணோட்ட மில்லாத கண். [ணென்னுங் 573

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். 574

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். 575

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். 576

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில். 577

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. 578

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. 579

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 580

## 59. ஒற்றாடல்

ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். 581

எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். 582

ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். 583

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று. 584

கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று. 585

துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. 586

மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று. 587

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல். 588

ஒற்றொற் றுணராமை யாள்க உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும். 589

சிறப்பறிய ஒற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகும் மறை. 590

## 60. ஊக்கமுடைமை

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று. 591

உள்ள முடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். 592

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார். 593

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை. 594

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 595

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. 596

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு. 597

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. 598

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. 600

## 61. மடியின்மை

குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். 601

மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 602

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. 603

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. 604

நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன். 605

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடை
மாண்பய னெய்த லரிது. [யார் 606

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். 607

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். 608

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். 609

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு. 610

## 62. ஆள்வினையுடைமை

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 611

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. 612

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. 613

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். 614

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். 615

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளா டாமரையி னாள். 617

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. 618

தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். 620

## 63. இடுக்கணழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். 621

வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும். 622

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். 623

மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து. 624

அடுக்கி வரினும் அழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும். 625

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்றா தவர். 626

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல். 627

இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன். 628

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். 629

இன்னாமை இன்ப மெனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. 630

## 64. அமைச்சு

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு. 631

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. 632

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. 633

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. 634

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. 635

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. 636

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல். 637

அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 638

பழுதெண்ணும் மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். 639

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர். 640

## 65. சொல்வன்மை

நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று. 641

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 642

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். 643

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில். 644

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. 645

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள். 646

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது. 647

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 648

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர். 649

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். 650

## 66. வினைத்தூய்மை

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். 651

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 652

ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர். 653

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 654

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று. 655

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 656

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. 657

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். 658

அழக்கொண்ட வெல்லாம் அழப்போ மிழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. 659

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. 660

## 67. வினைத்திட்பம்

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. 661

ஊறொரா லுற்றபி னொல்காமை இவ்விரண்டின்
ஆறென்ப ராய்ந்தவர் கோள். 662

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்
எற்றா விழுமந் தரும். [கொட்கின் 663

சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். 664

வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி யுள்ளப் படும். 665

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். 666

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. 667

கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல். 668

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 669

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு. 670

## 68. வினைசெயல்வகை

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது. 671

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 672

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 673

வினைபகை யென்றிரண்டி னெச்சம் நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும். 674

பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 675

முடிவு மிடையூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 676

செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல். 677

வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 678

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல். 679

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 680

## 69. தூது

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. 681

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று. 682

நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. 684

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது. 685

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது. 686

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. 687

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். 689

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. 690

## 70. மன்னரைச்சேர்ந்தொழுகல்

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 691

மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். 692

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது. 693

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து. 694

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை. 595

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 696

வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். 697

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும். 698

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்
துளக்கற்ற காட்சி யவர். [யார் 699

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். 700

## 71. குறிப்பறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. 701

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். 702

குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். 703

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு. 704

குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண். 705

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம். 706

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். 707

முகநோக்கி நிற்க அமையும் அகநோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின். 708

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின். 709

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற. 710

## 72. அவையறிதல்

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். 711

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். 712

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில். 713

ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். 714

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. 715

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. 716

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. 717

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. 718

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார். 719

அங்கணத்து ளுக்க அமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். 720

## 73. அவையஞ்சாமை

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். 721

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். 722

பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்
அவையகத் தஞ்சா தவர். 723

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். 724

ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. 725

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு. 726

பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். 727

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார். 728

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். 729

உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். 730

## 74. நாடு

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. 731

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு. 732

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. 733

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. 734

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பு மில்லது நாடு. 735

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. 736

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. 737

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. 738

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. 739

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. 740

## 75. அரண்

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். 741

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடு முடைய தரண். 742

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல். 743

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்க மழிப்ப தரண். 744

கொளற்கரி தாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளி தாம்நீர தரண். 745

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவும்
நல்லா ளுடைய தரண். 746

முற்றியு முற்று தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண். 747

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண். 748

முனைமுகத்து மாற்றலர் சாய விணைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண். 749

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். 750

## 76. பொருள்செயல்வகை

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். 751

இல்லாரை எல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு. 752

பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 754

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். 755

உறுபொருளு முல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. 757

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. 758

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில். 759

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு. 760

## 77. படைமாட்சி

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை. 761

உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. 762

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். 763

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. 764

கூற்றுடன் று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 765

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே ஏமம் படைக்கு. 766

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து. 767

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும். 768

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை. 769

நிலைமக்கள் சால உடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். 770

## 78. படைச்செருக்கு

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர். 771

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. 772

பேராண்மை என்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு. 773

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 775

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை யெடுத்து. 776

சுழலு மிசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். 778

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். 779

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. 780

## 79. நட்பு

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. 781

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. 782

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடையாளர் தொடர்பு. 783

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. 784

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும். 785

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. 786

அழிவி னவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதாம் நட்பு. 787

உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்றும் நிலை. 789

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. 790

## 80. நட்பாராய்தல்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. 791

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். 792

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு. 793

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. 794

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். 795

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். 796

ஊதிய மென்ப தொருவதற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். 797

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. 798

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினு முள்ளஞ் சுடும். 799

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு. 800

## 81. பழைமை

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. 801

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். 802

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. 803

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின். 804

பேதைமை யொன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 805

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. 806

அழிவந்த செய்யினும் அன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். 807

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின். 808

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. 809

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். 810

## 82. தீநட்பு

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. 811

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். 812

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரும் நேர். 813

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை. 814

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று. 815

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும். 816

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். 817

ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். 818

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. 820

## 83. கூடாநட்பு

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதன் மாணார்க் கரிது. 823

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். 824

மனத்தி னமையா தவரை எனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. 825

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும். 826

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வ
தீங்கு குறித்தமை யான். [ணக்கம் 827

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்து. 828

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. 829

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். 830

## 84. பேதைமை

பேதைமை யென்பதொன் றியாதெனின் ஏதங்
டூதியம்போக விடல். [கொண் 831

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். 832

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 833

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். 834

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. 835

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை. 837

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். 838

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். 839

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

## 85. புல்லறிவாண்மை

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு. 841

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியா து
மில்லை பெறுவான் தவம். 842

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. 843

வெண்மை யெனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம்யா மென்னுஞ் செருக்கு. 844

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். 845

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்றம் மறையா வழி. 846

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். 848

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. 849

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். 850

## 86. இகல்

இகலென்ப எல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். 851

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 852

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். 853

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னுந்
துன்பத்துள் துன்பங் கெடின். 854

இகலெதிர்சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். 855

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலும் நணித்து. 856

மிகன்மேவன் மெய்ப்பொருள் காணு ரிகன்மேவல்
இன்னு அறிவி னவர். 857

இகலிற் கெதிர்சாய்த லாக்கம் அதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. 858

இகல்காணு னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. 859

இகலானு மின்னுத வெல்லாம் நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு. 860

## 87. பகைமாட்சி

வலியார்க்கு மாறேற்ற லோம்புக ஓம்பா
மெலியார்மேன் மேக பகை. 861

அன்பில னான்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு. 862

அஞ்சு மறியா னமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு. 863

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. 864

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்
பண்பிலன் பற்றார்க் கினிது. [கான் 865

காணுச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணுமை பேணப் படும். 866

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற அடுத்திருந்து
மாணுத செய்வான் பகை. 867

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனு மேமாப் புடைத்து. 868

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. 870

## 88. பகைத்திறந்தெரிதல்

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. 871

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. 872

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு. 874

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற் றினொன்று. 875

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். 876

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 877

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. 878

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. 879

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

## 89. உட்பகை

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின். 881

வாள்போற் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு. 882

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும். 884

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும். 885

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது. 886

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. 887

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு
துட்பகை யுற்ற குடி. 888

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ள தாங் கேடு. 889

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. 890

## 90. பெரியாரைப் பிழையாமை

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. 891

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்
பேரா விடும்பை தரும். 892

கெடல்வேண்டிற் கேளாது செய்க அடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு. 893

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றா தா ரின்னா செயல். 894

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். 895

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். 896

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்
தகைமாண்ட தக்கார் செறின். [னாம் 897

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 898

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். 900

## 91. பெண்வழிச் சேறல்

மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழை
வேண்டாப் பொருளும் அது. [வார் 901

பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

இல்லாள்கட் டாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும். 903

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று. 904

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். 905

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். 906

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணு
பெண்ணே பெருமை புடைத்து. [டைப் 907

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர். 908

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். 909

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். [றும் 910

## 92. வரைவின் மகளிர்

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடி
ரின்சொ லிழுக்குத் தரும். [யா 911

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். 912

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்ட
லேதில் பிணந்தழீ இ யற்று. [றையி 913

பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்
ளாயு மறிவி னவர். [பொரு 914

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். 915

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். 916

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். 917

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. 918

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு. 919

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

## 93. கள்ளுண்ணாமை

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். 921

உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார். 922

ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. 923

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. [னும் 924

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். 925

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 926

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். 927

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். 928

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீ இயற்று. 929

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. 930

## 94. சூது

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. 931

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு. 932

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். 933

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். 934

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். 935

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். 936

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். 937

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. 938

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். 939

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். 940

## 95. மருந்து

மிகினுங் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. 941

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். 942

அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. 943

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. 944

மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு. 945

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். 946

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும். 947

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 948

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். 949

உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. 950

## 96. குடிமை

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை வியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. 951

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். 952

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. 953

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். 954

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. 955

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். 956

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. 957

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். 958

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். 959

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. 960

[வேண்டின்

## 97. மானம்

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். 961

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 962

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. 963

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. 964

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். 965

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. 966

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று. 967

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்
பீடழிய வந்த விடத்து. [தகைமை 968

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். 969

இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு. 970

## 98. பெருமை

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். 971

பிறப்பொக்கு மெல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். 973

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. 974

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். 975

சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. 976

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். 977

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து. 978

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். 979

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 980

## 99. சான்றாண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 981

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று. 982

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண். 983

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 985

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். 986

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. 987

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 988

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். 989

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. 990

## 100. பண்புடைமை

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. 991

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. 992

உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு. 993

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. 994

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாட றிவார் மாட்டு. 995

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். 996

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். 997

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை. 998

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். 999

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. 1000

## 101. நன்றியில்செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃ
செத்தான் செயக்கிடந்த தில். [துண்ணான் 1001

பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு 1002

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. 1003

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரா
னச்சப் படாஅ தவன். 1004

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில். 1005

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
கீதலியல்பிலா தான். [கொன் 1006

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. 1007

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. 1008

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா திட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. 1010

## 102. நாணுடைமை

கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற. 1011

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 1012

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு. 1013

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃ
பிணியன்றோ பீடு நடை. [தின்றேற் 1014

பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. 1015

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். 1017

பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து. 1018

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை. 1019

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. 1020

## 103. குடிசெயல்வகை

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். 1021

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டின்
நீள்வினையா னீளுங் குடி. 1022

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 1023

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. 1024

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. 1025

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். 1026

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. 1027

குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும். 1028

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்
குற்ற மறைப்பா னுடம்பு. [பத்தைக் 1029

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லா ளிலாத குடி. 1030

## 104. உழவு

சுழன்றுமேர்ப் பின்ன துலகம் அதனா
லுழந்து முழவே தலை. 1031

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. 1032

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர். 1034

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். 1035

உழவினர் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. 1036

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 1037

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு. 1038

செல்லான் கிழவ னிருப்பின் நிலம்புலந்
தில்லாளி னூடி விடும். 1039

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். 1040

## 105. நல்குரவு

இன்மையி னின்னாத தியாதெனின் இன்மையி
னின்மையே யின்னா தது. 1041

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். 1042

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னும் நசை. 1043

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை இளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். 1044

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்
சொற்பொருள் சோர்வு படும். [தார் 1046

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. 1048

நெருப்பினுட் டுஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. 1049

துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று. 1050

## 106. இரவு

இரக்க இரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. 1051

இன்ப மொருவற் கிரத்தல் இரந்தவை
துன்ப முறாஅ வரின். 1052

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. 1053

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. 1054

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. 1055

கரப்பிடும்பை யில்லாரைக் காணின் நிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். 1056

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. 1057

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 1058

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை. 1059

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. 1060

## 107. இரவச்சம்

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1061

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான். 1062

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். 1063

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. 1064

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். 1065

ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவி னிளிவந்த தில். 1066

இரப்ப னிரப்பாரை யெல்லாம் இரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. 1067

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும். 1069

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ இரப்ப
சொல்லாடப் போஒ முயிர். [வர் 1070

## 108. கயமை

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில். 1071

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். 1072

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். 1073

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். 1074

அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது. 1075

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். 1076

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. 1077

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். 1078

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். 1079

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. 1080

## 109. தகையணங்குறுத்தல்

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. 1081

நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. 1082

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. 1083

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். 1084

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து. 1085

கொடும்புருவங் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண். 1086

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில். 1087

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு. 1088

பிணையேர் மடநோக்கும் நாணு முடையாட்
கணியெவனோ ஏதில தந்து. 1089

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. 1090

## 110. குறிப்பறிதல்

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. 1091

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. 1092

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். 1093

யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். 1094

குறிக்கொண்டு நோக்காமை யல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். 1095

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும். 1096

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு. 1097

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும். 1098

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. 1099

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்
என்ன பயனு மில. [சொற்கள் 1100

## 111. புணர்ச்சிமகிழ்தல்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. 1101

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. 1102

தாம் வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு. 1103

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். 1104

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். 1105

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். 1106

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 1107

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. 1108

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். 1109

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. 1110

## 112. நலம்புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். 1111

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. 1112

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. 1113

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று. 1114

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. 1115

மதியும் மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். 1116

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. 1117

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. 1118

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. 1119

அனிச்சமு மன்னத்தின் றூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

## 113. காதற்சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். 1121

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. 1122

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம். 1123

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. 1124

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். 1125

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். 1126

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. 1127

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து. 1128

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
ஏதில ரென்னுமிவ் வூர். 1129

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். 1130

## 114. நாணுத்துறவுரைத்தல்

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. 1131

நோனா உடம்பு முயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. 1132

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். 1133

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. 1134

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர். 1135

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். 1136

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். 1137

நிறையரியர் மன்னளிய ரென்னாது காமம்
மறையிறந்து மன்று படும். 1138

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்
மறுகின் மறுகு மருண்டு. 1139

யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 1140

## 115. அலரறிவுறுத்தல்

அலரெழ ஆருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால். 1141

மலரன்ன கண்ணாள் அருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். 1142

உறாஅதோ ஊரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

கௌவையாற் கௌவிது

கௌவையாற் கௌவிது காமம் அதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து. 1144

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. 1145

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய். 1147

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காமம் நுதுப்பே மெனல். 1148

அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர். 1150

## 116. பிரிவாற்றாமை

செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. 1151

இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தாற் புணர்வு. 1152

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். 1153

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. 1154

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. 1155

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்
நல்குவ ரென்னும் நசை. 1156

துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை. 1157

இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. 1158

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. 1159

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். 1160

## 117. படர்மெலிந்திரங்கல்

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும். 1161

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். 1162

காமமும் நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. 1163

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில். 1164

துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர். 1165

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்கால்
றுன்ப மதனிற் பெரிது. 1166

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். 1167

மன்னுயி ரெல்லாந் துயிற்றி அளித்திரா
என்னல்ல தில்லை துணை. 1168

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய இந்நாள்
நெடிய கழியு மிரா. 1169

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண். 1170

## 118. கண்விதுப்பழிதல்

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. 1171

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன். 1172

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. 1173

பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்விநோ யென்க ணிறுத்து. 1174

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். 1175

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
தாஅ மிதற்பட் டது. 1176

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். 1177

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். 1178

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். 1179

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து. 1180

## 119. பசப்புறுபருவரல்

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. 1181

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு. 1182

சாயலும் நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. 1183

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. 1184

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது. 1185

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. 1186

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. 1187

பசந்தா ளிவளென்ப தல்லால் இவளைத்
துறந்தா ரவரென்பா ரில். 1188

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். 1189

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின். 1190

## 120. தனிப்படர்மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. 1191

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. 1192

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு. 1193

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின். 1194

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. 1195

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது. 1196

பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான். 1197

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். 1198

நசைஇயார் நல்கா ரெனினும் அவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. 1199

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. 1200

## 121. நினைந்தவர்புலம்பல்

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. 1201

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். 1202

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ உளரே யவர். 1204

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். 1205

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். 1206

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும். 1207

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. 1208

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. 1209

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. 1210

## 122. கனவுநிலையுரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். 1212

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். 1213

கனவினா னுண்டாகுங் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. 1215

நனவென ஒன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். 1216

நனவினா னல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது. 1217

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. 1218

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர். 1219

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். 1220

## 123. பொழுதுகண்டிரங்கல்

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1221

புன்கண்ணை வாழி மருண்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. 1222

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். 1223

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். 1224

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்
மாலைக்குச் செய்த பகை. [யான் 1225

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். 1226

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். 1227

அழல்போலும் மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. 1228

பதிமருண்டு பைத லுழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். 1230

## 124. உறுப்புநலனழிதல்

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். 1231

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். 1232

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 1233

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 1234

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 1235

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து. 1236

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. 1237

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 1238

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். 1239

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

## 125. நெஞ்சொடுகிளத்தல்

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. [தொன்றும் 1241

காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. 1242

இருந்துள்ளி யென்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில். 1243

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று. 1244

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். 1245

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துண
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு. [ராய் 1246

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. 1247

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. 1248

உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. 1249

துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின். 1250

## 126. நிறையழிதல்

காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1251

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்
யாமத்து மாளுந் தொழில். [தை 1252

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். 1253

நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காமம்
மறையிறந்து மன்று படும். 1254

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. 1255

செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர். 1256

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். 1257

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. 1258

புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு. 1259

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். 1260

## 127. அவர்வயின்விதும்பல்

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். 1261

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. 1262

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். 1263

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. 1264

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு. 1265

வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. 1266

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்
கண்ணன்ன கேளிர் வரின். [பேன்கொல் 1267

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. 1268

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. 1269

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால். 1270

## 128. குறிப்பறிவுறுத்தல்

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. 1271

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. [குப் 1272

மணியிற் றிகழ்தரு நூல்போல் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு. 1273

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. 1274

செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. 1275

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து. 1276

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினும்
முன்ன முணர்ந்த வளை. 1277

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து. 1278

தொடிநோக்கி மென்றோளும் நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. 1279

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணி
காமநோய் சொல்லி யிரவு. [னாற் 1280

## 129. புணர்ச்சிவிதும்பல்

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. 1281

தினைத்துணையு மூடாமைவேண்டும் பனைத்துணையுங்
காமம் நிறைய வரின். 1282

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். 1283

ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. 1284

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற்
பழிகாணேன் கண்ட விடத்து. [கொண்கன் 1285

காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. 1286

உய்த்த றறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து. 1287

இளித்தக்க இன்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. 1288

மலரினும் மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார். 1289

கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று. 1290

## 130. நெஞ்சொடுபுலத்தல்

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. 1291

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. 1292

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். 1293

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்
அறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. 1295

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்தவென் னெஞ்சு. 1296

நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு. 1297

எள்ளி னிளிவாமென் றெண்ணி அவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு. 1298

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி. 1299

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி. 1300

## 131. புலவி

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது. 1301

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். 1302

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1303

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. 1304

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. 1305

துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று. 1306

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. 1307

நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி. 1308

நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. 1309

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா. 1310

## 132. புலவி நுணுக்கம்

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்
நண்ணேன் பரத்தநின் மார்பு. [பர் 1311

ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து. 1312

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று. 1313

யாரினுங் காதலு மென்றேனா ஊடினாள்
யாரினும் யாரினு மென்று. 1314

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். 1315

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்
புல்லாள் புலத்தக் கனள். [றென்னைப் 1316

வழுத்தினா டும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று. 1317

தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ வென்று. 1318

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீர ராகுதி ரென்று. 1319

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. 1320

## 133. ஊடலுவகை

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. 1321

ஊடலிற் றோன்றுஞ் சிறு துனி நல்லளி
வாடினும் பாடு பெறும். 1322

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. 1323

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. 1324

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. 1325

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. 1326

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். 1327

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. 1328

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. 1329

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். 1330



# திருக்குறள்

## பாட்டு முதற் குறிப்பு அடைவு

### (எண் குறள் எண்ணாகும்)

### அ


அஃகாமை 178
அஃகியகன்ற 175
அகடாரார் அல்லல் 936
அகப்பட்டி 1074
அகரமுதல 1
அகலாதணுகா 691
அகழ்வாரை 151
அகனமர்ந்துசெய் 84
அகனமர்ந்தீதலி 92
அங்கணத்துள் 720
அசையியற்கு 1098
அச்சமுடையார்க் 534
அச்சமேகீழ்கள 1075
அஞ்சாமையல்லாற் 497
அஞ்சாமையீகை 382
அஞ்சுமறியா 863
அஞ்சுவதஞ்சாமை 428
அஞ்சுவதோரு 366
அடக்கமமரருள் 121
அடல்வேண்டு 343
அடற்றகையு 768
அடுக்கியகோடி 954
அடுக்கிவரினு 625
அடுத்ததுகாட்டு 706
அணங்குகொல் 1081
அணியன்றோ 1014
அந்தணரென்போ 30
அந்தணர்நூற்கு 543
அமரகத்தாற்றறுக்கு 814
அமரகத்துவன் 1027
அமிழ்தினும் 64
அமைந்தாங் கொழுகா 474
அரங்கின்றி 401
அரம்பொருத 888
அரம்போலு 997
அரிதரோதேற்ற 1153
அரிதாற்றி 1160
அரியகற்றசற்றார் 503
அரியவற்றுள் 443
அரியவென்றாகாத 537
அருங்கேடன் 210
அருஞ்செவ்வி 565
அருட்செல்வஞ் 241
அருமறைசோரு 847
அருமையுடைத்தென் 611
அரும்பயனாயு 198
அருவினையென்ப 483
அருளல்லதியாதெனி 254
அருளில்லார்க் 247
அருளென்னும் 757
அருளொடும் 755
அருள்கருதி 285
அருள்சேர்ந்த 243
அருள்வெஃகி 176
அலந்தாரை 1303
அலரெழவாருயிர் 1141
அலர்நாண 1149
அல்லலருளாள்வார்க் 245
அல்லவைதேய 96
அல்லற்பட்டு 555
அவர்தந்தார் 1182
அவர்நெஞ்சு 1291
அவாவில்லார்க்கு 368
அவாவினையாற்ற 367
அவாவென்ப 361
அவிசொரிந்து 259
அவையறிந்து 711
அவையறியார் 713
அவ்வித்தழுக்காறு 167
அவ்வியநெஞ்சத்தான் 169
அழக்கொண்ட 659
அழச்சொல்லி 795
அழல்போலும் 1128
அழிவதூஉம் 461
அழிவந்தசெய்யினு 807
அழிவினவைநீக்கி 787
அழிவின்றறை 764
அழுக்கற்று 170

அழுக்காறவா 53
(80) அழுக்காறுடையார்க் 165
அழுக்காறுடையான் 135
அழுக்காறென 168
அழுக்காற்றி 164
அளவல்லசெய் 289
(85) அளவளாவில்லா 523
அளவறிந்தார் நெஞ்ச 288
அளவறிந்து வாழா 479
அளவின்கண் நின்று 286
அளித்தஞ்சலென்றவர் 1154
(90) அறங்கூறானல்ல 181
அறஞ்சாரா 1047
அறஞ்சொல்லும் 185
அறத்தாறிது 37
அறத்தாற்றின் 46
(95) அறத்தான்வருவதே 39
அறத்திற்கே 76
அறத்தினூஉங் 32
அறம்பொருளின்ப 501
அறவாழியந்தணன் 8
(100) அறவினையாதெனிற் 321
அறவினையுமான்ற 909
அறனழீஇ 182
அறனறிந்தான்று 635
அறனறிந்துமூத்த 441
(105) அறனறிந்துவெஃகா 179
அறனாக்கம் வேண்டா 163
அறனியலான் 147
அறனிழுக்காது 384
அறனீனும் 754
(110) அறனெனப்பட்டதே 49
அறனோக்கியாற்றுங் 189
அறன்கடை 142
அறன்வரையான் 150
அறிகிலாரெல்லாரு 1139
(115) அறிகொன்று 638
அறிதோறறியாமை 1110
அறிந்தாற்றி 519
அறிவற்றங் 421
அறிவிலார்தாம் 843
(120) அறிவிலானெஞ்சு 842
அறிவினானாகுவ 325
அறிவினுளெல்லாந் 203
அறிவின்மை 841
அறிவுடையாராவ 427
(125) அறிவுடையாரெல் 430
அறிவுருவாராய்ந்த 684
அறுவாய்நிறைந்த 1117
அறைபறையன்னர் 1076
அற்காவியல் 333
(130) அற்றதறிந்து 944
அற்றமறைக்கும் 980
அற்றமறைத்தலோ 846
அற்றவரென்பா 365
அற்றாரழிபசி 226
(135) அற்றாரைத்தேறுத 506
அற்றார்க்கொன் 1007
அற்றாலளவறிந் 943
அற்றேமென் 626
அனிச்சப்பூ 1115
(140) அனிச்சமும் 1120
அன்பகத்தில்லா 78
அன்பறிவாராய்ந்த 682
அன்பறிவுதேற்ற 513
அன்பிலனான்ற 862
(145) அன்பிலாரெல்லாம் 72
அன்பிற்குமுண்டோ 71
அன்பின்வழியது 80
அன்பின்விழையார் 911
அன்பீனுமார்வ 74
(150) அன்புடை—லிவ் 992
அன்புடை—ல்வேந் 681
அன்புநாணொப்புரவு 983
அன்புமறனு 45
அன்புற்றமர்ந்த 75
(155) அன்பொரீஇ 601
அன்போடியைந்த 73
அன்றறிவாமென்று 336


## ஆ


ஆகாறளவிட்டி 478
ஆகூழாற் 371
(160) ஆக்கங்கருதி 463
ஆக்கமதர்வினாய் 564
ஆக்கமிழந்தேம் 563
ஆக்கமுங்கேடு 642
ஆங்கமைவெய்தி 740
(165) ஆபயன்குன்றும் 560
ஆயுமறிவினர் 918
ஆய்ந்தாய்ந்து 762

ஆராவியற்கை 370
ஆவிற்குநீரென்று 1066
(170) ஆள்வினையும் 1022
ஆற்றருமாற்றி 493
ஆற்றினளவறிந்துகற் 725
ஆற்றினளவறிந்தீக 477
ஆற்றின்வருந்தா 468
(175) ஆற்றினிலைதளர்ந் 716
ஆற்றினொழுக்கி 48
ஆற்றுபவர்க்கு 741
ஆற்றுவா—லிகழாமை 891
ஆற்றுவா—ல்பசி 225
(180) ஆற்றுவா—ல்பணிதல் 985


## இ


இகலானாம் 860
இகலிற்கெதிர் 858
இகலின்மிக 856
இகலெதிர் 855
(185) இகலென்ப 851
இகலென்னும் 853
இகல்காணான் 859
இகழ்ச்சியிற் 539
இகழ்ந்தெள்ளாது 1057
(190) இடமெல்லாம் 1064
இடனில்பருவத்து 218
இடிக்குந்துணை 447
இடிபுரிந்தெள் 607
இடிப்பாரையில்லாத 448
(195) இடுக்கட்படினு 654
இடுக்கண்கால் 1030
இடுக்கண்வரும் 621
இடும்பைக்கிடும்பை 623
இடும்பைக்கே 1029
(200) இடைதெரிந்து 712
இணரூழ்த்து 650
இணரெரிதோய் 308
இதனையிதனால் 517
இமைப்பிற்கரப் 1129
(205) இமையாரின் 906
இம்மைப்பிறப்பில் 1315
இயல்பாகும் 344
இயல்பினான் 47
இயல்புளி 545
(210) இயற்றலும் 385
இரக்கவிரத்தக்கார் 1051
இரத்தலினின்னாது 229
இரத்தலுமீதலே 1054
இரந்துமுயிர் 1062
(215) இரப்பனிரப்பாரை 1067
இரப்பாரையில்லாயி 1058
இரப்பான்வெகுளா 1060
இரவாரிரப்பார்க் 1035
இரவுள்ளவுள்ளம் 1069
(220) இரவென்னும் 1068
இருணீங்கி 352
இருநோக்கிவள் 1091
இருந்துள்ளி 1243
இருந்தோம்பி 81
(225) இருபுனலும் 737
இருமனப்பெண்டிர் 920
இருமைவகை 23
இருவேறுலகத்து 374
இருள்சேரிரு 5
(230) இலக்கமுடம்பு 627
இலங்கிழா 1252
இலமென்றசைஇ 1040
இலமென்றுவெஃகு 174
இலர்பலராகிய 270
(235) இலனென்றுதீய 205
இலனென்னும் 223
இல்வாழ்வான் 41
இல்லதென் 53
இல்லாரை 752
(240) இல்லாளையஞ்சு 905
இல்லாள்கண் 903
இல்லைதவறு 1321
இவறலுமாண்பு 432
இழத்தொறூஉம் 640
(245) இழிவறிந்துண் 946
இழுக்கலுடையுழி 415
இழுக்காமை 536
இழைத்ததிகவாமை 779
இளித்தக்க 1288
(250) இளிவரின் 970
இளைதாகமுள் 879
இளையரினமுறைய 698
இறந்தமைந்த 900
இறந்தவெகுளி 531
(255) இறந்தாரிறந்தா 310
இறப்பேபுரிந்த 977

இறலீனுமெண்ணாது 180
இறுதிபயப்பினும் 690
இறைகடி 564
(260) இறைகாக்கும் 547
இற்பிற—கண்ணல்லது 951
இற்பிற—கண்ணே 1044
இனத்தாற்றி 568
இனம்போன்று 822
(265) இனியவுளவாக 100
இனியன்ன 1294
இணைத்துணைத்து 87
இணையரிவர் 790
இன்கணுடைத் 1152
(270) இன்சொலாலீத் 387
இன்சொலாலீரம் 91
இன்சொலினிது 99
இன்பங்கடல் 1166
இன்பத்து—பயக்கும் 854
(275) இன்பத்து—விழையா 629
இன்பமிடையறா 369
இன்பமொருவற்கு 1052
இன்பம்விழை—இடும்பை 628
இன்பம்விழை—வினை 615
(280) இன்மையிடும்பை 1063
இன்மையினி—ததியா 1041
இன்மையினி—துடைமை 558
இன்மையுள் 153
இன்மையென 1042
(285) இன்மையொருவற்கு 988
இன்றியமையாச் 961
இன்றும்வருவது 1048
இன்னாசெ—யை 314
இன்னாசெ—ர்க்கும் 987
(290) இன்னாதிரக்க 224
இன்னாதினனில் 1158
இன்னாமை 630
இன்னாவென 316

ஈ

ஈட்டமிவரி 1003
(295) ஈதலிசைபட 231
ஈத்துவக்குமின்பம் 228
ஈர்ங்கைவிதிரார் 1077
ஈவார்கணென் 1059
ஈன்றபொழுதிற் 69
(300) ஈன்றாண்முகத்தே 623
ஈன்றாள்பசிகாண் 656

உ

உடம்பாடிலாதவர் 890
உடம்பொடுயிர் 1122
உடுக்கையிழந்த 788
(305) உடுப்பதூஉம் 1079
உடைசெல்வம் 939
உடைத்தம்வலி 473
உடைமையுள் 89
உடையரெனப் 591
(310) உடையார்முன் 395
உட்கப்படாஅர் 921
உட்பகையஞ்சி 883
உணர்வதுடையார் 717
உணலினுமுண்ட 1326
(315) உண்டார்கணல் 1090
உண்ணற்கள்ளை 922
உண்ணாதுநோற்பார் 160
உண்ணாமையுள்ள 255
உண்ணாமைவேண்டும் 257
(320) உதவிவரைத்தன்று 105
உப்பமைந்தற்றால் 1302
உயர்வகலந்திண்மை 743
உயிருடம்பினீங்கியார் 330
உயிர்ப்பவுளரல்லர் 880
(325) உய்த்தலறிந்து 1287
உரமொருவற்குள்ள 600
உரனசைஇஉள்ளம் 1263
உரனெனுந் 24
உருவுகண்டெள்ளா 667
(330) உருளாயமோவாது 933
உரைப்பாருரைப் 232
உலகத்தாருண்டெனல் 850
உலகத்தோடொட்ட 140
உலகந்தழீஇய 425
(335) உலைவிடத்தூறஞ்சா 762
உவக்காணெங் 1185
உவந்துறைவர் 1130
உவப்பத்தலைகூடி 364
உழந்துழந்துண்ணீ 1177

(340) உழவினார்கைம்மடங்கி 1036
உழுதுண்டுவாழ்வாரே 1033
உழுவாருலகத்தார்க் 1032
உழைப்பிரிந்து 530
உளபோன்முகத் 574
(345) உளரெனினுமில்லா 730
உளரென்னுமாத்திரை 406
உளவரைதூக்காத 480
உள்ளக்களித்தலும் 1281
உள்ளத்தார்காத 1249
(350) உள்ளத்தாலுள்ளலு 282
உள்ளத்தாற்பொய்யா 291
உள்ளமிலாதவர் 598
உள்ளமுடைமை 592
உள்ளம்போன்றுள்வழி 1170
(355) உள்ளற்கவுள்ளஞ் 798
உள்ளியதெய்த 540
உள்ளியவெல்லா 309
உள்ளினுந்தீராப் 1201
உள்ளினேனென்றே 1316
(360) உள்ளுவதெல்லா 596
உள்ளுவன்மன்யானுரை 1184
உள்ளுவன்மன்யான்மற 1125
உள்ளொற்றியுள்ளார் 927
உறங்குவதுபோலு 339
(365) உறன்முறையா 885
உறாஅதவர்க்கண்ட 1292
உறாஅதவர்போற் 1096
உறாஅதோவூரறிந்த 1143
உறாஅர்க்குறுநோ 1200
(370) உறினட்டறினொரு 812
உறினுயிரஞ்சா 778
உறுதோறுயிர் 1106
உறுபசியுமோவா 734
உறுபொருளுமொல்கு 756
(375) உறுப்பமைந்தூறஞ்சா 761
உறுப்பொத்தல் 993
உறுவதுசீர்தூக்கு 813
உறைசிறியாருண் 680
உற்றநோய்நீக்கி 442
(380) உற்றநோய்நோன்ற 261
உற்றவன்தீர்ப்பான் 950
உற்றானளவும்பிணி 949


## ஊ


ஊக்கமுடையா 486
ஊடலிற்றோற்றவர் 1327
(385) ஊடலிற்றோன்றுஞ் 1322
ஊடலினுண்டாங் 1307
ஊடலுணங்கவிடு 1310
ஊடலுணர்தல்புணர்த 1109
ஊடற்கட்சென்றேன் 1284
(390) ஊடிப்பெறுகுவங் 1328
ஊடியவரையுணரா 1304
ஊடியிருந்தேமாற் 1312
ஊடுகமன்னோ 1329
ஊடுதல்காமத்திற் 1330
(395) ஊணுடையெச்ச 1012
ஊதியமென்ப 797
ஊரவர்கௌவை 1147
ஊருணிநீர்நிறைந் 215
ஊழிபெயரினுந் 989
(400) ஊழிற்பெருவலி 380
ஊழையுமுப்பக்கங் 620
ஊறொராலுற்றபி 662
ஊனைக்குறித்த 1013


## எ


எச்சமென்றென் 1004
(405) எட்பகவன்ன 889
எண்சேர்ந்தநெஞ்சத் 910
எண்ணித்துணிக 467
எண்ணியவெண்ணியாங் 666
எண்ணியாரெண்ண 494
(410) எண்ணென்பவேனை 392
எண்பதத்தாலெய்த 991
எண்பதத்தானோரா 548
எண்பொருளவாக 424
எதிரதாக்காக்கு 429
(415) எந்நன்றிகொன்றார் 110
எப்பொருளுமோரார் 695
எப்பொருளெத்தன்மை 355
எப்பொருள்யார்யார் 423
எய்தற்கரியது 489
(420) எரியாற்சுடப்படினு 896
எல்லாப்பொருளு 746

எல்லார்க்குநன்றாம் 125
எல்லார்க்குமெல்லா 582
எல்லாவிளக்கும் 299
(425) எல்லைக்கணின்றார் 806
எவ்வதுறைவதுலக 426
எழுதுங்கால்கோல் 1285
எழுபிறப்புந்தீயவை 62
எழுமையெழுபிறப்பு 107
(430) எளிதெனவில்லிறப்பா 145
எள்ளாதவெண்ணி 470
எள்ளாமைவேண்டுவா 281
எள்ளினிளிவாமென் 1298
எற்றிற்குரியர் 1080
(435) எற்றென்றிரங்குவ 655
எனைத்தானுநல்லவை 416
எனைத்தானுமெஞ்ஞா 317
எனைத்திட்பமெய்தி 670
எனைத்துங்குறுகுதல் 820
(440) எனைத்துணையராயினு 144
எனைத்துநினைப்பினு 1208
எனைத்தொன்றினிதே 1202
எனைப்பகையுற்றாரு 207
எனைமாட்சித்தாகியக் 750
(445) எனைவகையாற் 514
என்பிலதனைவெயில் 77
என்றுமொருவுதல் 652
என்னைமுன்னில்லன்மின் 771


## ஏ


ஏதம்பெருஞ்செல்வம் 1006
(450) ஏதிலாராரத்தமர் 838
ஏதிலார்குற்றம் 190
ஏதிலார்போலப் 1099
ஏந்தியகொள்கையார் 899
ஏமுற்றவரினுமேழை 873
(455) ஏரினுநன்றாலெரு 1038
ஏரினுழாஅருழவர் 14
ஏவவுஞ்செய்கலான் 848


## ஐ


ஐந்தவித்தானாற்ற 25
ஐயத்தினீங்கித் 353
(460) ஐயப்படாஅதகத்த 702
ஐயுணர்வெய்தியக் 354


## ஒ


ஒட்டார்பின் 967
ஒண்ணுதற்கோஒ 1088
ஒண்பொருள்காழ்ப்ப 760
(465) ஒத்ததறிவானுயிர் 214
ஒப்புரவினால்வருங் 220
ஒருதலையானின்னாது 1196
ஒருநாளெழுநாள் 1269
ஒருபொழுதும்வாழ்வ 337
(470) ஒருமைக்கட்டான் 398
ஒருமைச்செயலாற் 835
ஒருமைமகளிரே 974
ஒருமையுள்ளாமை 126
ஒலித்தக்காலென்னா 763
(475) ஒல்லுங்கருமமுடற்று 818
ஒல்லும்வகையால் 33
ஒல்லும்வாயெல்லாம் 673
ஒல்வதறிவதறிந்து 472
ஒழுக்கத்தினெய்துவர் 137
(480) ஒழுக்கத்தினொல்கார் 136
ஒழுக்கத்துநீத்தார் 21
ஒழுக்கமுடைமை 133
ஒழுக்கமுடையவர்க் 139
ஒழுக்கமும்வாய்மை 952
(485) ஒழுக்கம்விழுப்பந் 131
ஒழுக்காறாக்கொள்க 161
ஒளியார்முன்னொள் 714
ஒளியொருவற்குள்ள 971
ஒறுத்தாரையொன்றா 155
(490) ஒறுத்தார்க்கொரு 156
ஒறுத்தாற்றும்பண்பு 579
ஒற்றினொற்றிப் 583
ஒற்றுமுரைசான்ற 581
ஒற்றொற்றித்தந்த 588
(495) ஒற்றொற்றுணராமை 589
ஒன்றாகநல்ல 323
ஒன்றாமையொன்றி 886
ஒன்றாவுலகத்துயர் 233
ஒன்றானுந்தீச்சொற் 128
(500) ஒன்றெய்திநூறிழக்கு 932
ஒன்னார்த்தெறலு 264

## ஓ

ஓஓதல்வேண்டு 653
ஓஓவினிதேயெமக் 1176
ஓதியுணர்ந்தும் 329
ஓம்பினமைந்தார் 1155
(505) ஓர்த்துள்ளமுள்ள 357
ஓர்ந்துகண்ணோடா 541

## க

கடலன்னகாம 1137
கடலோடாகால்வ 496
(510) கடனறிந்துகாலங் 687
கடனென்பநல்லவை 981
கடாஅக்களிற்றின் 1087
கடாஅவுருவொடு 585
கடிதோச்சிமெல்ல 562
(515) கடிந்தகடிந்தொரார் 658
கடுஞ்சொல்லன் 566
கடுமொழியுங்கையி 567
கடைக்கொட்கச் 663
கணைகொடிதியாழ் 279
(520) கண்களவுகொள்ளுஞ் 1092
கண்டதுமன்னுமொ 1146
கண்டாங்கலுழ்வ 1171
கண்டாருயிருண்ணு 1084
கண்டுகேட்டுண்டுயிர்த் 1101
(525) கண்ணிறைந்தகாரிகை 1272
கண்ணிற்கணிகலங் 575
கண்ணிற்றுனித்தே 1290
கண்ணின்பசப்போ 1240
கண்ணின்றுகண்ணற 184
(530) கண்ணுங்கொளச்சேறி 1244
கண்ணுடையரென்பவர் 393
கண்ணுள்ளார்காத 1127
கண்ணுள்ளிற்போகா 1126
கண்ணொடுகண்ணிணை 1100
(535) கண்ணோட்டத்துள்ள 572
கண்ணோட்டமில்லவ 577
கண்ணோட்டமென்று 571
கதங்காத்துக்கற்றட 130
கதுமெனத்தாநோக்க 1173
(540) கயலுண்கண்யானிரப்ப 1212
கரத்தலுமாற்றேனிந் 1162
கரப்பவர்க்கியாங்கு 1070
கரப்பிடும்பையில்லா 1056
கரப்பிலாநெஞ்சில் 1053
(545) கரப்பிலார்வையகத் 1055
கரப்பினுங்கையிகந் 1271
கரவாதுவந்தீயுங் 1061
கருமஞ்சிதையாமற் 578
கருமஞ்செயவொருவ 1021
(550) கருமணியிற்பாவாய் 1123
கருமத்தானாணுதல் 1011
கருவியுங்காலமு 631
கலங்காதுகண்ட 668
கலந்துணர்த்துங் 1246
(555) கல்லாதமேற்கொண் 845
கல்லாதவரிற்கடை 729
கல்லாதவருநனி 403
கல்லாதானொட்பங் 404
கல்லாதான்சொற்கா 402
(560) கல்லார்ப்பிணிக்குங் 570
கல்லாவொருவன் 405
கல்லான்வெகுளுஞ் 870
கவறுங்கழகமுங் 935
கவ்வையாற்கவ்விது 1144
(565) கழாஅக்கால்பள்ளி 840
களவினாலாகிய 283
களவின்கட்கன்றிய 284
களவென்னுங்காரறி 287
களித்தறியேனென்பது 928
(570) களித்தானைக்காரணங் 929
களித்தொறுங்கள் 1145
கள்வார்க்குத்தள்ளு 290
கள்ளுண்ணாப்போழ்தில் 930
கறுத்தின்னாசெய் 312
(575) கற்கக்கசடற 391
கற்றதனாலாய 2
கற்றறிந்தார் 717
கற்றாருட்கற்றார் 722
கற்றார்முன் 724
(580) கற்றிலனாயினும் 414
கற்றீண்டு 356
கற்றுக்கண்ணஞ்சா 686
கனவினான் 1214
கனவினும் 819

